# ஸ்ரீராமானுஜன் 204, 205







சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபாமூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர்

| | | |
|---|---|---|
| ஸம்புடம் 17,18 | 1965 டிஸம்பர்மீ & 1966 ஜனவரிமீ<br>விசுவாவசு௵ மார்கழி, தைமீ | ஸஞ்சிகை 12,1 |


## திருவாய்மொழி நூற்றந்தாதி—85

இன்னுயிர்மால் தோன்றினதிங் கென்னெஞ்சி லென்று * கண்ணால்
அன்றவனைக் காணவெண்ணி ஆண்பெண்ணாய்—* பின்னையவன்
தன்னைநினைவிப்பவற்றால் தான்தளர்ந்த மாறனருள் *
உன்னுமவர்க் குள்ளமுருகும்.

| | | | |
|---|---|---|---|
| இன் உயிர் மால் | எனக்குத் தாரகனான எம்பெருமான் | ஆண் பெண் ஆய் | ஆண்தன்மை குலைந்து பெண் தன்மை யடைந்து |
| இங்கு தோன்றினது | இப்போது ஸேவை ஸாதித்தது | பின்னை அவன் தன்னை நினைவிப்பவற்றால் | மேலும் அப்பெருமானை நினைப்பூட்டுகின்ற மேகம் முதலியவற்றால் |
| என் நெஞ்சில் என்று | எனது நெஞ்சிலேயன்றி ப்ரத்யக்ஷமாகவில்லையேயென்று வருந்தி | தான் தளர்ந்த மாறன் அருள் | தளர்ச்சியடைந்த ஆழ்வாருடைய க்ருபையை |
| அன்று அவனை கண்ணால் காண எண்ணி | அப்போதே அப்பெருமானைக் கண்ணாரக்கண் டநுபவிக்க விரும்பி | உன்னுமவர்க்கு | அநுஸந்திப்பவர்களுக்கு |
| | | உள்ளம் உருகும் | நெஞ்சு குழையும். |

* * *—கீழ்த்திருவாய்மொழியாகிய * மையார் கருங்கண்ணியில் உண்டான அநுபவம் மாநஸாநுபவமாகையாலே அவனை பாஹ்யகரணங்களாலே அநுபவிக்க விரும்பி அப்போதே அந்த விருப்பம் நிறைவேறப் பெறாமையாலே ஒரு பிராட்டி தசையையெய்தி ஸ்மாரக பதார்த்தங்களாலே [பக்ஷிஸமூகங்களாலும் மேகஸமூஹங்களாலும்] ஆழ்வார் தளர்ந்தபடியைக் கூறுவதாம் * இன்னுயிர்ச்சேவலும் பதிகம்.

கீழ் *பண்டைநாளாலே யென்கிற பதிகத்தில் ஆழ்வார்க்கு ஒரு கிலேசம் நிகழ்ந்தது; அதை ஒருவாறு ஸமாதானப்படுத்த ஸர்வேச்வரன் 'ஆழ்வீர்! நான்

நாராயணனன்றோ. உமக்கு எல்லாவுறவின் காரியமும் குறையறச் செய்து தருவேன்' என்று சொல்ல, அவனுடைய சீலத்தில் கால்தாழ்ந்து ஒருபடியாய்ச் சென்றது மூன்றும் பதிகம். தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொல்லும்படி உம்மை யாக்கினேனே, இது உமக்கு ஸாமான்யமாகக் கிடைக்கக் கூடிய பேறு? என்று எம்பெருமான் இதனை நினைப்பூட்ட அதனால் ஒருவாறு களிப் படைந்து தரித்துநின்றார் கீழ்ப்பதிகத்திலே. அங்கு, "தேவர்கட்கெல்லாம் கருவாகிய கண்ணனைக் கண்டுகொண்டேன்" என்றருளிச்செய்தவர்க்கு பாஹ்யஸம்ச்லேஷத் திலே அபேக்ஷை பிறந்தது. "இவர்க்கு இன்னமும் விடாயைப் பிறப்பித்து முகங் காட்டவேணும்" என்று எம்பெருமானிருக்கையாலே அவன் தாமதிக்கிறான். ஆழ்வார்க்கோ தளர்ச்சி மிகுகிறது. தளர்ந்தவர்கள் தரிப்பதற்குப் பலவழிகளுண்டே; லௌகிக பதார்த்தங்களிலே நெஞ்சைச் செல்லவிட்டு அந்த அந்யபரதையாலே ஒருவாறு தரிப்போம் என்றும் அவனோடு போலியான பொருள்களைக் கண்டாகிலும் தரிப்போமென்றும் நினைத்து லௌகிக பதார்த்தங்களிலே கண்வைத்தார். ஒரு வாறு தரிப்பதற்குச் செய்த அச்செயல் ஆச்வாஸ ஹேதுவாகாமல் ஸ்மாரகமாய் பாதிக்கத் தொடங்கிற்று. உலகில் எந்தப் பொருளைக் கண்டாலும், அவனுயிருக்கிற படியை நினைத்தோ, அவனோடு ஸம்பந்தம் பெற்றிருக்கிறபடியை நினைத்தோ அவனுக் குப் போலியாய் இருக்கிறபடியை நினைத்தோ தளருமவரன்றோ ஆழ்வார். கீழ் நாலாம் பத்தில் *மண்ணை யிருந்து துழாவி* என்னும் பதிகத்திலே பட்டபாடு தெரியுமே. ஆக லௌகிக பதார்த்தங்கள் அவனை நினைப்பூட்டி நலிய அவற்றால் நோவுபடுகிற படியை அந்யாபதேசத்தாலே யருளிச் செய்வது * இன்னுயிர்ச் சேவலும் பதிகம்.

எம்பெருமானோடே கலந்து பிரிந்தவொரு பிராட்டி, தன்னாற்றாமையாலே அவனோடு போலியான பதார்த்தங்களைக்கண்டு கொண்டாகிலும் தரிப்போமென்று கொண்டு ஒரு பூஞ்சோலைக்குப் புறப்பட, அங்குண்டான குயில், மயில் முதலானவை அவனுடைய பேச்சையும் வடிவையும் நினைப்பூட்டி நலிய. இவை தாமாக நலிகின்றன வல்ல; நம்மை முடிக்கவேணுமென்று பார்த்த எம்பெருமானாலே ஏவப்பட்டு நலிகின்ற வித்தனை' என்றெண்ணி, அக்குயில் முதலானவற்றை நோக்கி 'உங்களுக்கு என்னை நலிய நினைவாகில் இவ்வளவு பாரிப்பு வேணுமோ? என்னுயிரை நானே கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன் என்று சொல்லியும் அவனுடைய திருக்குணங்களை ஒருவாறு நினைத்துத் தரித்தும் போருகிறது *இன்னுயிர்ச் சேவலுமென்கிற திருவாய்மொழி. அதன் ஸாரம் இந்த வெண்பாவில் அடங்கியுள்ளது. ... ... *

## 25—8—65 வரை ஸ்ரீராமநுஜனுக்குச் சந்தா செலுத்தியவர்கள்.

187 Sri M. N. Chari, Calcutta

187 ,, R. Purushottaman, Chamarajanagar

188 Sri Vidvan R. Kannan, Srirangam

189 ,, K. R. Narasimhan, Kallakkuruchi

(மற்றது மேலே காண்க.)

## — கடிதங்கள் —

DR. V. RAMA IYENGAR, Bangalore.

### (முதல் கடிதம்)

*ஸ்ரீமதே ராமாநுஜாய நம:*

ஸ்ரீமான் உ. வே. ஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் டாக்டர், ராம அய்யங்கார் அநேககோடி தெண்டன் ஸமர்ப்பித்த விண்ணப்பம். உபயகுசலோபரி. நான் இன்னும் சென்னை திரும்பவில்லை. 40 ஆண்டுகளாகத் தொழிலில் அல்லும் பகலும் உழைத்து அலுத்துப்போய், மிஞ்சியிருக்கும் வாழ்நாளையாவது வீண் அடிக்க விரும்பாமல், ஆத்மீகவித்தையில் காலத்தைக்கழிக்க விரும்பி, இங்கேயே தங்கி, தேவரீர் அநுக்கிரகித்த க்ரந்தங்களை யெல்லாம் நோக்கிக்கொண்டு பரவசமாகிக் கிடந்து நிற்கிறேன். என் சிறு வயதிலேயே ஸ்வாமியுடன் எனக்குப் பரிசயம் ஏற்பட்டும், ஸ்வாமியின் பாண்டித்யத்தை, அவ்வப்போது சிறிதளவு ரஸித்து அநுபவித்திருந்தும் ஸ்வாமியின் அரிய பெரிய செயல்களில், அதிக பற்று ஏற்பட இப்பொழுதுதான் வாய்ப்பு கிடைத்தது. ஸ்வாமியின் உழைப்பும், நிறைவேற்றமும் அதிசயமானது. தேவரீரை ஒரு அவதார புருஷர் என்றே எண்ண வேண்டியிருக்கிறது. தற்காலத்தில் நம்ம தர்சனத்திற்கு உழைப்பவர்களில் ஸ்வாமிக்கு ஒப்பாரும் மிக்காரும் நினைக்கக்கூட ப்ரஸக்தி இல்லை. என்னே !! என்னே !! என்று மிகமிகமகிழ்ந்து மயங்கிக் கிடக்கிறேன். ஒரு ஆயுள்காலத்தில் எத்தனை வெளியீடுகள், எத்தனைவித வெளியீடுகள், எத்தனை வ்யாக்யானங்கள், இதுவும் சாத்தியமா என்று ப்ரத்யக்ஷத்தில் சந்தேகிக்கின்றேன். தேவரீர் நம் தர்சனத்திற்குச் செய்திருக்கும் மஹோபகாரத்திற்கு ஒரு கோயில் கட்டினாலும் போதாது. தற்காலத்திலிருப்பவர்களால் அதை விலைமதிக்கவும் முடியாது. நம்ம பூர்வாசாரியர்கள் வைதிக பரம்பரையில், எந்நாளும் ஒரு முக்கிய ஸ்தானம் தேவரீருடைய சேவையால் Reserve பண்ணி வைத்துக் கொண்டு விட்டீர். நான் இப்பொழுது இப்படி எழுதுவது, முகஸ்துதி அல்ல. புகழ்ந்தாலும் பிழையாகாது. அதிசயமும் ஆகாது. நான் அநுபவித்த அநுபவம், ஸ்வாமியின் அருளிச்செயல்களை, சிலவற்றை என் சிறு புத்திக்கு எட்டினமட்டும் படித்துவிட்டு உணர்ச்சியை அடக்கமுடியாமல், ஸத்யமாக இக்கடிதத்தை எழுத என்னைத் தூண்டியது. நம்மாழ்வார்க்குப் பிற்காலத்தில் திருவாய்மொழியே மறைந்துகிடந்து, நாதமுனிகளால் புத்துயிர் அளிக்கப்பட்டது என்பது ஸுப்ரஸித்தம். இக்காலத்தில் கலி முன்னேறிவரும் காலத்தில், வைஷ்ணவ ஸ்ரீயைக் காப்பாற்றி இன்னும் என்றும் மங்காமலிருக்க ஸ்வாமி எவ்வளவு எத்தனம், எத்தனை ப்ரயாஸம் எடுத்துக் கொண்டு இருக்கிறீர். எவ்வளவு சாஸ்த்ர ஞானம்! எவ்வளவு ப்ரவசனம்! யமுனைத் துறைவர் சோழராஜ ஆஸ்தானத்தில் 'ஆசைலாத் அத்ரிகந்யா..............ம்ருக்யதாம் மாத்ருசோங்ய:' என்று மார்தட்டினாரே அம்மாதிரி தேவரீர் மார்தட்டிச் சொல்லத் தகும். சிறியேன், அபாத்திரமாயிருப்பவன், அடியேன் மேன்மேலும் எழுதப் புகுந்தால் அஸம்பாவிதமாகிவிடும் என்று அச்சப்படுகிறேன். வாசகதோஷம் க்ஷமிக்கவும்.

ஸ்வாமியின் மனோரதங்கள் எல்லாம் நன்கு நிறைவேறியதா? காலம் ஓடிக் கொண்டிருக்கிறதே! ஸ்வாமிக்கு ஏதாவது மனக்குறை இருக்கும்பக்ஷத்தில்

ஸ்வாமியை அண்டி நிற்பவர்கள் இவைகளை எல்லாம் பூர்த்தி பண்ணிவைப்பது சிறந்த கடமையாகும். இந்த சேவையில் சிறியேனுன அடியேனும் சிறிதளவாவது பங்குகொண்டு உஜ்ஜீவிக்க விரும்புகிறேன். ஸ்வாமி பாங்காய் எள்ளியிருக்கிறீரா? ஸ்வாமி இடைவிடாது செய்துகொண்டு இருக்கும் உயர்ந்த தொண்டும் உற்சாகமுமே, தேஹத்தை பலஹீனம் அடையவிடாது என்று நம்புகிறேன். ஸ்வாமியின் வெளியீடுகள் என்னிடம் அநேகமிருக்கின்றன. அவைகளைப் பரிசயம் பண்ணிக்கொள்ள இப்போதுதான் தக்க வாய்ப்பு பெற்றுள்ளேன். என் சிற்றறிவுக்கு அவைகள் ப்ரம்மாண்டமாக இருந்தாலும் அவைகளின் மந்தமாருதம் சற்று என்மேல் பட்டால் என்வாழ்வு புனிதமடையும் என்று மனப்பூர்வமாக நம்புகிறேன். ஸ்வாமியை இந்த ஊருக்கு அழைக்க ஆசைப்படுகின்றேன். ஆனுல் ஸ்வாமிக்கு எத்தனையோ ஜோலி. மேலும் ஸ்வாமியின் தேஹஸ்திதி இப்போது எப்படி இருக்கின்றதோ?— இதை அறிய விரும்புகின்றேன். இன்று ஸ்வாமிக்கு இக்கடிதம் எழுத நேர்ந்தது ஒரு சுபதினம் என்றே மனப்பூர்த்தியாய் சந்தோஷிக்கின்றேன். ஸ்வாமியின் விசேஷ கடாக்ஷத்தை விரும்புகின்றேன். பதில் க்ருபை பண்ணவேண்டும்.

தாஸன்,

9—7—65. டாக்டர் ராம அய்யங்கார்.

(இரண்டாவது கடிதம்)

Dr. V. RAMA IYENGAR, Bangalore. 21—8—65.

ஸ்ரீமதே ராமாநுஜாய நமः

ஸ்ரீமான் உவே. ஸ்வாமி ஸந்நிதியில் அடியேன் தானும் தடக்கையும் கூப்பி தண்டம் ஸமர்ப்பித்த விண்ணப்பம். நேற்று ராத்ரி தேவரீருடைய இருநூறு உபந்யாஸ மாலையைப் படித்துக்கொண்டு இருந்தேன். இன்று காலை எழுந்தவுடன் ஸ்வாமிக்கு ஒரு கடிதம் எழுதி, விண்ணப்பிக்க ஆசைப்பட்டேன். உடனே வரைந்ததை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். வாசக தோஷம் நிரம்பி யிருக்கும். எனினும் என் ஆவலைத் தீர்த்துக் கொண்டேன்.

**"ஸ்ரீ காஞ்சீ மஹாவித்வான், ஸ்ரீமான் P. B. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி பாதாரவிந்தங்களில் ஸமர்ப்பிக்கப்படும் ஒரு அன்பனின் சிறு கட்டுரை".**

ச்ரியப்பதியின் ஸ்வரூபமும் ஸ்வபாவமும் விசித்திரமானவை. அற்புதமானவை, ஆனந்தமயமானவை. அந்தப் பரமனின் சங்கல்பத்திற் கேற்ப, கால வரம்புக்கு உட்பட்டு, உலகங்களில் எல்லாவித ஸம்பவங்களும் நிகழ்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன. இவைகள் அவன் லீலையின் மகிமைகள், பரிணமங்கள், இது மட்டுமல்லாமல், உலக அமைப்பில், ஒவ்வொரு வியக்திக்கும், அவர்கள் நிலைக்குச் சேர, ப்ரத்யேக ஸ்தானங்களை அமைத்து, வாழ்க்கையை ஸபலம் ஆக்கிக்கொள்ள வாய்ப்புகளையும் அளிக்கின்ருன். அவன் ஸாம்ராஜ்யத்தில் எதற்கும் யாவற்கும், தனி ஸ்தானங்கள், தனி வாழ்வுகள் இருப்பது மல்லாமல், தனி சிறப்புகள், தனி மேன்மைகள், தோன்றும்படி சிலரை அநுக்ரஹிக்கின்ருன். உலக அநுபவத்திற்

காகவும், உலக அனுகூலத்திற்காகவும், உலக ஆனந்தத்திற்காகவும், சிலருக்கு தன் பூரண கடாக்ஷத்தால், சில தனி சலுகைகளையும் அளிக்கின்றான். இந்த முக்யத்வம் பெற்றவர்களையே நாம் மஹான்கள் என்று அழைக்கின்றோம். இவர்கள், சுயநல மற்று, உலக சேவைக்காகவே பிறந்தவர்கள், உலக சேவையிலேயே தங்கள் காலத்தைக் கழிப்பவர்கள், மனோவாக்கு காயம், எல்லாவற்றையும் பிறருக்காகச் செலவிட்டு, உஜ்ஜீவிக்கும் கோஷ்டி, ஒரு தனி கோஷ்டி. இந்த கோஷ்டியில் முன்னணியில் நிற்பவர், நம் மஹா வித்வான் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி. ஸகல சாஸ்திரங்களையும், உபய வேதாந்தங்களையும் இளமையிலேயே கசடறக் கற்று, அவைகளில் பாண்டித்யம் பெற்று, கற்றதைப் பிறருக்கு ஓயாது தானம் செய்வதையே, தன் தொழிலாக மேற்கொண்டவர் இந்த உத்தம ஸ்வாமி. இவர் நம்ம ஸ்ரீவைஷ்ணவ தரிசன பிரவசனத்திற்காகவே பிறந்தவர் என்று சொன்னால் இது மிகையாகாது. நம்ம பூர்வாசாரியர்கள் அநுஷ்டித்துக் காட்டிய முறையையே பின்பற்றுபவர். அவர்கள் கைப்பற்றிய லட்சியத்தையே இவரும் நம் வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டவர். வட இமயம் முதல் தென் கன்யாகுமரி வரையில் வட நாடும் தென்னாடும் ஒன்று சேர்ந்து மதிப்பிட்டுப் புகழும் பிரவசன சக்ரவர்த்தியாய் விளங்குபவர் இவர். வடமொழி வேதத்தையும், அருளிச் செயல்களையும் சீர் குலையாமல், உண்மையான வியாக்யானங்களுடனும், தெளிவான விரிவுரைகளுடனும் யாவரும் எளிதில் அறியக் கூடிய முறையில் பிரசுரிக்கும் திறமையை இந்த ஸ்வாமி பூர்ணமாய் பெற்று இருக்கிறார். சாஸ்திர ஸம்பந்தமான எந்த விஷயத்தையும் அஞ்சா நெஞ்சுடன் எந்த ஸபையிலும் எந்த சந்தர்ப்பத்திலும் ப்ரமாணங்களைக் கொண்டே சாஸ்த்ரோக்தமாய் ஸாங்கோபாங்கமாய் நிரூபிக்க ஸாமர்த்தியம் பெற்றிருப்பவர். சோழ ராஜன் ஆஸ்தானத்திற்கு ஆளவந்தார், ராஜத் வாரத்திலே வந்து சேர்ந்து "ஆசைலாத் அத்ரி கந்யா சரணகிஸலய ந்யாஸ தந்யோபகண்டாத் ..................ம்ருக்யதாம் மாத்ருசோந்ய:!" என்று ச்லோகமிட்டுத் தம் வரவை ஆஸ்தான வித்வான்களுக்கு முரசு கொட்டினபடி, நம்ம ஸ்வாமியும் தம் பாண்டித்யத்தை மார்தட்டி அறிவிக்கத் தக்க மேன்மை பெற்றிருப்பவர். அறிந்து கொள்ள முடியாத விஷயம் என்றும், அறிவிக்க முடியாத விஷயம் என்றும் நம் ஸ்வாமியின் அநுபவத்தில் இடம் பெறவில்லை. அல்லும் பகலும் ஸ்ரீராமாநுஜ ஸம்பிரதாயம் தழைக்கவும் ஓங்கவும் ச்ரமங்களைப் பொருட்படுத்தாமல் உழைத்துக்கொண்டே யிருக்கிறவர் இவரொருவரே. நம்ம தர்சனத்து உயர்ந்த க்ரந்தங்களை, ஸகலருக்கும் உபயோகமா யிருக்கும்படி அச்சிட்டு, எளிய விலையில் வழங்கிக் கொண்டே யிருக்கிறார். இந்த பரோபகாரத்திற்கு நாம் என்ன கைம்மாறு செய்ய முடியும்? இப்பேர்ப்பட்ட மஹான்!! தற்சமயம் '200 உபந்யாஸங்கள்' என்ற தலைப்பில் 200 விஷயங்களை கங்காப் பிரவாஹமாய், வாசாமகோசாமாய் ஸ்ரீராமாநுஜனில் தொடர்ந்து வெளியிட்டுக் கொண்டிருப்பது, நம்ம பாக்யம் என்றே ஒவ்வொருவரும் கருதவேண்டும். கருதுகிறார்கள். இவை என்னைப் போன்றவர்களுக்கு (Light House) ஆகும். அறிவு மிக்க வித்வான்களுக்கு ஜோதிச் சுடராயும் பூஷணமாயும் விளங்கும். எத்தனை விஷயங்கள், எத்தனை ப்ரமாணங்கள், எத்தனை நஸோக்திகள், எத்தனை அநுபவங்கள்! எத்தனை எத்தனை சாஸ்திர நுட்ப விளக்கங்

கள்!! நானாவித மலர்கள் கொண்ட இந்த "200 வித்யா ரத்ன மாலை", பிரகாசத்தினாலும் பரிமளத்தினாலும் எல்லோரையும் பரவச மாக்குகின்றது. ஆ! ஆ!!

இந்த உயர்ந்த அரிய சொற்பொழிவுகள் யாவர்க்கும் பயன்பட்டு, யாவர்க்கும் ஆனந்தம் அளித்து, நம்மெல்லோருக்கும் சாச்வத நிதியாக இருக்கக் கூடியது. இந்த நிதியான வெளியீட்டை நமக்கு அளித்துவரும் இந்த மஹா வித்வான், நீடூழி வாழ வேண்டும். திடகாத்திரராயிருந்து இந்தச் சேவையை இன்றும் என்றும் வாரி வழங்கிக் கொண்டே யிருக்கவேண்டும். நாம் இவருடைய ப்ரவசனங்களின் ரஸங்களைப் பருகிக் கொண்டே இருக்கவேண்டும். இதுவே இந்த அல்பனின் பிரார்த்தனை. இன்று ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி, பகவான் பிறந்த நாளைக் கொண்டாடும் புண்யதினம், பகவத் விஷயத்தில் ஈடுபட்டு பகவத் கைங்கர்யம் செய்யும் பாகவத சிரேஷ்டரைக் கொண்டாடுவதும் உத்தமமே.

அடியேன்

**டாக்டர் V. ராம அய்யங்கார்,**

President, The Bangalore Thiruppavai Committee.

பெங்களூர், 21—8—65.

# A DISCOURSE ON DISCOURSES.

(SRI. S. SATHYAMOORTHI IYENGAR, GWALIAR)

It is indeed characteristic of Sri P. B. A. Swami and him alone to perform such amazing literary feats as projecting the "Satadwaya Upanyasa malai" covering a wide range of as many as two hundred choice subjects, opening, as usual, the flood gates of knowledge in a well-assimilated, predigested form, with admirable speed. To those, who have already feasted on his "Madhuropanyasa mala" and "Adhbutopanyasa-mala", and sveral other series, this will be yet another grand feast abounding in an infinitely richer and varied fare. Call it a boquet or garland with a rare fragrance and an aroma of its own, or a feast, the present series are as satisfying as the previous ones, if not more and the numerous readers are bound to have their fill and that at a time when the lean spectre of scarcity and want is stretching out its tentacles threatening to eat us up. Is it not our great good fortune to be the suppliants of such a large bounty from this great celebrity, whose equal hasn't adorned this land of nescience and darkness after the great Manavala Mamunigal? Well then, would it not be most appropriate if we added to the list of the many good things we have the great fortune to inherit, enumerated by the Swami in the very first discourse in the present series, the yeoman services rendered by this mighty Savant to the world of scholars, in general and the Vaishnavite world, in particular?

The caption of this article appears as serial No. 28 in the string of 200 discourses, vide pages 37-38 of "Sri Ramanujan, 199-200". It is interesting to note that the Upanyasams (religious discourses), we are quite familiar with during the last three or four decades, were not known in their present form, fifty years ago and this scheme of dispensation of religious learning is, therefore, of a comparatively recent origin. The Swami recalls in this article what has been described, in sufficient detail, in his autobiography (தானே எழுதிய தன் சரிதை) the kind of discourses in vogue during his boy-hood days, about sixty years ago. The teachers of 'Satagopa Nilayam', a patsala, conducted within the precincts of the temple of Lord Varadaraja set up an assembly (Sabha), which went by the name of 'Vidyollasini' and stipulated that senior students should read papers there, once or twice a week. Each scholar would take about ten minutes only and thus as many as five or six talks could be compressed within an hour. The traditional scheme of learning under a Vidwan by a group of students with the texts (granthas) opened out in front of them has, however, been in vogue since long. In fact, but for that time-honoured mode of study and acquisition of learning, the present pattern of discoursing from platforms could not have been evolved. It was a matter of sincere conviction that learning by oneself or through casual and spasmodic listening would be of no avail.

In the stress and strain of the present day world, we naturally plumb for the relatively easier mode of acquiring learning through platform discourses as against the traditional system akin to class room study. Consequently, the number of discourses has gone up like mushrooms and there are indeed several varieties and grades of them. It is a pity, there are a good many who would spill out, without any qualm or compunction, whatever comes uppermost in their mind, least caring for their relevancy to the subject on hand. This even provokes a mild joke from the Pandits that whatever comes to one's mind forms the grist for the discourse and can hardly be discarded. There is indeed no dearth of such discourses. The word "Upanyasam" means "depositing near at hand", that is culling out and presenting before the listeners, in a cogent, coherent and assimilable form, the gems of knowledge dispersed over the wide range of the Shastras. It should indeed be a rare intellectual treat to listen to the discourses of the mighty ones, the really knowledgable, who have toiled for years and passed through the rigours of learning, in all its ramifications, under pre eminent masters (Gurus), whetting their knowledge through constant listening from several sources, and who have an innate longing to impart the knowledge gathered at such heavy cost, to their listeners, without any thought of name or fame. At this stage, it is difficult to resist the urge to take note of the impact of our Swami's lectures on the millions of his hearers, including such pre-eminent persons as the late Maharshi Vasudevacharya and the late Dhakshinatya Kalanidhi Dr. U. Ve. Swaminatha Iyer, to mention only a few. In the famous Tamil classic 'Tirukkural' திருக்குறள்

it has been laid down "சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை வெல்லுஞ் சொல்லின்மை யறிந்து". On the face of it, this would mean that the speaker should be punctilious enough to ensure that his speech does not give room for adverse remarks from, and condemnation by the listeners The inner meaning yielded by the expression "பிறிதோர் சொல்" is, however, different, viz. the speaker should be free from regrets and should not reduce himself to that awful predicament of condemning himself, for havi g failed to dress up his speech adequately and raise the tempo by bringing in some more apt quotations, allusions and anecdotes, here and there It is, however. a matter of common knowledge that not many can be in such a happy position and only persons of the calibre and attainment of Sri P. B A. Swami can occupy such a commanding position. Of course, that does not detract from the necessity for every speaker, worth the name, keeping before him the ideal set by that ancient, immortal poet, Thiruvalluvar.

It is indeed a very valuable suggestion made by Sri P. B. A. Swami in his discourse on discourses, when he desires that the newspapers should not merely report, in vague aed general terms, that so and so delivered an interesting and erudite discoure on such and such a snbject, but should actually give the gist of the discourse, briefly though, for the benefit of the absentees. One novel feature about the present series of Upanyasams is that as many as thirty-six lectures, scheduled to be delivered by various Vidwans at the 'Sadas' being currently held at Ahobilam (Kurnool District of Andhra Pradesh) as an adjunct to the Samprokshana Mahotsavam, have been included therein. It is just possible that, following the usual pattern of reporting events, pointed out above, the gist of the lectures delivered by the speakers at the 'Sadas' might not be published at all. Whether or not the speakers participating in the 'Sadas' do avail themselves of the illuminating synopsis, setting out the salient features of the concerned subjects and gratefully acknowledge the very valuable guidance given by our Swami, who has brought to bear on the subjects, his mature study, is hardly a matter for serious consideration by the legions of us who have undoubtedly been enriched by the Swami. It would be a fitting finale to this short essay, if I repeated here the following observaiions made by me in the opening paragraphs of "Excerpts from Shri P. B. A. Swami's autobiography" (under print):—

"The Swami's unique presentation of facts in clear, coherent and convincing style has elevated non-scholars to scholarly grandeur while scholars have not merely stabilised themselves but have also acquired a new look, feel and flavour with an extra dose of confidence and self-possession".

S. SATYAMURTHI.

**Gwaliar, Dated 24-8-65.**

அஷ்டாதச மஹார்த்த நிதியென்னும்

# முந்நூற்றிருபத்துநான்கு மஹார்த்தநிதி

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்

## அன்பர்களுக்கு அடியேன் செய்யும் விண்ணப்பம்

உள்ளும் புறமுமொத்த அன்புடைய நண்பர்களை யடிபணிந்து வெகு குதூஹலத்துடன் விஜ்ஞாபிக்கிறேன். அடியேனுடைய இருநூறு உபந்யாஸமாலையில் முதல் சதகம் முடிவுபெற்று ஆவணி மாதத்திலேயே அனைவர்க்கும் கிடைத்திருக்கின்றது. இரண்டாவதுசதகமும் பெரும்பாலும் அச்சாகிவிட்டது. அது மாஸக்ரமத்தில் உத்தராயணத்தில் வெளிவரவேண்டியதாதலால் அப்போது வெளிவரும். 25—8—65 புஷ்ய நக்ஷத்திரத்தில் கிடைத்த பகவந்நியமனத்தினால் இப்போது ஒருவிலக்ஷணமான ஸேவை செய்யத் தொடங்குகிறேன். இதுவும் முன்னடி சிறிதும் நெஞ்சிலெண்ணாததே. அதாவதென்னென்னில், ஸ்ரீ ராமாநுஜன் 204ல் பதினேழாவது பிராயம் பூர்த்தியாகி 205ல் பதினெட்டாவது பிராயம் ஆரம்பமாகிறது. இதன் ஞாபகசின்னமாகப்பதினெட்டு விஷயங்களை உப்ஹரிக்கிறேன். அந்த 18 விஷயங்களாவன :—



| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 வேத ஸம்ஹிதையில் | 18 | 7 மநுஸ்ம்ருதியில் | 18 | 13 ஸ்ரீவசநபூஷணத்தில் | 18 |
| 2 ,, ப்ராஹ்மணத்தில் | 18 | 8 ஸ்ரீராமாயணத்தில் | 18 | 14 தத்வத்ரயத்தில் | 18 |
| 3 ஸம்ஸ்கிருதவேதாந்தத்தில் | 18 | 9 ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் | 18 | 15 முமுக்ஷுப்படியில் | 18 |
| 4 பகவத்கீதையில் | 18 | 10 பகவத் விஷயத்தில் | 18 | 16 ஆசார்யஹ்ருதயத்தில் | 18 |
| 5 பூர்வாசார்யக்ரந்தவிவரணம் | 18 | 11 மூவாயிரவியாக்யானத்தில் | 18 | 17 வேதாந்ததேசிகக்ருதிகளில் | 18 |
| 6 ராமாநுஜனும்ராமாநுஜரும் | 18 | 12 ஆசாரியர்நால்வர்ஸூக்தி | 18 | 18 மணவாளமாமுனிகள்பற்றி | 18 |

ஆக இங்ஙனே குறித்த பதினெட்டு விஷயங்களில் ஒவ்வொன்றிலும் 18 லக்கமிட்டு அபூர்வ விஷயங்கள் எழுதப்படும். எனவே இந்த நினைவுமலரில் (324) முந்நூற்றிருபத்துநான்கு விஷயங்கள் அபூர்வமாக வெளிவருகின்றன வென்றதாயிற்று.

கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் * அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறுமடங்கப் பொட்டத்துற்றிக் கோவர்த்தனமென்னுங் கொற்றக்குடையை ஏழுநாள் தாங்கிநின்று மனைவந்து சேர்ந்தவாறே யசோதைப் பிராட்டி "கேட்டறியாதன கேட்கின்றேன் கேசவா!" என்று சொல்லத் தொடங்குகிறாள். அங்ஙனம் கேட்டறியாதன கேட்பிக்கவேணுமென்றும், கண்டறியாதன காண்பிக்க வேணுமென்றும் அடியேனுக்கு ஆசை மிகுந்துள்ளது. ஆனால் பஹுச்ருதர்களும் பஹுக்ரந்தத்ரஷ்டாக்களுமான மஹான்களுக்குக் கேட்டறியாதனவும் கண்டறியாதனவுமான விஷயங்கள் என்ன இருக்கக்கூடும். ஒன்றுமிராது. ஆயினும் அடியேனுடைய ஆசைகளை பகவத்பாகவதாசார்யவர்யர்கள் நிறைவேற்றி வருகிறமுறையில் இதையும் நிறைவேற்றி வைக்கக்கூடுமென்றுநம்பி, எழுதத் தொடங்குகின்றேன். *

# 1. வேதஸம்ஹிதையில் பதினெட்டு விஷயங்கள்

1. நமது யஜுர் வேதத்தில் முதல் காண்டம் ஐந்தாவது ப்ரச்நம் தொடங்குவது *தேவாஸுராஸ் ஸம்யத்தா ஆஸந்,தே தேவா விஜயமுபயந்த:* இத்யாதி. இங்கு அக்நியைப் பற்றின ஓர் உபாக்யானம் ஓதப்படுகிறது. அதை பாஷ்யாநுஸாரேண விவரித்தெழுதுகின்றேன். தேவர்களும் அசுரர்களும் யுத்தம் செய்கையில் வெற்றி பெற்ற தேவர்கள் அசுரர்களிடமிருந்து முத்தும் மணியுமான சிறந்த பொருள்களைக் கொள்ளைகொண்டு அவற்றைக் காப்பாற்றும் பொருட்டு அக்நி தேவனிடம் வைத்தார்கள். மீண்டு மொருகால் நமக்குத் தோல்வி விளைந்தால் அப்போது இவை நமக்கு ஆபத்தனமாயிருக்கு மென்றெண்ணி வைத்தார்கள். அவற்றை அக்நிதேவன் தானே கொள்ளை கொள்ள வெண்ணி அப்பால் நெகிழத் தொடங்கினன். அதையறிந்த தேவர்கள் அப்பொருள்களை மீட்டுக் கொள்ளவேண்டிப் பின் தொடர்ந்தோடினர்கள். ஓடி பலாத்காரமாகப் பிடுங்கினபோது அக்நிதேவன் அழுதான். அதனல் அவனுக்கு ருத்ரனென்கிற பெயருமுண்டாயிற்று. அவன் அழுத கண்ணீர் கீழே விழுந்து அது வெள்ளியாக ஆயிற்று. கண்ணீரின் விகாரமான வெள்ளியானது தக்ஷிணைக்குத் தகாதது. எவன் யஜ்ஞத்தில் வெள்ளி நாணயத்தை தக்ஷிணையாகக் கொடுக்கிருனே அவனுடைய இல்லத்தில் வருஷத்திற்குள் ரோதன நிமித்தமுண்டாம். ஆதலால் யஜ்ஞத்தில் வெள்ளி நாணயத்தை தக்ஷிணையாகக் கொடுக்கக்கூடாது. *

2. மேலே விவரித்த வேத வாக்யத்தில் "ரஜதம் ஹிரண்யமபவத்" என்றும் "ரஜதம் ஹிரண்யம் அதக்ஷிண்யம்" என்று மிருக்கையாலே ரஜத மென்கிற வெள்ளியும், ஹிரண்ய மென்கிற பொன்னும் தக்ஷிணைக்கு அநர்ஹமென்று சிலர் சொல்லுவார்கள். அது தவறு. ஹிரண்யமென்பது தனத்திற்குப் பொதுவான வாசகம். 'ரஜதரூபமான தனம்' என்று அர்த்தமே யொழிய, வெள்ளியும் பொன்னும் என்று அர்த்தமன்று. இங்கு வித்யாரண்ய பாஷ்யபங்க்தி வருமாறு—"ரஜதரூபம் தநம் அபவத்; அத்ர ஹிரண்ய சப்தஸ்ய தநஸாமாந்ய வாசித்வாத் ரஜதம் ஹிரண்யமிதி அவிருத்தம்." என்று. பட்ட பாஸ்கரருடைய கருத்தும் இதுவே யாகும். வேதத்தில் "ஹிரண்யம் தக்ஷிணா" என்று நூறிடங்களில் வருகிறது; அங்கெல்லாம் ஸ்வர்ணமென்றே பொருள். இக்காலத்தவர்கள் பெரும்பாலும் ச்ராத்தத்திலுங் கூட நோட்டை [காகிதத்தை] வைத்து தக்ஷிணை கொடுப்பது ஒரு விதத்தில் நலமேயாம்.

3. முதல் காண்டத்திலேயே ஆருவது ப்ரச்நத்தில் கடைசி யநுவாகத்தில் "யா தே ஜநேஷு பஞ்சஸு" என்று ஒரு வாக்கியம் ஓதப்பட்டுள்ளது. இங்கே ஜநசப்தத்திற்கு ஜாதியை அர்த்தமாக பாஷ்யம் செய்துள்ளார்கள். "ப்ராஹ்மணாதிஷு பஞ்சஸு வர்ணேஷு" என்றே பாஷ்யகாரர்களிருவரும் எழுதியுள்ளார்கள். இத்தால் நான்கு ஜாதிக்கு மேற்பட பஞ்சம ஜாதி யென்பது சாஸ்த்ரங்களில் சொல்லப்படவே யில்லை யென்று நவீனர்கள் கூறுவது நிராதார மென்றறியக் கடவது. "சத்வாரோ வர்ணா:" என்று பலவிடங்களிலும் வருவதுண்டு; அதை யாரும் அபலபிக்கமாட்டார்கள். அதனல் பஞ்சம ஜாதி யில்லை யென்றதாகாது. ,,,, *

4. "யஸ்ய வேதச் ச வேதீ ச விச்சித்யேதே த்ரிபூருஷம், ஸ வை துர்ப்ராஹ்மணः" என்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டுள்ளது. வேத ஸம்பந்தமும் அக்நி ஸம்பந்தமுமில்லாமல் மூன்று தலை முறை கழிந்து விட்டால் துர்ப்ராஹ்மணனாய் விடுவன். ஒரு வைதிக கருமத்திற்கும் அவன் அர்ஹனல்லன்—என்று கூறப்பட்டுள்ளது. அந்த துர்ப்ராஹ்மணத்வத்தைப் போக்கிக்கொள்ள வேணுமென்று ஒருகால் ஒருவற்குத் தோன்றினால் அதற்கு வழியில்லையோ வென்ன, வழியுண்டென்கிறது இரண்டாவது காண்டத்தில் முதல் ப்ரச்நத்தில் பத்தாவது அநுவாகத்தின் தொடக்கத்தில். "ஆச்விநம் தூம்ரலலாமமாலபேத யோ துர்ப்ராஹ்மணஸ் ஸோமம் பிபாஸேத்"* இத்யாதியை வைதிகர்களிடம் உணர்க. .... .... .... ... *

5. இரண்டாவது காண்டத்திலேயே ஐந்தாவது பிரச்னத்தின் தொடக்கம் விச்வரூபாநுவாக மென்பது. இதில் ஒரு ஆச்சரியமான கதை சொல்லப்படுகிறது. (அதாவது) த்வஷ்டாவின் மகன் விச்வரூப னென்பவன் தேவர்களுக்குப் புரோஹிதன், அசுரர்களுக்கு மருமகன். அவனுக்கு மூன்று தலைகளிருந்தன. அவை ஸோமபானத்திற்கும் ஸுராபானத்திற்கும் சோறுண்பதற்கு மானவை. அவன் பலர் முன்னிலையில் தேவர்களே ஹவிர்ப்பாகங் கொள்ளத் தகுந்தவர்கள் என்பன். மறைவில் அசுரர் பக்ஷமாகவே சொல்லுவன். இப்படி விஷமப் பேச்சுள்ள விவனை வதைக்க வெண்ணின இந்திரன் வஜ்ரப் படையினால் அவனது தலைகளை யறுத்திட்டான். அறுபட்ட அம்மூன்று தலைகளும் மூன்று பக்ஷிகளாக விழுந்தன. அதனாலுண்டான ப்ரஹ்மஹத்யாபாபத்தை இந்திரன் கையேந்திப் பெற்றுக்கொண்டான். ஒரு ஸம்வத்ஸரமாகியும் ஒன்றும்செய்யாமலிருக்கவே நிந்தையுண்டாயிற்று. அதனால் பரிஹாரம் செய்து கொள்ளக் கருதிய அவ்விந்திரன் பூமண்டலத்திற்கு வந்து சேர்ந்து பூமியை நோக்கி இப்பாபத்தில் மூன்றிலொரு பாகத்தை நீ ஏற்றுக்கொள்ள வேணு மென்றான். அதற்கிசைந்த பூமி "என்னிடத்திலிருந்து மண்ணை வெட்டியெடுத்தால் மறுபடியும் அந்த இடம் பூர்த்தி யடையும்படி வரம் கொடுக்கவேணும்" என்று வேண்டிக்கொள்ள, ஒருவருஷத்திற்குள் அப்படியே பூர்ணமாகக்கடவதென்று இந்திரன் வரமளித்தான். பூமி ஏற்றுக் கொண்ட பாபம் உழுமண் பூமியாயிற்று. ஆதலால் அந்த விடம் அபரிசுத்தம். பிறகு இந்திரன் வநஸ்பதி தேவதையை யடைந்து தன் பாபத்தில் மூன்றிலொரு பங்கை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினான். "என்னை வெட்டினாலும் மறுபடியும் முன்னிலு மதிகமாகத் தளிர்க்க வேணும்" என்று வரம் வேண்ட, அப்படியே வரமளிக்க, வ்ருக்ஷங்கள் பாபத்தில் மூன்றிலொரு பங்கை ஏன்று கொண்டன. அது 'கோந்து' என்கிற பசையாக ஆயிற்று. அது அபரிசுத்தமாகையால் புஜிக்கத் தகாதது. பிறகு இந்திரன் ஸ்த்ரீகளின் திரளிலே வந்து சேஷித்துள்ள ஒரு பாப பாகத்தை ஏற்றுக்கொள்ளும்படி வேண்ட, அவர்கள் 'நாங்கள் கர்ப்பிணிகளானபின்பும் பதிபோகத்தை இழவாமலிருக்கும்படி வரமளிக்க வேணும்' என்று வேண்ட, அப்படியே வரமளித்து ப்ரஹ்மஹத்யாபாபத்தினின்றும் பூர்த்தியாக விடுபட்டான். ஸ்த்ரீகளால் ஏற்றுக்கொள்ளப்பட்ட பாபம் அவர்களுடைய மாதவிடாயாக ஆயிற்று. (இதற்குமேல்) * தஸ்மாத் மலவத்வாஸஸா ந ஸம்வதேத ந ஸஹாஸீத * இத்யாதியாலே ரஜஸ்வலாஸ்த்ரீ நியமங்கள் பல சொல்லப்

பட்டுள்ளன. அவளோடு பேசக்கூடாது, அவளோடு ஒருக்ருஹத்தில் வஸிக்கக் கூடாது. இத்யாதி. .... ... .... .... .... *

6. மேலே (5ல்) விவரித்தவிடத்தில் ரஜஸ்வலாஸ்த்ரீ நியமங்கள் சொல்லி வரும்போது "நாஸ்யா அன்னமத்யாத்" என்றது. (அதாவது) பஹிஷ்டை தொட்ட (அல்லது) கொடுத்த அன்னத்தை உண்ணக்கூடாது என்றபடி. இதற்குமேல் "அதோ கல்வாஹு:" என்று பக்ஷாந்தரம் சொல்லப்படுகிறது. அஃதென்னவென்றால், "அப்யஞ்ஜநம் வாவ ஸ்த்ரியா அந்நம். அப்யஞ்ஜநமேவ ந ப்ரதிக்ருஹ்யம், காமமந்யதிதி" என்பதாக. இந்தவாக்யத்தின் பொருள் என்னவென்றால், பஹிஷ்டையிடம் அன்னம் கொள்ளலாகாதென்றது அப்யஞ்ஜநம் [தைலஸ்னானம்] கொள்ளக் கூடாதென்கை; மற்றது இஷ்டப்படியாகலாம் என்றதாகப் பொருளாகிறது. அவளிடமிருந்து எண்ணெய் வாங்கக்கூடாதென்று சிலர்; அவள் எண்ணெய் தேய்க்கக்கூடாதென்று சிலர் — என்பதாக பட்டபாஸ்கரரும் வித்யாரண்யரும் எழுதுகிறார்கள். "அந்நம் ஸத்யாமிச்சாயாம் போக்தவ்யம்" என்று வித்யாரண்ய பாஷ்ய பங்க்தி. இங்ஙனே சில அபிஜ்ஞர்கள் சொல்லுவதாக எழுதியுள்ளார். அவளோடு பேசக்கூடாது, அவளிருக்கும் க்ருஹத்திலேயே யிருக்கக்கூடாதென்று கீழே ஸ்பஷ்டமாகவுள்ளது. இது வைதிகவித்வான்கள் விமர்சிக்கவேண்டிய விஷயமென்று விடப்படுகிறது. அறிஞர் அவசியம் விமர்சித்தெழுதவேண்டும். .... *

7. அந்த இரண்டாவது காண்டத்திலேயே அந்த ஐந்தாவது ப்ரச்நத்திலேயே எட்டாவதநுவாகத்தில் ந்ருமேதன் பருச்சேபன் என்னுமிரு ரிஷிகளின் உபாக்கியானமொன்று ஓதப்படுகிறது. [ந்ருமேதச் ச பருச்சேபச் ச ப்ரஹ்ம வாத்யமவதேதாம்] இத்யாதி. இவ்விருமுனிவரும் நான் ப்ரஹ்மவாதியா? நீ ப்ரஹ்மவாதியா? என்று விவாதப்பட்டனர். [ந்ருமேதன் நான்தான் ப்ரஹ்மவாதி யென்கிறான், பருச்சேபன் நான்தான் ப்ரஹ்மவாதி யென்கிறான்.] இந்த விவாதம் முடிவடையவேணுமே; அதற்காக ஒரு ஈரக்கட்டையை முன்னே யெடுத்துப்போட்டு இதில் நெருப்பையுண்டாக்கவேண்டியது; யார் உண்டாக்கவல்லரோ அவரையே ப்ரஹ்மவாதியாக முடிவு செய்யவேண்டியதென்று வ்யவஸ்தை பண்ணிக்கொண்டார்கள். ந்ருமேதன் ஒரு மந்திரத்தைச் சொல்லி ஊதினான்; புகைதானுண்டாயிற்று; உடனே பருச்சேபன் ஒரு மந்திரத்தைச்சொல்லி யூதினான்; நெருப்பு எழுந்தது. பிறகு ந்ருமேதன் இவனைக் கொண்டாடிக் கூறி 'அப்பா! நீயும் நானும் ஒன்று சேர்ந்துதானே ஓதினோம்; நீ நெருப்பை யெழுப்பினாய், என்னால் அது முடியவில்லையே, என்ன காரணம்? என்று கேட்டான். [ஸமிதேநிநாமேவாஹம் வர்ணம் வேதேத்யப்ரவீத்.] ..................... மருமம் மஹான்களிடமுணருக. ... ... ... ... *

8. (2-5.) பதினோராவதநுவாகத்தில் "வாக் ச மநச் சார்த்தீயேதாம்" என்று தொடங்கி வாக்குக்கும் மனஸ்ஸுக்கும் நடந்த ஒரு ஸ்பர்த்தையும் அதன் முடிவும் ஓதப்பட்டுள்ளது. தேவர்களுக்கு நான்தான் ஹவ்யம் வஹிக்கிறேனென்று வாக்கு சொல்லிற்று; மனஸ்ஸும் அப்படியே சொல்லிற்று. விவாத சாந்திக்காக ப்ரஜாபதியிடம் சென்று கேட்டபோது அவர் வாக்கைநோக்கி 'நீ மனஸ்ஸுக்கு அடிமைப்

பட்டிருக்கையாலே உனக்கு ஸ்வாதந்திரியமில்லை; ஏனென்றால் மநஸ்ஸு நினைத்ததையே வாக்கு சொல்லக்கடவதாகையாலே' என்று மநஸ்ஸுக்கு ஏற்றமாகத் தீர்ப்புக் கூறினார். அதனால் கோபங்கொண்ட வாக்கானது 'ஹே ப்ரஜாபதே! நீர் எனக்குத் தாழ்வு சொன்னபடியாலே யாரும் உமக்கு வாக்காலே ஹோமம் செய்யக்கூடாது' என்று சொல்லிப்போயிற்று. ஆகவேதான் "ப்ரஜாபதிம் மநஸா த்யாயந் ஆகாராவாகாரயதி" என்று உபாத்யாயர்கள் சொல்லிப் போருகிறார்கள். *

9. (2 - 5.) அந்த அநுவாகத்தின் முடிவிலேயே ப்ராஹ்மணனுக்கு ஏற்றமாக ஓதப்பட்டுள்ளது. "யத் ப்ராஹ்மணச் ச அப்ராஹ்மணச் ச ப்ரச்நமேயாதாம்" இத்யாதி. (பொருள் வருமாறு) ஒரு ப்ராஹ்மணனும் மற்றொரு அப்ராஹ்மணனுங் கூடி ஏதேனுமொன்றுக்கு விவாதப்பட்டு ஒருபெரியவரிடம் சென்று மாத்யஸ்த்யம் கோரி முடிவுசொல்லும்படி விரும்பினால் அப்பெரியவர் ப்ராஹ்மண பக்ஷபாதியாகவே யிருந்து முடிவுகூறவேண்டியது. [எது நியாயம் எது அநியாயம் என்கிற விமர்சத்தில் புகாமல் ப்ராஹ்மணபக்ஷமாகவே சொல்லிவிடவேண்டியது.] அப்படி சொல்லுவதானது சொல்லுபவன் தன்னை மேன்மைப்படுத்திக் கொண்டபடியாகும். அப்படி கூறாமல் பிராமணனுக்குத் திரஸ்காரமாகக் கூறினால் அது கூறுபவன் தன்னைத் தானே திரஸ்கரித்துக்கொண்டபடியாகும். ஆகவே ப்ராஹ்மணனுக்குத் திரஸ்காரமாகச் சொல்லக் கடவதன்று. [சிறு குறிப்பு; * ஸ வை ப்ராஹ்மண கர்த்தப: * *யதிச் ச ச்வபசாதம: * இத்யாதி விசேஷ சாஸ்த்ரங்கள் முன்னிலையில் இது ஸாமாந்ய சாஸ்த்ரமென்று கொள்ளக்கடவது.] ... .... ... ... *

10. (2-6) ஆறாவதநுவாகத்தில் "அக்நேஸ் த்ரயோ ஜ்யாயாம்ஸோ ப்ராதர ஆஸந்" என்று தொடங்கி அக்நியைப் பற்றி ஒருபாக்கியானம் ஓதப்பட்டுள்ளது. அதாவது) அக்நிதேவனுக்குத் தமையன்மார்கள் மூவர் இருந்தனர். அவர்கள் தேவர்களுக்கு ஹவிஸ்ஸை வாங்குகிற குமஸ்தாக்களாகவே யிருந்து மாண்டொழிந்தனர். அக்நிதேவன் நம் கதியும் இப்படித் தானாகும் போலு மென்று அஞ்சி தேவர்களுடைய கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்து கொள்ளக் கருதி நீரினுள்ளே நுழைந்தான். தேவதைகள் அவனைத் தேடப் புறப்பட்டார்கள். அப்போது மீன் கோள்சொல்லிக் கொடுத்தது. அக்நி இங்கே மறைந்து கொண்டிருக்கிறானென்றது. அதனால் சீற்றங்கொண்ட அக்நி மத்ஸ்யத்திற்கு சாபம் கொடுத்தான்—'என்னை நீ காட்டிக்கொடுத்தபடியாலே (செம்படவர்கள்) வேண்டும் போதெல்லாம் உன்னை வலையில் பிடித்துக் கொல்லக் கடவர்கள்' என்று. அந்த சாபத்தின்படியே நடந்து வருகிறது. பிறகு அக்நியைப் பிடித்துக்கொண்ட தேவர்கள் 'அக்நே! இப்படி வா; முன்போல் எங்களுக்கு குமஸ்தாவாக இரு' என்றனர். அக்நி வரமொன்று வேண்டினன். ஹோமம் பண்ணுவதற்காக எடுத்துக் கொண்ட த்ரவ்யம் அக்நியில் சேராமல் பரிஸ்தரணத்துக்குப் புறம்பே சிந்துமாகில் அது என் தமையன்மார்களுக்கு ஆகக் கடவது' என்று. அப்படியே ஆகி வருகிறது. .... .... *

11. (2-6.) பத்தாவதநுவாகத்தில் "யோபகுராதை சதேந யாதயாத்" என்று தொடங்கி ஒரு நீதி கற்பிக்கப்படுகிறது. அந்தணனை அடிக்க முயல்பவனுக்கு நூறு

வராகன் அபராதம் விதிக்கவேண்டியது. அடிக்க முயல்வதோடு நில்லாமல் அடித்தவனுக்கு ஆயிரம் வராகன் அபராதம் விதிக்கவேண்டியது. அடித்து ரக்தஸ்ராவத்தையுண்டு பண்ணினல் ரத்தம் நிலத்தில் விழுந்து எத்தனை பரமாணுக்களை வியாபிக்குமோ அத்தனை ஸம்வத்ஸரகாலம் அவன் யமயாதனைகளை யநுபவிப்பன். ஆதலால் அந்தணனை அடிக்க முயல்வதோ அடிப்பதோ அடித்து ரக்தப்பெருக்கையுண்டாக்குவதோ கூடாது. இது ஸ்ரீபாஷ்யத்தில் கையாளப்பட்டிராநின்றது. .... *

12. மூன்ருவது காண்டம் நான்காவது ப்ரச்நம் மூன்ருவதநுவாகத்தில் சில காம்யேஷ்டிகள் விதிக்கப்படுகின்றன. அவற்றுள் ஒன்று; "அக்நீஷோமீயாமாலபேத ய: காமயேத அந்நவாந் அந்நாதஸ் ஸ்யாமிதி" இத்யாதி. (அதாவது) எவன் அன்னம் வேணுமென்றும் அன்னத்தை யுண்பவனுகவுமாக வேணுமென்றும் விரும்புகிருனே அவன் அக்நீஷோமீயேஷ்டியைச் செய்யக்கடவன். இந்த இஷ்டியில் இரண்டு தேவதைகள் ஆராதிக்கப்படுவதால் முதல் தேவதையான அக்நியினுலே அன்னம் கிடைக்கும; இரண்டாவது தேவதையான ஸோமனுலே அந்நாதந சக்தி கிடைக்குமென்கை. இங்குச் சிலர் சங்கிப்பதுண்டு; அன்னம் கிடைக்கவேணுமென்று விரும்பினல் போதாதா? அன்ன முண்ணப்பெற வேணுமென்று கூட விரும்பவேணுமா? என்று. இது மிகவும் ஆவச்யகமான சங்கை தான். வேத புருஷன் இங்ஙனே பல விடங்களிற் சொல்லுகிருன்; இரண்டாவது காண்டம் இரண்டாம் ப்ரச்நத்தில் "யஃ காமயேத அந்நவாந் ஸ்யாமிதி" என்றும் "யஃ காமயேத அந்நாதஸ் ஸ்யாமிதி" என்றும் தனித்தனியாக இரண்டு இஷ்டிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. தைத்திரீயோபநிஷத்தில் "அந்நவாநந்நாதோ பவதி" என்ருேதி யிருப்பது ஸுப்ரஸித்தம். இங்ஙனே இரண்டு பலனுகச் சொல்லவேண்டியது அவசியமேயாகும். ஏனென்ருல் அன்ன ஸம்ருத்தி யிருந்தாலுங்கூட அதை யநுபவிக்கிற சக்தி இல்லாமற் போகும். ஆகவேதான் "போஜ்யம் போஜந சக்திச் ச ரதிசக்திர் வராங்கநா, விபவோ தாநஸம்பத்திஃ நால்பஸ்ய தபஸஃ பலம்." என்று மேலையார் சொல்லி வைத்தார்கள். போஜ்யஸம்ருத்தியுள்ளவர்களுக்கு போஜநசக்தியில் வைகல்யத்தைக் கட்கூடாகக் காணுநின்ருேம். இவ்விஷயத்தை ஆழ்ந்து நோக்குமளவில், அந்நவாந் என்பதற்கு வஸுதேவரையும், அந்நாதஃ என்பதற்கு நந்தகோபரையும் லக்ஷ்யமாகக் கொள்ளலாம். பகவானைப் பிள்ளையாகப்பெற்ற வத்தனையே வஸுதேவர்க்காதலால் அவர் அந்நவாந் என்னத் தகுந்தவராயினர். "நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள்கோன் வசுதேவன் பெற்றிலனே" என்று தெய்வத்தேவகி புலம்பும்படியாக அநுபவமெல்லாம் நந்தகோபர்க்காகையாலே இவர் அந்நாதரென்னத் தகுந்தவராயினர். இதனை அந்யத்ரவிவரித்துரைத்திருக்கிறேன்.

13. நாலாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் எட்டாவதநுவாகத்தில் *ஹிரண்யகர்ப்பஸ் ஸமவர்த்ததாக்ரே* என்றுதொடங்கி எட்டுருக்குக்கள் "கஸ்மை தேவாய ஹவிஷா விதேம" என்று ஒரேவிதமான முடிவோடு கூடியவையாய் விளங்குகின்றன். கர்ம காண்டத்திலும் பரப்ரஹ்ம ப்ரபாவ ப்ரதிபாதநமுள்ளதென்று அடியேன் பரக்க வுபந்யஸிப்பதுண்டு. அதற்குப் பொருத்தமாக ஸம்ஹிதையிலும் ப்ராஹ்மணத்திலும் பல ஸ்தலங்கள் எடுத்துக் காட்டப் பாங்கானவையுண்டு; அவற்றுள் இந்த ஸ்தலம் மிக முக்கியமானது. தைத்திரீயோபநிஷத்தில் உத்தரநாராயணத்தில் "அத்ப்யஸ்

ஸம்பூதோ ஹிரண்யகர்ப்ப இதியஷ்டௌ" என்று வைதிகர்களனைவரும் ஸமரீதியாக ஓதிவருகிறார்கள். இங்கு "ஹிரண்ய கர்ப்ப இதி அஷ்டௌ" என்றது ஸம்ஹிதையில் நாலாவது காண்டத்தில் ஓதப்பட்டு வருகிற எட்டுருக்குக்களையும் இங்கே ஓதவேண்டியது என்றபடி. இவ்விதமாக ஸகல பாஷ்யகாரர்களும் அர்த்தம் செய்திருப்பதனால் இது நிர்விவாதம். இதனால் இந்த எட்டுருக்குக்களும் நாராயணபரங்களென்பது ஸ்பஷ்டமாகத் தேறிநின்றது. இவற்றை வேறொரு தேவதாபரமாக ஒதுக்குவதற்குச் சிறிதும் ஔசித்யம் கிடையாது. இவற்றில் இரண்டு ருக்குக்களைமட்டும் இங்கு விவரிக்கின்றேன். [ஹிரண்யகர்ப்பஃ அக்ரே ஸமவர்த்தத.] ஸஹஸ்ர நாமத்தில் * ஹிரண்ய கர்ப்போ பூகர்ப்பஃ * என்று ஹிரண்ய கர்ப்பனாகக் கூறப்பட்ட நாராயணனொருவனே முந்துற முன்னமிருந்தனன். அவன் எப்படிப்பட்டவன்? [பூதஸ்ய ஜாதஃ பதிரேக ஆஸீத்] ஸகல ப்ராணிவர்க்கங்களுக்கும் அத்விதீயசேஷி. இன்னும் அவனுடைய பிரபாவம் எத்தகைத்து? [ஸ தாதார ப்ருதிவீம் த்யாமுதேமாம்] அவனே உபயவிபூதி நிர்வாஹகன். ப்ருதிவீம் உத த்யாம்—மண்ணுலகையும் விண்ணுலகையும் என்றபடி. (உத) என்னுமவ்யயம் ஸமுச்சயார்த்தகம். [கஸ்மை தேவாய ஹவிஷா விதேம.] ஸஹஸ்ரநாமத்தில் * ஏகோநைகஸ் ஸவஃ கஃ கிம் * என்றவிடத்தில் (கிம் என்று) கிம்சப்தநிர்திஷ்டனான அந்தநாராயணனுக்கு ஹவிஷ்யம் நிவேதநம் பண்ணக்கடவோம் என்கை. (இந்த எட்டுருக்குக்களும் திருவாராதனத்தில் விநியோகிக்கப்படுமவை.) மற்றொரு ருக்கு;—* ய ஆத்மதா பலதாஃ யஸ்ய விச்வ உபாஸதே ப்ரசிஷம் யஸ்ய தேவாஃ யஸ்ய ச்சாயா அம்ருதம் யஸ்ய ம்ருத்யுஃ கஸ்மை தேவாய ஹவிஷா விதேம.] ஆத்மதாஃ—* எற்பரனென்னை யாக்கிக்கொண்டு எனக்கே தன்னைத் தந்த கற்பகம் * என்கிற திருவாய்மொழியின்படியே முற்றாட்டாக அநுபவிக்கும்படி தன்னையே தருமவன் எம்பெருமான். பலதாஃ—* குலந்தரும் செல்வம் தந்திடும்..........வலந்தரும் * என்ற திருமங்கையாழ்வா ரருளிச் செயலின்படியே தன்னை யநுபவிக்கைக் கீடான தேஹபல மநோபலங்களை யருள்செய்பவன். [யஸ்ய ப்ரசிஷம் விச்வே தேவா உபாஸதே] * ஆணைமெய்பெற நடாய தெய்வம் மூவரில் முதல்வனாகி * என்று திருவாசிரியத்திலருளிச் செய்தபடியே எம்பெருமானுடைய ஆணையை ஸகல தேவர்களும் சிரமேற் கொள்ளுகின்றார்கள். ப்ரசிஷம்—ஆஜ்ஞாம் என்றபடி. [அம்ருதம் ம்ருத்யுஃ யஸ்ய ச்சாயா] மோக்ஷபூமியும் ஸம்ஸாரபூமியும் அவனிட்டவழக்கு.

14. ஐந்தாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நம் முதலநுவாகத்தில் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பாரம்யம் ஸுஸ்பஷ்டமாக வோதப்பட்டிருக்கின்றது;—[அக்நிரவமோ தேவதாநாம் விஷ்ணுஃ பரமஃ] 'தேவதாநாம்' என்றது நிர்தாரணே ஷஷ்டி. தேவதைகளுக்குள்ளே கீழ்ப்பட்ட தேவதை அக்நி. 'இவற்கு மேற்பட்ட தேவதை யில்லை' யென்னும்படியான பரமதேவதை ஸ்ரீமஹாவிஷ்ணு. இப்படிச்சொன்ன பாரம்யத்தை மேலே ஆறாவது காண்டத்தில் இரண்டாம் ப்ரச்நத்தில் *தேஷாமஸுராணாம் திஸ்ரஃ புர ஆஸந்* என்று தொடங்கிச் சொல்லுமுபாக்கியானம் நிலைநாட்டுகின்றது.

15. (6-2-3) * தேஷாமஸுராணாம் திஸ்ரஃ புர ஆஸந் * இத்யாதி. அஸுரர்களுக்கு மூன்று பட்டணங்களிருந்தன; ஒன்று இரும்பு மயமானது; மற்றொன்று வெள்ளி மயமானது; இன்னொன்று பொன்மயமானது. [அந்தப் பட்டணங்களைத்

கொண்டு அவ்வசுரர்கள் தேவர்களுக்கு ஹிம்ஸையை விளைத்துக் கொண்டிருந்தார்கள்.) தேவர்கள் வெற்றிபெற முடியாதவர்களா யிருந்தனர். பிறகு ஒருபாயம்செய்து வெல்லத் தொடங்கினர். தே இஷும் ஸமஸ்குர்வத=அவர்கள் அம்பை ஸித்தப்படுத்தினர். அந்த அம்புக்கு எப்படி மிடுக்கு உண்டாயிற்றென்ன, [விஷ்ணும் தேஜநம்] திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (6-1-3) * குழல் நிறவண்ண! நின் கூறு கொண்ட தழல் நிறவண்ணன் நண்ணார் நகரம் விழ, நனி மலை சிலை வளைவு செய்து அங்கு அழல்நிற அம்பது வானவனே!* என்றருளிச் செய்திருப்பது கொண்டு (விஷ்ணும் தேஜனம்) என்பதற்குப் பொருள் காணவேணும். திருவாய்மொழியில் (3-10-4ல்) பாணாஸுரபங்க கதையை யருளிச் செய்யுமிடத்து அந்தப் போரில் சிவபிரானும் தலையிட்டா னென்பதைச் சொல்லுகின்ற ஆழ்வார் * திரிபுரம் செற்றவனும் * என்கிற சொல்லால் சிவபிரானைக் குறித்தனர். அங்கு நம்பிள்ளை யீடு;—"த்ரிபுரதஹந ஸமயத்திலே வில்லுக்கு மிடுக்காயும், நாணிக்குத் திண்மையாயும், அம்புக்குக் கூர்மையாயும் தனக்கு அந்தராத்மாவாயும் எதிரிகளைத் தலை சாயும்படி பண்ணி த்ரிபுரத்தை யழித்துக் கொடுத்தா னெம்பெருமான்; அத்தை யறியாதே அஜ்ஞரானவர்கள் இத்தை அவன் தலையிலே வைத்துக் கவிபாட, இத்தைத் தானுங்கேட்டு மெய்யிறே யென்று மயங்கி 'அது செய்த நமக்கு இவனை வெல்லத் தட்டெடன்?' என்று வந்து எதிரிட்டானாயிற்று." என்று. இதுநிற்க. மேலே யெடுத்த "தேஷாமஸுராணும்." இத்யாதி வேதோக்த கதையின் முடிவு காணவேணும். [தே அப்ருவந் க இமா முஸிஷ்யதீதி] அம்பு ஸித்தமாய் விட்டது ஸரி; இதை யெடுத்து எய்ய வல்லவன் யாவன்? என்கிற கேள்வி பிறந்தது.[ருத்ர இந்யப்ருவந்] அப்போது ருத்ரனைக் குறிப்பிட்டார்கள். அவனைக் குறிப்பிட்டதற்குக் காரணம் சொல்லுகிறது உடனே [ருத்ரோ வை க்ரூர:, ஸோஸ்யது இதி] ருத்ரன் தான் கொடியவன், அவன் எய்யட்டுமென்றார்களாம். உடனே ருத்ரனை நோக்கி எய்யச் சொன்னபோது [ஸோப்ரவீத் வரம் வ்ருணை. அஹமேவ பசூநாம் அதிபதிரஸாநிதி] நான் பசுபதியாயிருக்கும்படி வரங் கொடுத்தால் எய்கிறேனென்றானும் ருத்ரன். அப்படியே வரங்கொடுத்த பின்பு எய்தானென்று மேலே சொல்லிற்று. ருத்ரன் பரதேவதையா யிருந்தால் வரம் வேண்டுவனா? என்பதை ஆராய வேணும். .... .... ... *

16. (6-3-10) * பசுமாலப்ய புரோடாச மென்கிற அநுவாகத்தில் [ஜாயமாநோ ஹ வை ப்ராஹ்மணஸ் த்ரிபி: ருணவா ஜாயதே] பிராமணன் பிறக்கும்போது மூவர்க்குக் கடன் பட்டவனாய்ப் பிறக்கிறான்; அம்மூவர் ரிஷிகளும் தேவர்களும் பித்ருக்களுமாவர். வேதாத்யயனம் பண்ணி ரிஷிகளின் கடனைத் தீர்க்கக் கடவன். தேவ பூஜை பண்ணி தேவர்களின் கடனைத் தீர்க்கக் கடவன்; ப்ரஜோத்பாதநம் பண்ணிப் பித்ருக்களின் கடனைத் தீர்க்கக் கடவன். எனவே, வேத மோதி தேவதாராதனம் பண்ணி ஸந்தான ஸம்பந்நனாயிருப்பவன் யாவனோ அவனே கடன்கள் தீர்ந்தவன் என்றதாயிற்று. .... .... .... .... ... *

17. (6-4-9) * யஜ்ஞஸ்ய சிரோச் சித்யத * என்று தொடங்கி ஒருபாக்கியானம் ஓதப்பட்டுள்ளது. (அதாவது) யஜ்ஞ தேவதையின் தலை அறுபட்டது. அப்போது தேவதைகள் அச்விநி தேவர்களை நோக்கி 'நீங்கள் மருத்துவர்களல்லவா? இந்த

அறுபட்ட தலையை மறுபடியும் சேரப் பண்ணுங்கள்' என்றார்கள். அவர்கள் ஒரு வரங் கேட்டுப் பெற்றுக்கொண்டு அப்படியே தலையை ஒட்ட வைத்தார்கள். பிறகு தேவர்கள் சொன்னார்கள்—இந்த வைத்யர்கள் அசுத்தர்கள்; ஆகவே பிராமணன் வைத்யம் செய்யக் கூடாது; ஏனென்றால் [அபூதோ ஹி ஏஷ: அமேத்ய: யோ பிஷக்] வைத்ய னென்பவன் மிகவும் அபரிசுத்தன்...............முடிவாகச் சொல்லியிருப்ப தாவது [உதபாத்ரமுபநிதாய ப்ராஹ்மணம் தக்ஷிணதோ நிஷாத்ய பேஷஜம் குர்யாத்] உதக பாத்திரத்தை அருகே வைத்து ஒரு ப்ராஹ்மணனைத் தென்புறமாக உட்கார வைத்து பிராமணன் வைத்யம் செய்வது. .... ... ... .... *

18. (7-5. 18) * ஆப்ரஹ்மந் ப்ராஹ்மணோ ப்ரஹ்மவர்ச்சஸீ ஜாயதாம் * இத்யாதி. இது அச்வமேத ஹோம மந்த்ரம். [நிமந்த்ரித ப்ராஹ்மணர் ஊணத்யாயம் படிக்கும் மந்த்ரமிது.] இதன் பொருளாவது—ப்ராஹ்மண ஜாதியில் ப்ரஹ்மவர்ச்சஸியாய் ச்ரோத்ரியனான ப்ராஹ்மணன் எங்கு முண்டாக வேண்டும். இந்த ராஷ்ட்ரத்தில் ஆயுதப்ரயோக குசலனாய் சூரனாய் மஹாரதியான க்ஷத்ரியன் உண்டாகக் கடவன். நன்றாகக் கறக்கவல்ல பசு உண்டாகுக. சுமை தாங்கவல்ல எருது உண்டாகுக. வேகமாகச் செல்லவல்ல குதிரை யுண்டாகுக. அழகிய மாதர் உண்டாகுக. இந்த யஜமானனுக்கு மிகச்சிறந்த குணசாலியான மகனுண்டாகுக. எங்களுக்கு வேண்டும் பொழுதெல்லாம் மழைபெய்க. ஓஷதிகள் நன்றாக விளையட்டும். யோக க்ஷேமங் களும் சிறந்திடுக. (கிடைக்காதது கிடைப்பது யோகம்; கிடைத்தது ஸுரக்ஷிதமா யிருப்பது க்ஷேமம்.) .... .... .... .... .... *

★ க்ஷேமவார்த்தையோடு தலைக்கட்டிற்று வேதத்தில் ஸம்ஹிதையில் பதினெட்டு



# 2. இரண்டாவது பதினெட்டு வேதத்தில் ப்ராஹ்மணத்தில்

ஸம்ஹிதைக்கு அடுத்தது ப்ராஹ்மணம். மூன்று அஷ்டகங்கள், அச்சித்ராச்வமேதம், அருணகாடகம் இவைப்ராஹ்மணமெனப்படும். இவற்றிலிருந்து பதினெட்டுகேண்மின்.

1. முதலஷ்டகத்தில் (1.) இரண்டாமநுவாகம் * க்ருத்திகாஸ்வக்நிமாததீத * இத்யாதி. உலகில் நாம் நக்ஷத்ர பரிகணனை பண்ணும்போது 'அச்விநி பரணி க்ருத்திகை' என்று கணக்கிட்டு வருகிறோம். வேதத்தில் க்ருத்திகையே முதலாக வெடுக்கப்படுகிறது. "முகம் வா ஏதந் நக்ஷத்ராணும். யத்க்ருத்திகா:' என்று இந்த அநுவாகத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்படுகிறது. ஸம்ஹிதையில் நாலாவது காண்டத்தில் எல்லா நக்ஷத்திரங்களையும் வரிசையாக ஓதிவருமிடத்து 'க்ருத்திகா நக்ஷத்ர மக்நிர் தேவதா" என்று இதுவே முதலிடப் பட்டது. "அக்நிர் நஃ பாது க்ருத்திகா:" இத்யாதிகளுங் காண்க. இப்படியிருக்க லோகத்தில் க்ருத்திகைக்கு ப்ரதமகணநம் வாராமைக்கு ஹேது வென்னென்னில், அதுவும் இவ்வநுவாகத்திலேயே ஸூசிதமாகிறது; [அதோ கலு. அக்நிநக்ஷத்ரமித்யபசாயயந்தி. க்ருஹாந்.ஹ தாஹுகோ பவதி.] கீழே இந்த நக்ஷத்ரத்திற்குச் சிறப்புச் சொல்லப்பட்டு, அதற்கு மாறுக இப்போது இழிவு சொல்லப்புகுவதால் (அதோ கலு) என்பது அதற்கு அவதாரிகை யாகும். என்ன இழிவு? என்னில் பெரியார்கள் அக்கி நக்ஷத்ரமென்று இழிவு கூறுகின்றார்கள். அந்த நக்ஷத்ரத்திலே செய்யும் யஜமானனுடைய வீட்டைக் கொளுத்தி விடும் இந்த தேவதை................இதை யிட்டே லோகத்தில் இந்த நக்ஷத்ரத்திற்கு ப்ரதம பரிகணனை இல்லை போலும். வேறு காரணமுமிருக்கலாம். .... *

2. முதலஷ்டகம் நான்காம் ப்ரச்நம் ஒன்பதாமநுவாகத்தில் - பித்ருக்கள், மனிதர்கள், பசுக்கள், அஸுரர்கள் முதலானோர்க்கு போஜன வேளைகள் நியமிக்கப்படுகிறது. மனிதர்களுக்கும் பசுக்களுக்கும் நியமித்திருப்பதை மட்டும் தெரிவிக்கிறேனிங்கு. [தஸ்மாத் த்விரஹ்நோ மநுஷ்யேப்ய உபஹ்ரியதே. ப்ராதச் ச ஸாயஞ் ச............ தஸ்மாத் த்ரிரஹ்ந: பசவஃ ப்ரேரதே. ப்ராதஸ் ஸங்கவே ஸாயம்.] பகலிலும் இரவிலுமாக இரண்டு வேளைகளில் மனிதர்களுக்கு போஜனமென்றும், ப்ராத:காலம் ஸங்கவ காலம் ஸாயங்காலம் ஆகிற மூன்று வேளைகளில் பசுக்களுக்கு உணவு என்றும் இங்கே ச்ருதி சொல்லுகிறது. சாஸ்த்ரவச்யமல்லாத பசுக்களைப் பற்றி வியவஸ்தையேது. அதுபற்றி விசாரம் வேண்டா. 'மநுஷ்யேப்யஃ' என்று பொதுப்பட மனிதர்களை யெடுத்திருந்தாலும் மானிட வகுப்பில் சாஸ்த்ரங்களுக்குக் கட்டுப்படாத திரள்கள் பல்லாயிர முண்டே; அவற்றை விலக்கி சாஸ்த்ரவச்யர்களான வகுப்பினரை மட்டுங் கொண்டால் இந்த சாஸ்த்ரம் ஸங்குசித விஷயமாகும். நூல் வரம்புக்குக் கட்டுப்பட்ட பரம வைதிகர்கள் * ருதம் த்வா ஸத்யேந பரிஷிஞ்சாமீதி ஸாயம் பரிஷிஞ்சதி. ஸத்யம் த்வர்த்தேந பரிஷிஞ்சாமீதி ப்ராதஃ * என்று பரிஷேசநமந்த்ரம் இரண்டு வேளைகளுக்கு மட்டுமே உள்ளதனுல் இரண்டு வேளைகள் தவிர வேறொரு வேளை எதுவும் உட்கொள்ள மாட்டார்கள். இடைப்பலஹாரங்கள் கடைப்பலஹாரங்கள் அணுக மாட்டா. பகவத் ஸந்நிதிகளில் அகாலங்களில் ப்ரஸாதம் கிடைத்தால் " ஆமலகமாத்ரம் க்ருஹ்ணீயாத்" என்னும் சாஸ்த்ரத்தை யடியொற்றி நெல்லிக்காயளவு ப்ரஸாதம் ஸ்வீகரிப்பர்கள். .... .... .... .... .... *

3. (1—5.) இரண்டாவதநுவாகத்தில்—ஸ்வாதீநக்ஷத்திரத்தில் விவாஹம் பண்ணிக் கொடுக்கப்படுகிற கன்னிகையைப் பற்றி ஒரு விநோதம் சொல்லுகிறது [யாம் காமயேத துஹிதரம் ப்ரியா ஸ்யாதிதி. தாம் நிஷ்ட்யாயாம் தத்யாத். ப்ரியைவ பவதி. நேவ து புநராகச்சதி.] எந்த மகளை பர்த்தாவுக்கு மிகவும் ப்ரீதிபாத்ரமாயிருக்கவேணு மென்று பிதா விரும்புகிறரோ, அந்த மகளை ஸ்வாதீநக்ஷத்திரத்தில் விவாஹம் பண்ணிக்கொடுக்க வேண்டியது. [நிஷ்ட்யா—ஸ்வாதீ.] அப்படியே அம்மகள் பர்த்தாவின் பரமப்ரீதிக்குப் பாத்திரமாகிறள். அதனுல் அவள் மறுபடியும் பிதாவின் க்ருஹத்தை நோக்கி வருவதே கிடையாது. (இது இந்த ஸ்வாதீ நக்ஷத்ரத்திற்கு நிந்தையா? ஸ்துதியா? என்று விமர்சிக்கப் புகுந்த பாஷ்யகாரர் நிந்தையன்று, ஸ்துதிதானென்று நிஷ்கர்ஷிக்கிறர். பிதா விரும்பியபடி பதியின் அதிசயித ப்ரீதியை விளைப்பதனுல் என்று காரணம் காட்டுகிறர்.) ஜநக சக்ரவர்த்தி ஸீதப பிராட்டியை ஸ்வாதீநக்ஷத்ரத்தில் கந்யகாப்ரதானம் பண்ணியிருப்பர் போலும்; "பிராட்டி பெருமாளைக் கைப்பிடித்த வனந்தரம் ஸ்ரீ மிதிலையை நினையாதாப்போலே" என்று ஆசாரியர்கள் அருளிச் செய்வதனுல். .... .... ... *

4. (2—4.) நாலாவதநுவாகத்தில் * நக்தம் ஜாதா ஸ்யோஷதே. ராமே க்ருஷ்ணே அஸிக்நி ச * என்றேதப்பட்டுள்ளது. இங்கு ராமனையும் க்ருஷ்ணனையும் ப்ரஸ்தாவித்திருப்பதாகச் சிலர் ப்ரஸங்கம் செய்யக் கேட்டதுண்டு. சப்த ச்ரவணமாத்ரத்தைக் கொண்டு அப்படி சொல்லுவது நமக்கும் இஷ்டந்தான். ஆனுல் அங்குப் பொருள் வேறுபடுகின்றது. ராமே க்ருஷ்ணே! என்பவை ஸ்த்ரீலிங்க ஸம்போதந பதங்கள். "சரீரம் ரமணீயம் கரோதீதி ராமா. ஸ்வயம் க்ருஷ்ணவர்ணு" என்று பாஷ்யம். இந்த மந்த்ரம் ஒரு ஓஷதிவிசேஷத்தை விளித்துச் சொல்லுவது. ச்வேத குஷ்ட ரோக விநாசநமந்த்ரமிது. .... .... .... .... .... *

5. (2—6.) இரண்டாவதநுவாகத்தில் * யா வ்யாக்ரம் விஷூசிகா * இத்யாதியான ருக்கை விஷூசிகாவ்யாதி படரும் காலத்தில் ஆவ்ருத்தி பண்ணினுல் நல மென்று பெரியார் கூறுவர். இதன் பொருளாவது, புலி காட்டு நாய் ச்யேநபக்ஷி சிங்கம் ஆகியவற்றுக்கு இந்த வியாதி காண்பதில்லை. ஏனென்றால், உண்டது ஜரிக்காமையினுல் இந்த வியாதி ஏற்படுகிறதென்றும் அவற்றுக்கு ஜீரண சக்தி யுண்டென்றும் பாஷ்யத்திலுள்ளது. இந்த வியாதியானது யஜமானனை விட்டு அகலக் கடவது என்று சொல்லிற்றாகிறது, லௌகிக மருந்துகளைக் காட்டிலும் இத்தகைய வேத வாக்யங்களும் சிறந்த மருந்தென்பது வைதிகர்களின் கொள்கை.

6. (2—7.) பதின்மூன்றாவதநுவாகத்தில் * உதத்யதாச்வச்வியம் * இத்யாதியில் "அக்ரே விக்ஷூ ப்ரதீதயத்" என்று பாடம் ஓதப்பட்டு வருகின்றது. (ஹே அக்நே!) என்று வித்யாரண்ய பாஷ்யமுள்ளது. இரண்டாமஷ்டகத்திற்கு பட்ட பாஸ்கர பாஷ்யம் லுப்தமாகையாலே அவருடைய பாடம் தெரிந்துகொள்ள முடியவில்லை. எங்கும் (அக்ரே) என்கிற பாடந்தான் ஓதப்பட்டு வருகிறது. இங்கு பாஷ்யகாரர்க்கு ப்ரமாதமா? அல்லது பாடம் தவறுதலாக வந்து விட்டதா? என்பது ஆராயத் தக்கது. (அக்ரே) என்பதற்கே (அக்நே) என்று பொருள் ச்சாந்தஸமாகச் சொல்லலாமென்பது ஸமஞ்ஜஸமாகத் தோன்றவில்லை. .... .... .... *

7. மூன்றாமஷ்டகத்தில் முதல் பிரச்னத்தில் நாலாவதநுவாகத்தில் நக்ஷத்திரங்களுக்குச் சிறப்புச் சொல்லி வருகையில் ஸ்வாதீநக்ஷத்ரப்ரகரணத்தில் *வாயுர் வா அகாமயத* என்று தொடங்கிச் சொல்லப்பட்டிருப்பதாவது-எல்லா விடங்களிலும் தட்டுத் தடங்கலில்லாமல் யதேஷ்டமாக ஸஞ்சரிக்கப் பெறவேணுமென்று விரும்பிய வாயுதேவதை ஸ்வாதீ நக்ஷத்ரதேவதையைக் குறித்து இஷ்டி செய்ய, அப்படியே பேறு பெற்றதாக ஓதிற்று. தைத்திரீயோபநிஷத்தில் *பீஷாஸ்மாத் வாதः பவதே* என்று பரமபுருஷனிடத்தில் அஞ்சி நடுங்கிக் கொண்டு வாயு எப்போதும் ஓய்வின்றித் திரிந்து கொண்டிருப்பதாக ஓதப்பட்டுள்ளது. தான் இஷ்டி செய்து அதன் பலனைக் காமசாரம் பெற்றிருந்தால் இஷ்டமானபோது ஓடவும் ஓய்வெடுத்துக் கொள்ளவுங் கூடும்; பரமபுருஷனிடத்தில் அஞ்சி நடுங்க வேண்டிய அவசியமில்லையே யென்று சிலர் கேட்கக்கூடும். ஸமந்வயம் பண்ணி நிர்வஹிக்க வேண்டியது பெரியார்களின் கடமை. .... .... .... .... *

8. மூன்றாவது அஷ்டகத்தின் ஏழாவது ப்ரச்நம் அச்சித்ர மென வழங்கப் பெறும். அதில் மூன்றாவது அநுவாகம் *வி வா ஏஷ இந்த்ரியேண* இத்யாதி. அக்நியில் ஹோமம் பண்ணவேண்டும். அந்தஅக்நியானது அரணியில் நின்றும் மதனம் செய்யப்பட்டுக் கொள்ளப்படவேண்டும். யஜமாநனுடைய கரண பாடவக்குறைவினால் ஸமயத்தில் அது பெற முடியாமற் போனால் லௌகிகாக்நியைக் கொள்ளலாம். அதுவும் கிடைக்காமற்போனால் ஆட்டைக் கொண்டுவந்து அதன் வலது காதில் ஹோமம் செய்வது. ஆட்டின் பாலைக் குடிக்கலாகாது. குடித்தால் செய்த ஹோமம் பாழாய்விடும். ஆடும் கிடைக்காமற் போனால் ப்ராஹ்மணனுடைய வலதுகையில் ஹோமஞ் செய்வது. ப்ராஹ்மணனென்பவன் ஸாக்ஷாத் அக்நியேயாவன். அவனது கையில் ஹோமம் பண்ணினால் அக்நியிலேயே ஹோமம் பண்ணினதாகும். பிராமணனை க்ருஹத்தில் நின்றும் விரட்டக் கூடாது. பிராமணன் கிடைக்காவிடில் தர்ப்பங்களில் ஹோமம் செய்வது. அதுவும் கிடைக்காவிடில் தீர்த்தத்தில் செய்வது. .......இதில் ப்ராஹ்மணனுடைய ஹஸ்தத்திற்கு ஏற்றம் சொல்லப்பட்டிருப்பதை நாம் காப்பாற்றிக் கொள்ளவேணும். கம்பர் தமது ராமாயணத்தில் ஸித்தாச்ரம வர்ணன ப்ரகரணத்தில் குறட் பிரமசாரியைச் சொல்லுகையில் "அனற்படுகையன்" என்கிறார். அது இந்த ச்ருதியைக் கேட்டிருந்ததனாலே போலும். .... .... ... *

9. (3—7.) நாலாவதநுவாகத்தில் *ஸக்ருதாச்சிந்நம் பர்ஹிரூர்ணம்ருது ஸ்யோநம்* என்கிற மந்த்ரம் படிக்கப்படுகிறது. இது பித்ருதர்ப்பணம் செய்கிறவர்களுக்கெல்லாம் கண்டபாடமான மந்திரம். இதன் பொருளாவது ஒரே தடவை கிள்ளப்பட்ட தர்ப்பம்; பஞ்சுபோல் மெல்லியது. ஸுகரமானது. இப்படிப்பட்ட தர்ப்பமே! உன்னைப் பித்ருக்களுக்காகப் பரப்புகிறேன். இங்ஙனம் பரப்பப்பட்ட தர்ப்பத்தில் என்னுடைய பித்ருபிதாமஹப்ரபிதாமஹர்கள் தம்தம் அநுசரர்களோடு கூட வீற்றிருக்கக் கடவர்கள் என்கை. [மந்த்ரார்த்தம் தெரிந்திருப்பது நலம்.]

10. அதிலேயே மேல் ஆறாவதநுவாகத்தில் ஒரு மந்த்ரம்—*யோ ந சபாத் அசபதः* இத்யாதி. சிலரால் நமக்கு நிந்தை நேரும்போது இந்த மந்த்ரத்தைச் சில முறை ஆவ்ருத்தி செய்வது நலமென்று பெரியார் கூறுவர். இதன் பொருளாவது,

நம்மைச் சிலர் நிஷ்காரணமாகவும் நிந்திக்கிறார்கள், ஸகாரணமாகவும் நிந்திக்கிறார்கள்; அவர்களிடத்திலே அஹோராத்ர தேவதைகளானவை நம்முடைய பாபங்களைத் திரட்டிக்கொண்டு போய் வைக்கட்டுமென்கை. ... ... ... *

11. மூன்றாவதஷ்டகம் பன்னிரண்டு ப்ரச்நங்கள் கொண்டதென்றும் ஏழாவது ப்ரச்நம் அச்சித்ரமென்றும், 8, 9ஆம் ப்ரச்னங்கள் அச்வமேதமென்றும் 10, 11, 12ஆம் ப்ரச்னங்கள் காடகமென்றும் மேலையார் சொல்லுவர்கள். அச்வமேதத்தில் மேத்யமான குதிரையை யஜ்ஞபூமிக்குக் கொண்டுவர வேண்டும்போது கொண்டுவர வேண்டியவர்களைச் சொல்லுகிறது.—*யஃ பிதுரநுஜாயாஃ புத்ரஃ. ஸ புரஸ்தாந் நயதி. யோ மாதுரநுஜாயாஃ புத்ரஃ. ஸ பச்சாந்நயதி* இதன் பொருளாவது—யஜமானனுடைய அத்தைமகன் முன்னே பிடித்துக்கொண்டு போகவேண்டியது; அவனுடைய சிறிய தாயார் மகன் பின்னால் தள்ளிக்கொண்டு போகவேண்டியது. [வேதபுருஷன் இப்படி விதித்ததன் காரணத்தைப் பெரியார்களிடம் கேட்டுணர்வது]

12. காடகத்தின் உபக்ரமம் *ஸம்ஜ்ஞாநம் விஜ்ஞாநம்* இத்யாதி. இதில் ஆறுவாக்யங்களைக் கல்யாண பஞ்சாதியாகச் சொல்லிவருகிறார்கள். ஆறாவது வாக்யத்தின் முடிவு (கல்யாணஃ) என்றிருப்பதனால் அதுகொண்டு இதைக் கல்யாண பஞ்சாதியாக வழங்குகிறார்கள். இங்கு ஒரு மருமம் தெரிவிக்கவேண்டியதாகிறது. இந்த ஆறு வாக்கியங்களில் முப்பது நாமங்கள் ஓதப்பட்டிருக்கின்றன. சுக்லபக்ஷ திதிகளும் க்ருஷ்ணபக்ஷ திதிகளுமாகிய முப்பது திதிகளின் நாமங்கள் இவை—என்று அங்கேயே மேலே பத்தாவதநுவாகத்தில் விளக்கப்பட்டுள்ளது. அதன்படி (கல்யாணஃ) என்பது அமாவாஸ்யையின் பெயராகத் தேறுகின்றது. ஆனாலும் அர்த்தத்திலே த்ருஷ்டியில்லாமல், சப்தம் நல்லதாக ச்ரவிக்கிறதென்பதையே கொண்டு இதைக் கல்யாணபஞ்சாதியாக வழங்கி வருகிறார்களென்று கொள்வது. *

13. இதில் கடைசியநுவாகத்தில் வேதங்கள் அனந்தங்களென்பதுபற்றி பரத்வாஜோபாக்யானமொன்று ஓதப்பட்டுள்ளது. [பரத்வாஜோ ஹ த்ரிபிராயுர்ப்பிர் ப்ரஹ்மசர்யமுவாஸ இத்யாதி.] முந்நூறு வருஷம் ஜீவித்திருக்கும்படி தேவேந்திரனருளால் பரத்வாஜமுனிவர் வரம்பெற்றிருந்தார். அந்த முந்நூறு ஆண்டுகளிலும் வேதாத்யயனமே பண்ணிப்போந்தாரவர். ஜீவிதம் முடிந்து சரமதசையானவாறே தேவேந்திரன் வந்து 'மறுபடியும் உமக்கு நூறு பிராயம் கொடுப்பதாக வந்திருக்கிறேன்; இந்த நூற்றாண்டில் என்னசெய்ய விரும்புகிறீர்?' என்று கேட்டான். (கடந்த முந்நூற்றாண்டில் மூன்று வேதங்களை ஓதிமுடித்ததாக எண்ணியிருந்த முனிவர் இப்போது நூறாண்டு கிடைத்தால் நான்காவது வேதத்தையும் ஓதிமுடிக்கலாமென்றெண்ணி) இந்த நூற்றாண்டிலும் வேதமே யோதுவேனென்றார். பிறகு இந்திரன் இதுவரையிலும் பாராத மிகப்பெரிய மூன்று மலைகளைக் காட்டி அவற்றிலிருந்து மூன்று முஷ்டியளவான மண்களை யெடுத்து 'இவையே நீர் முந்நூறு வருஷகாலம் ஓதின வேதமாகும்; மலைமலையாயிருக்கிற வேதங்களை நீர் ஓதினவரல்லீர்; வேதங்கள் அனந்தங்களென்பதைத் தெரிந்துகொள்வீராக' என்று சொல்லி, பிறகு அவர்க்குண்டான நிர்வேதத்தை ஸாவித்ரவித்யோபதேசத்தாலே தீர்த்துச் சென்றனன். [அந்த ஸாவித்ரவித்யை எது? என்பது உபதேச கம்யம்.] ... ... *

14. காடகம் இரண்டாம் ப்ரச்நத்தில் எட்டாவதநுவாகம் [* உசந் ஹ வை வாஜச்ரவஸஸ் ஸர்வவேதஸம் ததௌ * இத்யாதி.] இதில் ஒரு தரும மருமம் சிக்ஷிக்கப் படுகின்றது கேண்மின். இது நாசிகேதோபாக்யான மெனப்படும். தசோப நிஷத்தில் மூன்றாவதான கடோப நிஷத்தின் உபக்ரமமும் இதுவே யாகும். அங்குச் சொல்லுகிற உபாக்கியானம் ஒரு விதம். இங்குச் சொல்வதைக் கேளீர். வாஜச்ர வஸரென்பவர் ஒரு பலனை விரும்பி ஸர்வஸ்வதக்ஷிணைகமான வொரு யாகத்தைச் செய்து ஸர்வஸ்வத்தையும் தானம் பண்ணிக்கொண்டிருந்தார். அவருக்கு நசிகேதஸ்ஸென்று ஒரு மகனிருந்தான். தகப்பன் தக்ஷிணைகள் கொடுத்துக் கொண்டிருக்கையில் இவன் சிறுவனுகையாலே தானும் ஒருவர்க்கு தக்ஷிணையாகக் கொடுபட வேணுமென்றெண்ணித் தந்தையை நோக்கி 'என்னை யாருக்கப்பா! கொடுக்கப் போகிறாய்?' என்ன, தந்தை பதில் சொல்லாமல் வாளாவிருந்தான். மகன் மீண்டு மீண்டும் கேட்டான். அதனால் கோபங்கொண்ட தந்தை 'உன்னை யமனுக்குக் கொடுக்கப் போகிறேன் போ' என்றான். உடனே யமனிடம் போவதாக மகன் எழுந்தான். அப்போது ஆகாசவாணி சொல்லிற்று.—'குமாரனே! யமன் வெளியூர் போயிருக்கும் ஸமயத்தில் நீ அவனிருப்பிடம் சென்று சேர்ந்து மூன்று நாள் ஒன்றும் உட்கொள்ளாமல் உபவாஸமாக இரு. பிறகு யமன் வந்து சேர்ந்து 'நீ இங்கு வந்து எத்தனை நாளாயிற்று?' என்று கேட்பன். மூன்று நாளாயிற் றென்று சொல்லு. முதல் நாள் என்ன புஜித்தாயென்று கேட்பன். உன் பிரஜை களை புஜித்தேனென்று சொல்லு. இரண்டாநாள் என்ன புஜித்தாயென்று கேட்பன்; உன் பசுக்களை புஜித்தேனென்று சொல்லு. மூன்றாநாள் என்ன புஜித்தாயென்று கேட்பன்; உன்னுடைய ஸுக்ருதங்களை புஜித்தேனென்று சொல்லு. (என்று சொல்லிற்று ஆகாசவாணி.) பிறகு அவ்வண்ணமாகவே, யமன் வெளியே போயிருந்தபோது நசிகேதஸ்ஸு யமக்ருஹம் சென்று சேர்ந்து மூன்று நாள் உபவாஸமிருந்து பிறகு யமன் வந்த பிறகு அவ்வாறே வினு விடைகள் நடந்தன. [இதனுல் என்ன தேறிற்று? நமது வீட்டில் ஒருவன் வந்து உபவாஸ மிருந்தால் ப்ரஜா·பசு·ஸுக்ருதங்கள் அழிந்து போய் விடுமென்றதாகத் தேறிற்று.] இதைத் தெரிந்து கொண்ட யமன் மிக்க அநுதாபங்கொண்டு நசிகேதஸ்ஸை வணங்கி மூன்று வரங்கள் வேண்டிக்கொள்ளும்படி சொன்னுன். மீண்டும் தகப்ப னிடம் வந்து சேரும்படிக்கும், இஷ்டாபூர்த்தங்களில் குறையில்லாதபடிக்கும், மறு படியும் தனக்கு ம்ருத்யுவே யில்லாதபடிக்கும் வரங்கள் வேண்டிக்கொண்டு அப்படியே பெற்றான். .... ... ... ... ... *

15. காடகம் மூன்றாவது ப்ரச்நத்தில் * பிதா புத்ரேண பித்ர்மாந் யோநியோநௌ. நாவேதவிந் மநுதே தம் ப்ர்ஹந்தம் * என்று பகவானுடைய விபவாவதாரம் ஓதப் பட்டது. இவ்விரண்டு வாக்யங்களின் பொருளாவது—எம்பெருமான் ஸர்வலோக பிதா; அவன் ஒருவர்க்கும் மகனுகத் தகுந்தவனல்லன்; ஆனுலும் தனக்குப் புத்ர ப்ராயரானவர்களையே பிதாவாகக் கொண்டு * எங்கின்ற யோனியுமாய்ப் பிறக்கிறான். வேதமோதாதவர்கள் அவன் பெருமையை யறியகில்லாரென்கை. ... *

16. தைத்திரீயாரண்யகத்தில் முதல்ப்ரச்நம் மூன்றாமநுவாகத்தில் *யஸ் தித்யாஜ* என்று தொடங்கி நான்கு வாக்யங்களில் ஸ்நேஹத்தின் சிறப்பு (அல்லது) ஸ்நேஹத்ரோஹத்தின் இழிவு கூறப்படுகின்றது. [ய: ஸகிவிதம் ஸகாயம் தித்யாஜ] (தித்யாஜ) என்பது ச்சாந்தஸரூபம். தத்யாஜ என்றபடி. ஒரு பரம ஸாத்விகன் ஒருவனைத் தனக்கு ஆப்த ஸுஹ்ருத்தாகச் சொல்லிக்கொண்டிருக்கும் போது அவன் துர்ப்புத்தியினால் இந்த ஸாத்விகனைக் கைவிட்டிட்டு 'இவன் எனக்கு நண்பனல்லன்' என்று சொல்லிக்கொண்டு திரிவனேல் அந்த மித்ரத்ரோஹிக்கு வேதசாஸ்த்ராத்யயனத்திலும் அதிகாரமில்லை. ஒருக்கால் அவன் அத்யயனம் பண்ணினாலும் அது பாழ்தான். அவனுக்கு ஸுக்ருதபத்ததியே தெரியாதென்கை.

17. அந்த முதல் ப்ரச்நத்திலேயே ஐந்தாமநுவாகத்தில் ருத்ரனைப்பற்றி ஓர் இதிஹாஸம் ஓதப்பட்டுள்ளது. திருவாய்மொழியில் *உயர்வற வுயர்நலப் பதிகத்தில் எட்டாம் பாட்டில் *புரமொரு மூன்றெரித்து* என்றவிடத்து ஈடுமுப்பத்தாறாயிரத்தில்.

"தான்பூட்டின நாணி தன்கழுத்தை யறுத்துக்கொண்டு போகா
தொழியும்போதும் ஈச்வரன் அந்தராத்மாவாய் நிற்கவேணும்"

என்கிற ஸ்ரீஸூக்தி காண்கிறது. ருத்ரன் தான் பூட்டின நாணி தன்கழுத்தை யறுத்துக்கொண்டு போனகதை எங்குள்ளதென்றால் இங்கேயுள்ளது. இங்கு [*விச்வே தேவா விப்ரஹரந்தி* என்று தொடங்கிச் சொல்லப்பட்ட இதிஹாஸமாவது; தேவர்கள் ஆயுதங்களைக் கொண்டு போர்புரிய ஆயத்தமாயினர். ருத்ரன் தன்னுடைய வில்லை ஊன்றிக்கொண்டு நின்று [நைவ தேவோ ந மர்த்ய:. ந ராஜா வருணோ விபு:. நாக்நிர் நேந்த்ரோ ந பவமாந:. மாத்ருக் கச்சந வித்யதே.] தேவர்களோ மனிதர்களோ ராஜாக்களோ வருணனோ அக்னியோ இந்திரனோ வாயுவோ யாரானாலும் ஸரி; என்னைப் போன்றவர்கள் யாருமே கிடையார்கள் என்றான். இப்படிச் சொன்னவன் ருத்ரன். ஸாயணபாஷ்யத்தில் "ஸோயம் விச்வைர் தேவை ருத்கோஷிதச் சப்த:" என்றுள்ளது. இது தவறென்றும், ருத்ரன் உத்கோஷித்த சப்தராசிகளிவை யென்றும் வேதாந்த கௌஸ்துபகாரர் உபபத்திகளுடன் எழுதியுள்ளார். அது தான் பொருத்தமாகக் காண்கிறது. மேலுள்ள கதையும் அதையே நிலைநாட்டுகின்றது. [திவி அஸ்ய ஏகா தநுரார்த்நி:] இந்த ருத்ரதநுஸ்ஸின் ஒருநுனி ஆகாசத்தை யளாவியுள்ளது. [ப்ருதிவ்யாம் அபரா ச்ரிதா] மற்றொருநுனி பூமியின் கீழே தாக்கியுள்ளது. ஜகதுபஸம்ஹாரமே நடக்கும்போல் தோன்றநின்றது. அப்போது இந்திரனுக்கு ஓர் உபாயம் தோன்றிற்று. என்ன செய்தானென்னில், [தஸ்யேந்த்ரோ வம்ரிரூபேண. தநுர்ஜ்யாம் அசிநத் ஸ்வயம்.] இந்திரன் செல்லு என்கிற ஜந்துக்களின் வடிவுகொண்டு (கீழே பரவி) அந்த வில் நாணியை அறுபட்டதாம்படி செய்துவிட்டனன். செல்லு மென்றதனால் நாணி இற்றொழிந்ததென்கை. பிறகு என்னாயிற்று? [ததிந்த்ரதநுரித்யஜ்யம். அப்ரவர்ணேஷு சக்ஷதே.] இந்த வில் ஆகாசத்தில் போய் விழுந்திட்டது. சில ஸமயங்களில் மேக மண்டலத்தில் வில் ரேகை நாணியின்றிக்கே காணப்படுவதுண்டே, அதை இந்திர தநுஸ்யென்று சொல்லுகிறார்கள். செல்லு வடிவுகொண்ட இந்திரனால் அறுபட்ட தநுஸ்ஸென்றும் அதனால்தான் நாணியில்லாமல் தென்படுகிறதென்றும் சொல்லுகிறார்கள். இந்த

வில் அறுபட்டு எழும்பிப் போம்போது வெறுமனே போகவில்லை; [ருத்ரஸ்யத்வேவ தநுரார்த்நீ:. சிர உத்பிபேஷ.] ருத்ரன் தலையைப் பொடிபண்ணிவிட்டுப் போயிற்று. பிறகு அந்தத் தலை ஒட்டப் படுகிற வரலாறு உள்ளது..... .... .... *

18. ஆரண்யகம் இரண்டாம் ப்ரச்நம் இரண்டா மநுவாகம் ஸந்த்யாவந்தனத்தின் ஆவச்யகத்வத்தைத் தெரிவிப்பதற்காகப் பழங்கதை யொன்று சொல்லுகிறது. [ * ரக்ஷாம்ஸி ஹ வா புரோநுவாகே * இத்யாதி.] முற்காலத்தில் ராக்ஷஸர்கள் தீவ்ரமான தவமொன்றைச் செய்தார்கள். அதனால் உகப்படைந்த ப்ரஜாபதியானவர் 'நீங்கள் தவஞ்செய்தது போதும், வரம் வேண்டிக்கொள்ளுங்கள் என்றார். நாங்கள் ஸூர்யனோடு யுத்தம் செய்யவேணும்; இந்தவரம் கொடுப்பீராக' என்றார்கள் அரக்கர்கள். அப்படியே யநுமதி யளித்தார் ப்ரஜாபதி. ஸூர்யன் உதித்ததுமுதல் அஸ்தமிக்குமளவும் யுத்தம் நடந்து கொண்டிருக்கிறது. அந்தணர்கள் காயத்ரியை ஜபித்து அளிக்கும் அர்க்கிய தீர்த்தத்தினால் அவர்கள் மாண்டொழிகிறார்கள்.

நம்மாழ்வாருடைய முதற்பிரபந்தமான திருவிருத்தத்தில் (82) * எரிகொள் செந்நாயிறு * என்கிற பாட்டில் "மீண்டவற்றுள் எரிகொள் செந்தீவீழ் அசுரரைப் போல" என்பதனால் இந்த வைதிக கதை அநுஸந்திக்கப் பட்டுள்ளது. அவ்விடத்தில் அடியேனுடைய திவ்யார்த்ததீபிகையில் எழுதியுள்ளதாவது—"......மந்தேஹாருணமென்னும் த்வீபத்தில் வாழும் மந்தேஹரென்னும் அசுரர்கள் உக்ரமான தவத்தைச் செய்து பிரமனிடத்து வரம்பெற்று அதனால் செருக்கடைந்து எப்பொழுதும் ஸூர்யனை வளைந்து எதிர்த்துத் தடுத்துப் போர்செய்கின்றனரென்றும், அந்தணர் முதலியோர் ஸந்தியா காலங்களில் மந்த்ர பூர்வகமாகக் கையிலெடுத்துவிடும் அர்க்க்ய தீர்த்தங்கள் வஜ்ராயுதம் போலாகி அவர்கள்மேல் விழுந்து அவர்களை அப்பால் தள்ளி ஸூர்யனுடைய ஸஞ்சாரத்துக்குத்தடையில்லாதபடி செய்கின்றனரென்றும், அந்தணர் முதலியோர் செலுத்தும் அர்க்கியத்தின் ஆற்றலால் ஸூர்ய மண்டலத்தினிடையே ஒரு செந்தீ யெழுந்து ஜ்வலிக்க (விளக்கில் விட்டில் போல்) அத்தீயில் அசுரர்கள் விழுந்து மாண்டுபோகின்றனரென்றும் ஓதப்பட்டுள்ளது." என்று.

ஆசார்ய ஹ்ருதயத்தில் (53.) "புரவியே ழொருகாலுடைய தேரிலே" இத்யாதி சூர்ணையின் வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் அருளிச் செய்திருப்பது—"மந்தேஹரென்பார் சில ராக்ஷஸர்; ஸந்த்யா ஸமயத்திலே ஆதித்ய ரதத்தைச் சுற்றிக்கொண்டு போகவொட்டாதே ஆதித்யனோடே மஹாயுத்தம் பண்ணி அவனைக் கொல்லத் தேடுவர்களாய், அவ்வளவிலே ப்ராஹ்மணர் காயத்ரியபிமந்த்ரிதைகளான அப்புக்களை அர்க்க்ய ரூபேண ஊர்த்வமாகப்ரக்ஷேபிக்க, அந்த காயத்ரீபூத—அர்க்க்ய சக்தியாலே ஆதித்ய மண்டலத்திலே ஜ்வலித்துக் கொண்டு தோற்றின சிவந்த அக்நியிலே விழுந்து முடிந்து போவர்கள்...." .... *

★ வேதத்தில் ப்ராஹ்மணத்தில் பதினெட்டு தலைக்கட்டிற்று. ★

---

குறிப்பு:—வேதத்தில் அசீதியிலும் ஓதப்பட்டுள்ள உபாக்கியானங்களை யெல்லாம் விடாமல் திரட்டித் தனி நூலாக விரைவில் வெளியிடுவோம். .... *

# 3. ஸம்ஸ்க்ருத வேதாந்த மஹார்த்தங்கள் பதினெட்டு.

1. [சாரீரக மீமாம்ஸை முதலான வேதாந்த சாஸ்த்ரங்களில் பரப்ரஹ்மாதி ஸாமாந்ய சப்தங்களாலே விவக்ஷிதன் ஸ்ரீமந்நாராயணனே யென்பதும், வேதாந்த சாஸ்த்ரப்ரமேயம் விசிஷ்டாத்வைதமே யென்பதும் ஸாரஸம்க்ஷேபமாக விவரிக்கப் படுகிறது.] அதில் ஜகத்காரண வஸ்துவாதிகளான வேதாந்த வாக்யங்களெல்லாம் ஸ்ரீமந் நாராயணனிடத்திலே தான் பர்யவஸிக்கின்றன வென்று ஸூத்ரகாரர் தாமே ஸித்தாந்தம் செய்திருக்கிறு ரென்பதை முன்னம் நிரூபித்துக் காட்டுகிறேன். "அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா" என்று ப்ரஹ்ம விசாரத்தை ப்ரஸ்தாவித்து "ஜந்மாத்யஸ்ய யத:" என்கிற அடுத்த ஸூத்ரத்தினாலே, 'எந்த வஸ்துவினிடத்தில் நின்றும் ஜகஜ் ஜந்ம ஸ்திதி லயங்கள் ஆகின்றனவோ அது ப்ரஹ்மம்' என்று ப்ரஹ்ம லக்ஷணம் காட்டினார் வியாஸர். வேதாந்தங்களில் ஜகத்காரண வஸ்துவைத் தெரிவிக்கின்ற வாக்யங்கள் ஒரே விதமாக இல்லை. பரஸ்பர விருத்தங்கள் போல் தோன்றநின்றன என்பது பிரஸித்தமான விஷயம். ஏதோ ஒரு வஸ்துதான் ஜகத்காரணமாக இருக்க முடியுமே யொழிய பல வஸ்துக்கள் அப்படி யிருக்க முடியாதென்கிற நிச்சயம் ஆவச்யகமானது. பரஸ்பர விருத்தங்கள்போல்தோன்றநின்ற காரண வாக்யங்களாலே இந்த நிச்சயம் எப்படி உண்டாகுமென்று தோன்றக்கூடிய சங்கையை ஸூத்ரகாரர் பரிஹரித்தேயாக வேண்டும். பரிஹரித்தே யிருக்கிறார். எப்படி பரிஹரித்திருக்கிறாரென்றால், ஸகல காரண



ஸ்ரீரங்கத்தில் பிரபல தருமங்கள் செய்திருக்கிற
ஸ்ரீ உ. வே. குவளகுடி சிங்கமையங்கார்ஸ்வாமி (கீர்த்திமூர்த்தி)

வாக்யங்களுக்கும் ஐககண்டியத்தைக் காட்டிப் பரிஹரித்திருக்கிறார். ஸாகாங்க்ஷ வாக்யங்களுக்கு நிராகாங்க்ஷ வாக்யங்களில் பர்யவஸானம் நியாயமென்பது யாவருமிசைந்ததொன்றாம். இதையே நெஞ்சில்கொண்ட வ்யாஸமஹர்ஷியானவர் ஈக்ஷத்யதிகரணம் முதலானவற்றால் காரண வாக்யங்கள் எல்லாவற்றிற்கும் புருஷஸூக்த ப்ரதிபாத்யனான நாராயணனிடத்தில் பர்யவஸாநத்தைக் காட்டியுள்ளார். இதுதன்னை விளக்கமாக உபபாதிக்கிறேன் கேண்மின். .... .... ... *

2. ஜகத்காரண வஸ்துவை ப்ரஸ்தாவிக்கின்ற வாக்யங்கள் காரணவாக்யமெனப்படும். அந்த வாக்யங்களை ஸாகாங்க்ஷ வாக்யங்களென்றும், நிராகாங்க்ஷ வாக்யங்களென்றும் இருவகையாகப் பிரித்துக்கொள்ள வேண்டியது முதற் காரியம். ஸாகாங்க்ஷ வாக்யங்களென்பவைதாமும் இரு வகையாயிருக்கும். 1. ஸாமாந்ய சப்தத்தோடு கூடியிருந்து விசேஷ ப்ரதிபத்தியை அபேக்ஷித்திருக்குமவை. 2. அநுவாத ரூபமாய்க்கொண்டு புரோவாதத்தை அபேக்ஷித்திருக்குமவை — என்று. "ஸதேவஸோம்ய இதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்" — "ஸேயம் தேவதைக்ஷத" இத்யாதி வாக்யங்களில் 'ஸத்' என்றும் 'தேவதா' என்றும் ஸாமாந்ய சப்தங்களேயிருக்கையாலே இவை விசேஷ ப்ரதிபத்தி ஸாகாங்க்ஷங்களென்பது ஸ்பஷ்டம். "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே" இத்யாதி வாக்யங்கள் யச் சப்த கடிதங்களாயிருப்பதுபற்றி அநுவாத ரூபங்களாகையாலே புரோவாத ஸாகாங்க்ஷங்களென்பதும் ஸ்பஷ்டம். ஸாகாங்க்ஷ வாக்யங்களில் கீழ்ச்சொன்ன இரண்டுவகைகள் தவிர மூன்றாவது வகையும் ஒன்று சொல்ல வேண்டியதாகிறது; அதாவது, அயோக்யமான அர்த்தத்தைத் தெரிவிக்கும் வாக்யங்கள் யோக்யார்த்த ப்ரதிபத்தி ஸாகாங்க்ஷமாயிருப்பதாம். ப்ரதர்தந வித்யையில் "மாமுபாஸ்வ ஏததேவாஹம் மநுஷ்யாய ஹிததமம் மந்யே" என்று இந்திரன் சொன்ன வாக்யம் போன்றவை இந்த வகுப்பில் சேரக் கடவன. ஆக மூவகுப்பாகப் பிரியலுற்ற ஸாகாங்க்ஷங்களான காரண வாக்யங்கள் வஸ்துவிசேஷத்தை நிர்ணயிப்பதில் ஸ்வதந்திரமாக அசக்தங்களாகையாலே நிராகாங்க்ஷங்களான வாக்ய விசேஷங்களைக் கொண்டே வஸ்து விசேஷத்தை நிர்ணயிக்க வேண்டியதாகிறது. யோக்யார்த்த விசேஷ ப்ரதிபாதகங்களாய்க் கொண்டு இதர வாக்யங்களை எதிர்பாராத வாக்யங்களே நிராகாங்க்ஷ வாக்யங்களென்று தேறிற்று. .... .... .... .... *

3. *ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாந:* இத்யாதி வாக்யங்களே அப்படிப்பட்டவை என்று ஸாரஜ்ஞர்கள் நிஷ்கர்ஷித்துள்ளார்கள். மேலே காட்டிய வாக்ய விசேஷத்தில் ஸாமாந்ய சப்தம் சேர்ந்திருக்கவில்லை. அநுவாத ரூபத்வமுமில்லை; அயோக்யார்த்த ப்ரதிபாதநமுமில்லை. ஸத், ப்ரஹ்ம, ஆத்ம, தேவதா இத்யாதிகளான பதங்களிருந்தாலன்றோ ஸாமாந்ய சப்தம் சேர்ந்திருப்பதாக ஆகும். அவை இல்லையே. யச்சப்த கடிதமாயிருந்தாலன்றோ அநுவாத ரூபமாக ஆகும். அதுவுமில்லையே. அயோக்யார்த்த ப்ரதிபாதகத்வமில்லாமையோடு கூடின யோக்யார்த்த ப்ரதிபாதகத்வமே யுள்ளதென்பது நிரூபிக்கப்பட வேண்டியதாக நிற்கையாலே அதை நிரூபிக்கிறேன். சாரீரக மீமாம்ஸையில் சாஸ்த்ராரம்ப ஸமர்த்தநார்த்தமான சதுஸ்ஸூத்ரீ முடிந்ததும் ஐந்தாவது அதிகரணம் ஈக்ஷத்யதிகரணம்.

இதில் விசேஷித்துக் குறிக்கொள்ளத்தக்க ஸூத்ரங்கள் இரண்டு; "தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்" "கதிஸாமாந்யாத்" என்னுமிவை. ஸாதாரணமான ஸச்சப்தத்தையும் தேவதா சப்தத்தையும் கொண்டிருக்கிற ஸத்வித்யையானது புருஷஸூக்த ப்ரதிபந்நனை ஸ்ரீமந் நாராயணன் பக்கலிலே பர்யவஸிப்பதாக இவ்விரண்டு ஸூத்ரங்களாலும் காட்டப்படுகிறது. "தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்" என்கிற ஸூத்ரத்தின் பொருளை முன்னம் தெரிந்து கொள்ளவேணும். "தந்நிஷ்டஸ்ய" என்கிற விடத்துள்ள தச்சப்தத்தினால்—ஸூத்ரகாரர் கருதிய விஷய வாக்யத்திலுள்ள ஸச்சப்தவாச்யமான வஸ்து கொள்ளப்படுகிறது. ஆகவே, ஸத்தை உபாஸிப்பவனுக்கு என்பதாகப் பொருள் தேறிற்று. ஸத்தை உபாஸிப்பவனுக்கு முக்தி கிடைப்பதாக ஓதப்படுவதால் ப்ரக்ருத ஸச்சப்த வாச்யமான வஸ்து ப்ரதானமாக மாட்டாது என்றதாக ஸூத்ரார்த்தம் தேறும். 'ப்ரதாநந்தான் ஜகத் காரணம்' என்பவர்களை நிரஸிப்பதன்றோ ப்ரஸ்துதம். புருஷஸூக்தத்திலும் உத்தர நாராயணத்திலும் "தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி. நாந்ய: பந்தா அயநாய வித்யதே" என்றும், "நாந்ய: பந்தா வித்யதே அயநாய" என்றும் மோக்ஷோபாயமான உபாஸநத்திற்கு இலக்காகுந்தன்மை நாராயணனுக்கே ஓதப்பட்டுள்ளது. இந்த ஸத்வித்யா ப்ரகரணத்திலும் [அதாவது, ச்சாந்தோக்யத்தில்] "ஆசார்யவாந் புருஷோ வேத; தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே" என்று ஸதுபாஸனமே மோக்ஷோபாயமாகச் சொல்லப்பட்டது. இந்த ச்ருதி வாக்யத்தின் பொருளாவது. எவனுக்கு உபதேஷ்டாவான ஆசார்யன் இருக்கிறானோ அவனே ப்ரஹ்ம வித்தாவான். சரம சரீரத்திலிருந்து விடுபடுமளவே அவனுக்குக் கால தாமதம்; சரம சரீரம் விழுந்தவுடனே ஸச்சப்த நிர்திஷ்டனாய் ஜகத் காரண பூதனை பரம புருஷனை அடைகின்றான். [ஸதுபாஸன நிஷ்டனுக்கு சரீரம் விழுமளவுதான் மோக்ஷப்ராப்தியில் தாமதம்; சரீரம் தொலைந்தவுடனே முக்தனாகிறான்] என்பதாம். இதனால் நாராயணனே ஸச்சப்த வாச்யனென்று அறுதியிடப்படுவதனால் ப்ரக்ருதமான ஸத்து ப்ரதாநமன்று என்றதாக ஸூத்ர தாத்பர்யம் தேறுகிறது. "தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி" இத்யாதிகளான உதாஹ்ருத வாக்யங்களாலே நாராயணோபாஸனந்தான் மோக்ஷோபாயமென்று நிச்சயிக்கப்பட்டவளவில் *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* என்று ஸூத்ர மியற்றின மஹர்ஷியானவர் நாராயணோபாஸகனையே விவக்ஷித்தாராகிறார் என்று நிர்ணயிப்பதில் தட்டுண்டோ? ... *

4. கீழே நாம் விவரித்த விஷயத்தில் பிறர் சொல்லக்கூடியதொன்றுண்டு; அதாவது; *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசமாகிற ஹேதுவைக்கொண்டு ப்ரதாநம் ஜகத்காரணமன்று என்று நிரஸிப்பது மட்டுமே இங்கு ஸூத்ரகாரருக்கு உத்தேச்யமானது; நாராயணனே ஜகத்காரணபூதனென்று ஸ்தாபிப்பதில் இங்கு நோக்கே கிடையாது. சப்தத்தினால் கிடைப்பதற்கு மேற்படக் கொள்ளத்தகாது என்று. (இதற்கு மறுப்பு) இங்ஙனம் சொல்வது தவறு. இதர ப்ரதிக்ஷேபத்தில் மட்டுமே ஸூத்ர தாத்பர்யமென்று கொண்டால் ந்யூநதையாகும். இந்த வேதாந்த சாஸ்த்ரம் எதற்காக ஆரம்பிக்கப் பட்டதென்று பார்க்கவேணும்; முமுக்ஷுவானவனை மோக்ஷோபாய பூதமான வஸ்துவை உபாஸிப்பதில் ப்ரவர்த்திக்கச் செய்வதன்

பொருட்டு விசிகித்ஸையற்ற ப்ரஹ்மஜ்ஞாநோத்பாதநத்தின் பொருட்டு சாஸ்த்ரம் ஆரம்பிக்கப்பட்டது. சாஸ்த்ராரம்பத்திற்குப் பலன் இதுதானென்பதை வேதாந்திகள் யாவரும் ஸமரூபமாக இசைந்தே தீருவர்கள். 'ஜகஜ்ஜந்மாதி காரணம் ப்ரஹ்ம' என்று ப்ரஹ்ம லக்ஷணம் சொல்லி ப்ரதாநாதிகள் ஜகத்காரணமன்று என்று கண்டித்த வளவால் விசிகித்ஸையற்ற ப்ரஹ்மஜ் ஞாநோத்பாதனம் செய்ததாக ஆய்விடுமோ? ஒருநாளுமாகாது. ப்ரஹ்ம ருத்ராதிகளிடையில் எந்த தேவதை ஜகஜ்ஜன்மாதி காரணம்? என்கிற விசிகித்ஸை பரிஹரிக்கப்படாத வளவில் நிஸ்ஸம்சய ப்ரஹ்மஜ்ஞாநோத்பாதநம் செய்யப்பட்டதாக ஆகமாட்டாதென்பதைப் பேதையருமறிவர். ஏவஞ்ச, இன்ன தேவதைதான் ஜகத்காரணமென்று நிஸ்ஸந்தேஹமாகத் தெரிவிக்கப்படாத வளவில் சாஸ்த்ராரம்ப ப்ரயோஜனம் தேறாமையாலே ந்யூநதைக்குப் பரிஹாரமே ஏற்படாது. ஆகவே, ஜகத்காரணபூத ப்ரஹ்ம சப்த வாச்யமான தேவதா விசேஷம் இன்னதென்று நிர்த்தாரணம் செய்வதிலும் சாஸ்த்ரம் தத்பரமானது என்று இசைந்து தீர வேண்டும். * தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத் * என்கிற ஹேதூக்தியின் ஸ்வாரஸ்யத்தினாலும் தேவதா விசேஷ நிர்ணயத்தை ஸூத்ரகாரர் செய்யக் கருதியுள்ளாரென்பது செவ்வனே விளங்காநின்றது. மோக்ஷோபாய பூதமான வஸ்துவுக்கு உபாஸந விஷயத்வம் யாதொன்று இங்குச் சொல்லப்பட்டிரா நின்றதோ இது ப்ரதாநாதி ப்ரதிக்ஷேபக மாத்ரமேயன்று, தேவதா விசேஷ விஷயகத்வத்தை ஸாதிப்பதாகவுமாகின்றது. * தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி * என்கிற ச்ருதி வாக்கியத்திலுள்ளதான தச்சப்தமானது எந்த தேவதா விசேஷத்தைச் சொல்லுகின்றதோ, அதனையே * தந்நிஷ்டஸ்ய * என்கிற ஸூத்ரத்திலுள்ள தச்சப்தமும் சொல்லக்கடவதென்பது திண்ணம். * வாஸுதேவ மநாராத்ய கோ மோக்ஷம் ஸமவாப்ஸ்யதி * என்பது முதலான பல ப்ரமாண வசனங்களை இங்கு அநுஸந்திப்பது. ஆக, மோக்ஷ ஹேதுத்வமாகிற லிங்கத்தினால் ஸச் சப்தத்தின் பொருளை நிஷ்கர்ஷிப்பவரான வியாஸ முனிவர் தமது ஸூத்ரத்தில் நாராயணனையே கருதினாரென்பது நிச்சயம்.

5. ஸச்சப்த வாச்யன் நாராயணனே என்பது மற்றொரு ப்ரகாரத்தாலும் நிர்ணயிக்கத்தக்கதாம். அதாவது, புருஷ ஸூக்தத்திலும், உத்தர நாராயணத்திலும் *ஸர்வாணி ரூபாணி விசித்ய தீரः. நாமாநி க்ருத்வா அபிவதந் யதாஸ்தே* என்பதனால் நாம ரூப வ்யாகர்த்தாவாக இருக்குந் தன்மை சொல்லப்பட்டது. இது ஸத்வித்யா ப்ரகரணத்திலும் *ஸேயம் தேவதா இமாஸ் திஸ்ரோ தேவதா அநேந ஜீவேநாத்மநா அநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரோத்* என்றோதப்பட்டிருப்பதானது ஸச்சப்தவாச்யன் நாராயணனே என்பதற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாகும். ஈக்ஷத்யதிகரணத்திலிருந்து மேலே நாமெடுத்துக் காட்டின இரண்டு ஸூத்ரங்களில் * தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத் * என்கிற முந்தின ஸூத்ரத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுமவை சொன்னோம். இனி * கதிஸாமாந்யாத் * என்கிற அடுத்த ஸூத்ரத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். [கதிஸாமாந்யாத்.] கதியாவது ப்ரவ்ருத்தி; அதாவது அர்த்த போதகத்வம். [ஸாமாந்யாத்] அது ஸமாநமாயிருக்க வேண்டியது ஆவச்யகமாகையாலே என்று பொருள். காரண வாக்யங்களெல்லாம் ஒரு மிடறாயிருக்க

ப்ரஸ்தாவம் கீதையில் இல்லாமற் போகவில்லை. (7-20) * காமை ஸ்தை ஸ்தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே அந்யதேவதா: * என்று தொடங்கிச் சொல்லி வருகையில் * அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம் * என்று தலைக் கட்டப்பட்டுள்ளது. இந்த ச்லோகத்தின் பாஷ்யத்தின் முடிவில் சங்கராசாரியர் எழுதியுள்ள வாக்கியம் பரம பக்தர்களை அவசமாகவே கண்ணீர் பெருக்க வைக்கின்றது. அவ்விடத்திலுள்ள வாக்கியமிது காணீர்: *ஏவம் ஸமாநே அப்யாயாஸே மாமேவ ந ப்ரபத்யந்தே அநந்தபலாய; அஹோ கலு கஷ்டதரம் வர்த்ததே இத்யநுக்ரோசம் தர்சயதி பகவான் * என்று. ஸ்ரீமந்நாராயணனை பஜிப்பவர்களுக்கே அநந்தாக்ஷயபலன் பெறுவதற்கு அவகாசமுள்ளதென்று அறிந்தவர்களுங்கூட க்ஷுத்ர பலன்களை விரும்பி தேவதாந்தரபஜனம் செய்கிறார்களே! என்று பகவான் தானே கண்ணீர் விட்டழுது கதறுவதாக ஸாக்ஷாத் கரித்தன்றோ சங்காராசாரியர் இதை யெழுதியுள்ளார். .... .... .... *

9. பகவத் கீதை ஆறுமத்யாயத்தில் முடிவான சுலோகமிது. *யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா, ச்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத:* என்பது. இங்கு சங்கர பாஷ்ய பங்க்தி வருமாறு—* யோகிநாமபி ஸர்வேஷாம் ருத்ராதி த்யான பராணாம். மத்கதேந— மயி வாஸுதேவே ஸமாஹிதேந, அந்தராத்மநா — அந்த:கரணேந, ச்ரத்தாவாந்—ச்ரத்ததாந ஸ்ஸந், பஜதே-ஸேவதே யோ மாம், ஸ மே-மம யுக்ததம:—அதிசயேந யுக்த:, மத:—அபிப்ரேத:* என்று. இதற்கு விவரணம் அநபேக்ஷிதம். பக்ஷபாத மற்றவர்கள் நற்றெளிவு பெறுவர்கள்.

10. ஆதி சங்கராசார்யர் ஸஹஸ்ர நாம பாஷ்யத்திலும் பல பல இதிஹாஸங்களை யெடுத்துக்காட்டி நாராயண பாரம்யத்தைத் திடப்படுத்தியுள்ளார். விஷ்ணுவின் தாழ்வையோ, தேவதாந்தரத்தின் உயர்வையோ ஓரிடத்திலும் அவர்காட்டினதில்லை. கேசவநாம பாஷ்யத்தில் * கோ ப்ரஹ்மேதி ஸமாக்க்யாத ஈசோஹம் ஸர்வதேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவாந் * என்று சொல்லிக் கொண்டே சிவபெருமான் இந்த கேசவ நாமத்தை ஸமர்ப்பித்ததாக ஹரி வம்சத்தில் சொல்லப்பட்டுள்ள இதிஹாஸத்தை உதாஹரித்துள்ளார் பகவத்பாதர். (அர்க்க:) என்னும் திருநாமத்தின் பாஷ்யத்தில் * ப்ரஹ்மாதிபி: பூஜ்யதமைரபி அர்ச்சநீயத்வாத் அர்க்க:* என்ற விவரணம் காட்டினர். இங்கு ஆதி சப்தத்தால் முந்துற முன்னம் க்ரஹிக்கக் கூடியவர் பார்வதீபதியல்லவோ? ஏன்? *ஸ ப்ரஹ்மா ஸ சிவ:* என்றோதுகிற வேத புருஷன் பிரமனுக்கடுத்தபடி சிவபிரானைச் சொல்லி வைத்திருப்பது பிரஸித்தமன்றோ? [அமிதாசந:] என்னும் திருநாமத்தின் பாஷ்யத்திலும் ஸம்ஹாரஸமயே விச்வமச்நாதீதி அமிதாசந:'' என்று விவரித்தார் பகவத் பாதர் சிவபெருமான் விச்வ பஹிர்ப்பூதனல்லனே. * நளிர்மதிச் சடையனும் நான்முகக் கடவுளும் * என்கிற திருவாசிரியப் பாசுரமும் இங்கு நினைக்கத் தக்கது. *அத்தா சராசரக்ரஹணாத் * என்கிற ஸூத்திரத்தில் க்ருத்ஸ்நமான சராசரத்தையும் உண்டவனென்று நிர்ணயிக்கப்பட்ட நாராயணன் சிவபெருமானை விட்டிட்டானென்ன ப்ரஸக்தி யில்லையே. உட்கொள்ளப்பட்டவர்களில் சிவபெருமானே முதல்வ

தாவதுச்யதே யோஸௌ நாராயண: ப்ரஸித்த: பரமாத்மா ஸர்வாத்மா இதி, தத் ந நிராக்ரியதே. யதபி தஸ்ய பகவத: அபிகமநாதிலக்ஷணமாராதநம் அஜஸ்ர மநந்ய சித்ததயா அபிப்ரேயதே, ததபி ந ப்ரதிஷித்யதே; ச்ருதி ஸ்ம்ருத்யோரீச்வரப்ரணிதாநஸ்ய ப்ரஸித்தத்வாத்" என்பன அவருடைய பாஷ்ய பங்க்திகள். இவற்றால், ஸ்ரீமந்நாராயணனுக்கே பாரம்ய ப்ரதிஷ்டாபநத்தில் பகவத் பாதர் ஊக்கமுடையவ ரென்பது தேறிற்றென்னுமிடம் மறக்கத் தக்கதன்று. ... ... *

7. ஈச்வராதி ஸாமாந்ய சப்தங்களுள்ள விடங்களில் வாஸுதேவ நாராயணாதி விசேஷ சப்தங்களையிட்டு வியாக்கியானம் செய்யத் தொடங்கினவரும் ஆதி சங்கரரேயாவர். மேலே யெடுத்துக் காட்டின * உத்பத்த்யஸம்பவாதிகரண பாஷ்ய பங்க்தியில் "பகவதோ நாராயணஸ்ய அபிகமநாதிலக்ஷண மாராதநமஜஸ்ரம்" என்ற விடத்தில் "(அநந்யசித்ததயா)" என்றெழுதப்பட்டுள்ளதில் இதாநீந்தனர்கள் கண்மூடிகளாயிருக்கின்றனர். ருத்ராதிகளான அந்யர்களிடத்திலும் சித்தத்தை வைத்துச் செய்யப்படுகிற ஸ்ரீமந்நாராயணாராதநம் அநந்ய சித்தக்ருதமாக எப்படி யாகுமென்பதை அவர்கள் ஆலோசிக்க மாட்டிற்றிலர். நாராயணனைப் பரிவாரத் தோடுங்கூட ஆராதிப்பதும் சிந்திப்பதும் செய்தால் இது அநந்யசித்தத்வத்திற்கு விரோதமாகுமோ! என்று அவர்கள் கேட்கக்கூடும். ருத்ராதிகளிடத்தில் ஸ்ரீமந் நாராயண பரிவாரத்வ ப்ரதிபத்தி குறையற்றதாகில் குசலமேயாகுமிவர்களுக்கு. ஆதி சங்கரர் விஷ்ணு பக்தரா? சிவ பக்தரா என்று விசாரித்து நிர்ணயிக்க வேண்டுவது அவசியமானது. ச்ருதீதிஹாஸ புராணாதி ஸமஸ்த ப்ரமாண விசேஷங்களுள் பகவத்கீதையே முன்னணியில் நிற்கின்றதென்பதில் யார்க்கும் விவாத மிராது. எம்பெருமான்தானே சோதிவாய் திறந்து பணித்ததென்கிற மிக்க சிறப்பன்றோ இதற்குள்ளது. அப்பெருமான் ஸ்ரீமந்நாராயணனே யென்றும் ஸ்ரீமஹா விஷ்ணுவே யென்றும் இதில் ஸகல வைதிகர்களும் ஏக கண்டர்களே யாவர். இதில் விப்ரதிபத்தி கொண்ட வைதிகர் ஒருவருமிலர். இத்தகைய நூலில் ஸ்ரீமஹா விஷ்ணுவின் பரத்வமும் தேவதாந்தரங்களின் அவரத்வமும் அடிக்கடி விளக்கப்பட்டுள்ளது. (10-8) * அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே * என்ற விடத்தில் சங்கர பாஷ்யபங்க்தி இது காணீர்;—" அஹம் பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்க்யம், ஸர்வஸ்ய ஜகத: ப்ரபவ:—உத்பத்தி:; மத்த ஏவ ஸ்திதிநாசக்ரியாபலோபபோக லக்ஷணம் விக்ரியாரூபம் ஸர்வம் ஜகத் ப்ரவர்த்ததே" இத்யாதி. மூலத்தில் நாராயண பதமோ விஷ்ணுபதமோ காணப்படாத விடங்களிலெல்லாம் நியமேந விஷ்ணு நாராயண வாஸுதேவ பதங்களை யிட்டே பாஷ்யமியற்றுகிறார் சங்கராசாரியர் என்பது வ்யபிசரியாத விஷயம். .... .... .... .... *

8. * அநந்யாச் சிந்தயந்தோ மாம் * (9-22) என்ற விடத்தில் * பரம் தேவம் நாராயணம் ......பர்யுபாஸதே—தேஷாம் பரமார்த்த தர்சிநாம் * என்று பாஷ்யமிட்டிருக்கின்ற சங்கராசாரியர் பரதேவதையான நாராயணனை உபாஸிப்பவர்கள் யாவரோ அவர்களே உண்மை யறிவாளிகள் என்று காட்டினாராகிறார். ஸ்ரீமஹா விஷ்ணுவுக்குப் போல ருத்ரனுக்கும் பாரம்யமுண்டு என்கிற வாதத்தை ஸஹிப்பவரல்லர் அவர். ஸ்ரீமந்நாராயண வ்யதிரிக்த தேவதைகளை பஜிப்பவர்களைப் பற்றின

னென்பது பகவத்பாத ஸித்தாந்தம். *ஸர்வவாகீச்வரேச்வர:* என்கிற நாம பாஷ்யத்திலும் *ஸர்வேஷாம் வாகீச்வராணும் ப்ரஹ்மாதீநாமபி ஈச்வர:* என்றார் அவர்தாமே. [இனி நிர்க்குணப்ரஹ்மவாத நிராகரணம் பண்ணுகிறோம்.] ... *

11. பரப்ரஹ்மம் நிர்க்குணம் என்று பிறர் செய்யும் வாதம் மிகவும் வருந்தத்தக்கது. ஹேய குணமில்லாமையைத் தெரிவிக்க வேண்டி உபநிஷத்து சில விடங்களில் ப்ரஹ்மத்தை நிர்க்குணமென்று சொல்லி யிருப்பதுண்டு. எண்ணிறந்த திருக்கல்யாண குணமுடைமையை ஓதியிருக்கின்ற ச்ருதிசதங்களுக்கு விரோதமின்றிக்கே நிர்வாஹம் செய்யவேண்டுமன்றே; அங்ஙனே நிர்வஹிக்குமளவில் நிர்க்குண ச்ருதிகளுக்கு ஹேயகுணமில்லாமையைக் கூறுவதில் தாத்பர்யம் என்றே சொல்லித் தீர வேண்டும். ப்ரதாநம் முதலானவை ஜகத் காரணமாகக் கூடுமென்று நேர்ந்த சங்கைகளைப் பரிஹரியா நின்ற சாரீரக மீமாம்ஸையானது பெரும்பாலும் அதிகரணந் தோறும் பரப்ரஹ்மத்தினிடத்திலுள்ள திருக்குணங்களை யெடுத்துக்கொண்டே 'அத்தகைய குணங்களில்லாத வஸ்துக்களுக்கு காரணத்வம் ஸம்பவிக்கமாட்டாது' என்று தலைக்கட்டுகின்றது. இக்காலத்தவர்களான, அத்வைதிகள் தங்கள் நூல்களில் "ஆதிசங்கராசாரியாரும் ஸகுணப்ரஹ்மத்தையும் ஸசரீரப்ரஹ்மத்தையும் ஒப்புக்கொண்டிருப்பதுண்டு" என்றெழுதுகிறார்கள். இங்ஙனே யெழுதுமவர்களுக்கு அவ்யவஸ்தித சித்தத்வம் தவிர வேறொன்றும் தேறாது. நையாயிகர்கள் "உத்பந்நம் த்ரவ்யம் க்ஷணமகுணம் திஷ்டதி" என்பார்கள். பரப்ரஹ்மத்திற்கு உற்பத்தி ஒப்புக்கொண்டாலாவது அது க்ஷணகாலம் நிர்க்குணமாக இருக்கவுமாகும். முமுக்ஷுக்களும் முக்தர்களும் நித்யர்களுமான ஸமஸ்த ஜீவராசிகளையும் தன்னுடைய குணாநுபவத்தினாலேயே உஜ்ஜீவிப்பிக்குமதான பரப்ரஹ்மம் க்ஷணமாத்ரமும் நிர்க்குணமாக இருக்கவில்லாது. கூரத்தாழ்வானருளிச்செய்த ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் *தூரே குணஸ்தவ து ஸத்வரஜஸ்தயாம்ஸி தேந த்ரயீ ப்ரதயதி த்வயி நிர்க்குணத்வம், நித்யம் ஹரே! நிகில ஸத்குணஸாகரம் ஹி த்வாமாமநந்தி பரமேச்வரமீச்வராணும்* என்றுள்ள ச்லோக ரத்நம் இங்கு நித்யாநுஸந்தேயமாகக் கடவது. .... *

12. முக்கியமாகக் குறிக்கொண்மின்; "பாஞ்சராத்ரம் அப்ரமாணம்" என்கிற பிறர் உபநிஷத்துக்கள் ப்ரஹ்மஸூத்ரங்கள் இதிஹாஸ புராணங்கள் முதலியவற்றை ப்ரமாணமாக ஒப்புக்கொள்பவர்கள்போலும். இது வாங்மாத்ரேண அங்கீகாரமே யொழிய வேறில்லை. "பாஞ்சராத்ரத்தை ப்ரமாணமாக வொப்புக்கொண்டால் என்ன ஹாநி விளைந்திடும்? ச்ருதீதிஹாஸ புராண ஸூத்ரங்களை ப்ரமாணமென்று ஒப்புக்கொண்டதனால் என்ன லாபம் விளைந்திட்டது? என்று இவர்களை வினவினால் இவர்கள் என்ன விடையிறுப்பர்களோ, பார்க்கவேணும். *வேத:ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா* என்று வேத ப்ராதுர்ப்பாவ விசேஷமாகக் குலாவப்படுகிற ஸ்ரீராமாயணத்தில் ஆதியோடந்தமாகத்திருக்கல்யாண குணகண ப்ரஸ்தாவமே விளங்கா நின்றது. வான்மீகி முனிவர் தம்மிடம் வந்து சேர்ந்த நாரத மஹர்ஷி பக்கலில் கதை கேட்க விரும்பிற்றிலர்; திருக்குணங்கள் கேட்கவே விருப்பத்தை வெளியிட்டார். அதில், *கோ ந்வஸ்மிந் ஸாம்ப்ரதம்

லோகே குணவாந் * என்றும் * பஹவோ துர்லபாச்சைவ யே த்வயா கீர்த்திதா குணா: * என்றும் உபக்ரமத்தில் காணும் வினவிடைகளினால் இஃது அறியலாகும்.

13. எம்பெருமானுடைய திருவவதாரங்க ளெல்லாம் குணபரீவாஹ ரூபங்க ளென்று ஸாரஜ்ஞர்கள் நிஷ்கர்ஷித்துள்ளார்கள். எம்பெருமான் ஸ்வாத்மாவிலே நிரம்பியுள்ள திருக்குணங்களை வெளியிட்டுத் தரிப்பதற்காகவே திருவவதாரங்கள் செய்கிறானென்கை. ஸ்ரீராமக்ருஷ்ணாதி ரூபேண திருவவதரித்து வேதஸித்தங்களும் ஸ்வாபாவிகங்களுமான திருக்குணங்களை ஸகல பக்தர்களும் அநுபவிக்கும்படி செய்தருளினன் பகவான். இதை அறியாதாரில்லை. "ப்ரஹ்மம் குணசூந்யமே" என்பவர்கள் ஸ்ரீராமாயணம் முதலான இதிஹாஸ புராணங்களுக்கும் அவற்றுக்கும் மூலமான ச்ருதிகளுக்கும் நெடுந்தூரத்திலிருக்கத் தக்கவர்களென்பது அதிவாதமு மன்று, ஆக்ரஹ வார்த்தையுமன்று. * இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத் * என்று பொதுவாகவும் *வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:* என்று சிறப்பாகவும் சொல்லியுள்ள மஹர்ஷிகள் வேதப்பொருள்களே இதிஹாஸ புராணங்களில் வெட்டவெளிச்சமாகக் காணப்படுகின்றனவென்று ப்ரதிஜ்ஞை செய்தவர்களாகின்றனர். ஆக, திருக்குணங்களிலேயே நோக்காகத் திருவவதரித்த வேதங்களுக்கும் தருபப்ரும்ஹணங்களுக்கும் சிறிதும் பொருந்தாதபடி நிர்குணப்ரஹ்மவாதம் செய்பவர்களைப்பற்றி இன்னமும் பேசவேண்டியதொன்றுமில்லை.

14. [இனி வேதாந்த வாக்யங்களுக்கு அத்வைதத்தில் நோக்கில்லையென்பது.] ச்ருதிவாக்யங்களை யுற்று நோக்கினால் அவற்றில் இருவகையான பாகுபாடு காணப்படும். (1) பேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். (2) அபேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். *க்ஷரம் ப்ரதானம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக: * என்பது முதலான ச்ருதிவாக்யங்கள் சேதந அசேதந ஈச்வர ரூப தத்வத்ரயத்தின் உண்மையைத் தெரிவிக்கும் முகத்தால் பேதத்தைக் காட்டுகின்றன. *நேஹ நாநாஸ்தி கிஞ்சந* *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* *தத்த்வமஸி* இத்யாதிகளான ச்ருதி வாக்யங்கள் பலவகைப்பட்ட வஸ்துக்களில்லாமையைத் தெரிவிக்கும் முகத்தால் அபேதத்தைக் காட்டுகின்றன. ஆக, ச்ருதிகளில் சிலவிடத்து பேதப்ரதிபாதநமும் சிலவிடத்து அபேதப்ரதிபாதநமுமிருப்பதாகத் தேறுகையாலே பரஸ்பர விரோதம் ஸ்பஷ்டமாகிறது. விருத்தமான அர்த்தத்தைத் தெரிவிக்கையாகிற அவத்யம் ச்ருதிகளில் இடம் பெறத்தகாது. விரோதமோ உள்ளதென்று காட்டியாயிற்று. விரோதத்தைப் போக்கி ஸமந்வயம் காட்டவேண்டிய பொறுப்பு விமர்சகுசலர்களான வைதிகர்களுக்குள்ளது. ப்ரஹ்மமொன்றுதான் ஸத்யமென்று கொள்ளுகிற அத்வைதிகள் அபேதத்தைக் காட்டும் ச்ருதிவாக்யங்களை மட்டும் முக்கியமாகப் பரிக்ரஹித்து பேதத்தைக்காட்டும் ச்ருதிவாக்யங்களை உபேக்ஷித்து விட்டார்கள். த்வைதிகளோவென்னில் பேதத்தைக்காட்டும் ச்ருதி வாக்யங்களை மட்டும் முக்கியமாகப் பரிக்ரஹித்து அபேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை உபேக்ஷித்து விட்டார்கள். *யஸ்யாத்மா சரீரம், யஸ்யப்ருதிவீ சரீரம். ய ஆத்மநி திஷ்டந்* இத்யாதி வாக்யங்கள் பகவான் ப்ருதிவி முதல் ஆத்மா வரையிலுமுள்ள ஸகல வஸ்துக்களிலும் அந்தர்யாமியாயிருக்கிறானென்பதை ப்ரதிபாதிக்கின்றன; இவற்றை த்வைதிகளும் அத்வைதிகளுமான இரு வகுப்பினரும் அறவே விட்டிட்டார்கள்.

ஸுபாலோபநிஷத்து முதலான அந்தர்யாமி ப்ராஹ்மண வாக்யங்களுக்கு உபய மதத்திலும் ஆதரவு கிடையாதென்பது ஸ்பஷ்டம். ஆக, த்வைதாத்வைத மதங்களிரண்டிலும் அநேக ச்ருதி வாக்யங்களை அமுக்ய்யார்த்தங்களாகக் கொள்ளுதல் உபேக்ஷித்தல் இத்யாதியான பலீயஸ்ஸான தோஷமுள்ளது. இத்தகையதோஷம் சிறிதும் தட்டப்பெறாதது நமது மதமென்னுமிடம் அடுத்தபடியாக விவரிக்கப்படும்.

15. கீழே யெடுத்துக்காட்டிய மூன்று வகுப்பான ச்ருதிவாக்யங்களையும் ஒரு நிகராக ஆதரிப்பவர்கள் விசிஷ்டாத்வைதிகளேயாவர். ஒரு ச்ருதி வாக்கியத்திலும் அமுக்ய்யார்த்த கல்பனை யென்பது கிடையாது. எங்ஙனேயென்னில், கடைசியாக எடுத்துக்காட்டப்பட்ட *யஸ்யாத்மா சரீரமித்யாதிகளான ச்ருதி வாக்யங்களுக்கு கடக ச்ருதிகளென்று பெயர். பேதத்தையும் அபேதத்தையும் விரோத லேசமுமின்றிக்கே பொருந்தச் செய்யவல்லவை அந்தர்யாமி ப்ராஹ்மண வாக்யங்கள்— என்கிற காரணத்தினால் இவற்றுக்கு கடகச்ருதிகளென்னும் பெயர் மிகப் பொருத்தமானது. *நேஹ நாநாஸ்தி கிஞ்சந* இத்யாதிகளான அத்வைத (அபேத) ச்ருதிகளினாலேற்பட்ட அபேதத்தையும் *க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர:* இத்யாதிகளான த்வைத (பேத) ச்ருதிகளினாலேற்பட்ட பேதத்தையும் பொருந்தவிடும் வழி கேண்மின். சேதநா சேதந ஈச்வரர்களான மூன்று தத்துவப் பொருள்களின் ஸ்வரூப பேதம் உண்மையாதலால் *க்ஷரம் ப்ரதாந மித்யாதி பேத ச்ருதியானது பேதத்தைச் சொல்லியிருப்பது பாங்கே. ப்ரஹ்மம் சேதநாசேதந விசிஷ்டமாய்க்கொண்டு ஒன்றேயாகிறபடியால் *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* இத்யாதியான அபேத ச்ருதிகளும் பொருந்தக் குறையில்லை. *யஸ்யாத்மாசரீரமித்யாதி அந்தர்யாமி ப்ராஹ்மண ச்ருதிகளானவை ஸர்வேச்வரனே ஸர்வாந்தர்யாமியென்று தெரிவிக்கும் முகத்தால் பேதத்தையும் அபேதத்தையும் பொருந்த விடுகின்றன என்பர் நம் ஆசாரியர்கள்.

16. சிதசிதீச்வரர்களாகிற மூன்று தத்துவங்களிலும் தனிப்படக்கண் செலுத்தினால் பேதம் க்ரஹிக்கப்படுகிறது. அசேதநமாகிய சரீரம்வேறு, அதனுள்ளுறையும் சேதநன் வேறு; அவனுக்கும் அந்தர்யாமியான பரமாத்மா வேறு என்று பேத ப்ரதிபத்தி சாஸ்த்ர ஸம்மதமேயாகும். பல அவயவங்களின் கூட்டரவான சரீரத்திலே கை, கால், காது, மூக்கு முதலானவற்றைத் தனியே பார்க்குமிடத்து பேத ப்ரதிபத்தியும் 'அவயவஸங்காதம் ஒன்று' என்று பார்க்குமிடத்து அபேத ப்ரதிபத்தியும் பொருந்துகின்றது. தேவதத்தன் ஒருவன், யஜ்ஞதத்தன் ஒருவன் இத்யாதி வ்யவஹாரங்களில் தேவதத்தனுக்கும் யஜ்ஞதத்தனுக்கும் ஒருமை எங்ஙனம்? என்று விமர்சிக்கவேணும். 'தேவதத்த: க்ருச:, யஜ்ஞதத்த: ஸ்தூல:' இத்யாதிவ்யவஹாரங்களில் க்ருசத்வமும் ஸ்தூலத்வமும் சரீர தர்மமாகையாலே தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்கள் சரீர பரங்களேயென்று அறுதியிடப்படுகிறது. 'தேவதத்தோ மேதாவீ, யஜ்ஞதத்த: ப்ரதிபாவாந்' இத்யாதி வ்யவஹாரங்களில் மேதையும் ப்ரதிபையும் ஆத்ம தர்மமாகையாலே அந்த தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்களே ஆத்ம பரங்களென்று நிர்ணயிக்கப்படுகிறது. ஆத்மாவும் சரீரமும் ஒன்றல்ல வெவ்வேறுபட்டவை. ஆக அநேக வஸ்துக்களிருக்கச் செய்தேயும் ஏகத்வவ்யவஹாரம் நிகழ்ந்து வருவது 'சரீர விசிஷ்டனான சரீரி ஒருவன்' என்னுமபி

ஸந்தியாலத்தனையன்றே. இவ்வண்ணமாகவே 'ப்ரஹ்ம ஏகமேவ' என்ற ச்ருதியும் விசிஷ்டைக்யத்தைச் சொல்லுவதாகக் கொள்ளக் குறையில்லையே. ஏவஞ்ச பேதத்திற்கும, அபேதத்திற்கும் அபாயமொன்றுமில்லை யென்றதாயிற்று. சரீரங் களும் சரீரிகளுமாகிற நாநா வஸ்துஸத்பாவம் ப்ராமாணிக மாகையாலே அபலபிக்க வொண்ணுததே. இங்ஙனே விசிஷ்டைக்யமும் அநுபவஸித்தமாகையாலே அபல பிக்க வொண்ணுததே. ஆக உண்மையில் வெவ்வேறுபட்ட வஸ்துக்களும் சரீர சரீரி பாவநிபந்தநமாகவே ஒன்ருக வழங்கப்படுவதாய் ஸித்திக்கையாலே அப்படிப் பட்ட சரீர சரீரிபாவத்தை யுணர்த்துகின்ற அந்தர்யாமி ப்ராஹ்மணுதி ரூபங்களான ச்ருதி வாக்யங்களுக்கு நமது மதத்தில் மிகுந்த கௌரவமுள்ளது. அத்வைதிகள் பேதச்ருதிகளை அநாதரிப்பது போலவும், த்வைதிகள் அபேதச்ருதிகளை அநாதரிப்பது போலவும் நாம் ஒருவகையான ச்ருதியிலும் அநாதரம் காட்டுகின்றிலோம். ஆகவே ஸர்வச்ருதி ஸாமரஸ்யம் நமக்கேயொழியப் பிறர்க்கில்லையென்று கல்வெட்டாயிற்று.

17. மதாந்தரஸ்தர்கள் ஒப்புக்கொள்ளாத பல அர்த்தங்களை நாம் ஒப்புக் கொண்டிருக்கின்றேம். நித்யஸூரிஸத்பாவம், எம்பெருமானுடைய கல்யாண குணுச்ரயத்வம், திவ்யமங்கள விக்ரஹவிசிஷ்டத்வம் முதலானவை அவை. இவற்றை யெல்லாம் விட்டு சரீர சரீரிபாவத்தையே கொண்டு விசிஷ்டாத்வைதமென்று பெய ரிடுவதில் என்ன விசேஷமென்னில், கேண்மின். ஸித்தாந்தத்தில் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கின்ற அர்த்த விசேஷங்களுள் ஜகச்சரீரகத்வமென்பதே ப்ரதாநமானது. ஆனது பற்றியே இது ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்த மெனப்படுகிறது. இதுவே ப்ரதாந மென்பது எங்ஙனமென்னில் ஸர்வச்ருதிகளினுடையவும் முக்கியமான அர்த்தத்தைத் தெரிவிப்பதாய், ஸர்வச்ருதிகளுக்கும் ஸாமரஸ்யத்தை நிர்வஹித்து வாதி விஜய ப்ரயோஜகமாயிருப்பதனுலே, இதற்கு ப்ராதாந்ய மென்றுணர்க. இந்த சரீராத்ம பாவத்தைத் தெரிந்து கொள்ளாமையினுலன்றே பிறமதத்தவர்கள் ஸர்வ ச்ருதி ஸாமரஸ்யத்தை நிர்வஹிக்கமாட்டாமல் தளருகின்றூர்கள். குத்ருஷ்டிகளின் குசோத் யங்களை அவலீலயா பரிஹரித்துத் தருவது இந்த சரீராத்மபாவமே யென்க. .... *

18. ஸித்தாந்தத்தில் சரீராத்மபாவமே பிரதான மென்பது கீழே உபபாதிக் கப்பட்டது. ப்ரஹ்மஸூத்ரகாரருக்கும் இதுவே அபிமதமென்பதை மூதலிக்கிறேன். இவ்விஷயத்தில் சாரீரக மீமாம்ஸை முழுவதுமே பிரமாணமாகக் காட்டக் கூடிய தாயினும் வ்யுத்பித்ஸுக்களின் புத்தியில் ஏறுவதற்காக ஸம்க்ஷேபமாய் நிரூபித்தல் நலமென்று கருதி அந்த சாரீரக மீமாம்ஸையில் ஒரு அதிகரணத்தை மட்டும் ஈண் டெடுத்துக் காட்டிப் பிராமாணிகர்களின் மனத்தில் பதியவைக்கிறேன். அதில் முதலத்யாயம் நான்காவது பாதத்தில் வாக்யாந்வயாதிகரண மென்பது ப்ரஸித்த மானது. நான்கு ஸூத்ரங்கள் கொண்டது இவ்வதிகரணம். ப்ருஹதாரண்யகோப நிஷத்தில் ப்ரஸித்தமான மைத்ரேயீ ப்ராஹ்மணமென்னும் பகுதியில் அம்ருதத்வோ பாயமேதென்று கேட்டமைத்ரேயியைக் குறித்து யாஜ்ஞவல்க்யருடைய விடை: "ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" என்பது. இதில் ஆத்மா என்னும் சப்தத்தால் குறிக்கப்பட்டவன் பரமாத்மாவா? ஜீவாத்மாவா? என்று விசாரம் ப்ரஸக்தமாக, பரமாத்மாவே யென்று நிர்ணயம் செய்வது இவ்வதி கரணத்தின் ப்ரமேயம். இது *வாக்யாந்வயாத்* என்கிற முதல்

ஸூத்ரத்தினல் தேறியது. மேத்ரேயீப்ராஹ்மணத்திலுள்ள மஹாவாக்யம் ஸமஞ்ஜஸமாக அந்வயிக்க வேண்டுகையாலே அந்த வாக்யத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஆத்மா கருமபலனை யநுபவிப்பவனை ஜீவாத்மாவாக இருக்க முடியாது, பரம புருஷனேயாகவடுக்கும் என்று சொல்லப்பட்டதாயிற்று. இதற்கு மேல் ஒரு கேள்வி எழுந்தது. அதாவது, இங்குப் பரமாத்மா விவக்ஷிதனுகில் ஜீவாத்ம வாசகமான ஆத்மா என்கிற சொல்லையிட்டுச் சொல்லுவானேன்? பரமாத்மாவென்றே பிர யோகிக்கலாகாதா? என்று. இக்கேள்விக்கு ஸூத்ரகாரரான வியாஸரால் மேலே மூன்று ஸூத்ரங்களினுல் ஸமாதானம் தெரிவிக்கப்பட்டுள்ளது. அடைவே ஆச்மரத்ய மதம், ஔடுலோமி மதம், காசக்ருத்ஸ்ந மதம் என மூவருடைய மதம் காட்டப் பட்டுள்ளது. *ப்ரதிஜ்ஞாஸித்தேர்லிங்கமாச்மரத்ய:* என்கிற முதல் ஸூத்ரம் ஆச்மரத்ய மதம். ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு கார்ய காரண பாவம் சுருதியில் சொல்லப்பட்டிருக்கையாலே அதனுல் அவர்களுக்கு அபேதம் ஏற்படுகிறது. காரண மான மண்ணுக்கும் அதன் கார்யமான பானைக்கும் அபேதம் காண்கிறதன்றே. ஆக இவ்வபேதத்தைத் தெரிவிப்பதற்காக பரமாத்ம ஜீவாத்மாக்களுக்கு ஐக்யோக்தி யுள்ளதென்றார் ஆச்மரத்யர். இனி ஔடுலோமி மதம்; கீழே காட்டிய ஆச்மரத்ய மதத்தில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவினிடத்திலிருந்து உத்பத்தியைக் கொள்ளுகை யாலே *ந ஜாயதே ம்ரியதே வா விபச்சித்* இத்யாதி ப்ரமாணங்களோடு அது விரோ திக்கையாலும் மற்றும் அநேக தோஷப்ரஸங்கத்தாலும் ஆச்மரத்ய மதம் ஸாது வன்றென்று கொண்ட ஔடுலோமியானவர்—[உத்க்ரமிஷ்யத ஏவம்பாவாதித் யௌடுலோமி:] முக்தி தசையில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவோடு அபேதம் ச்ருதி ஸித்தமாயிருக்கையாலே முக்தி தசையில் பவிஷ்யத்தான ஜீவாத்ம பரமாத்ம அபே தத்தை யவலம்பித்து ஐக்யம் சொல்லிற்ருக நிர்வஹித்தார். இதற்குமேல் காசக் ருத்ஸ்ந மதம் :—கீழே விவரித்த ஔடுலோமி மதத்தில் மோக்ஷம் வரையில் ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு பேதமுள்ளதென்றும், முக்தி தசையில் அபேதமென்றும் கொள்ளப்படுகிற விது "பரமாத்மாத்மநோர்யோக: பரமார்த்த இதீஷ்யதே, மித்ய்யைதத் அந்யத் த்ரவ்யம் ஹி நைதி தத் த்ரவ்யதாம் யத:* என்கிற ஸ்ரீவிஷ்ணு புராண வசன விருத்தம். வெவ்வேறுபட்ட பொருள்கள் ஒன்றேடொன்று சேருமே யொழிய ஐக்கியத்தை யடையமாட்டா வென்று இதில் ஸ்பஷ்டமாகக் கூறியிருக் கின்றதன்றே. முக்தி தசையில் ஜீவாத்மாவுக்கு அபஹத பாப்மத்வாதி ஸ்வரூபம் ஆவிர்ப்பவிக்குமதொழிய பரமாத்மாவோடு ஐக்யாபத்தியென்பதில்லை யென்னுமிடம் (4—4—1.) *ஸம்பத்யாவிர்ப்பாவாதிகரணத்தில் நிர்ணயிக்கப் பட்டுள்ளது. ஆக இத்தனைக்கும் மூலத்தை நிர்வஹிப்பது அநுசிதம் என்று கொண்ட காசக்ருத்ஸ்நர் [ஸூ*அவஸ்திதே ரிதி காசக்ருத்ஸ்ந:] பரமாத்மா ஜீவாத்மாவினுள் அந்தராத்மாவாக இருப்பதும், ஜீவாத்மாவுக்குப் பரமாத்மசரீரத்வமும் * ய ஆத்மநி திஷ்டந் ...யஸ்யாத் மாசரீரம் * இத்யாதி ச்ருதி ஸித்தமாகையாலும், சரீர வாசகங்களான சப்தங்களுக்கு சரீரிபர்யந்த வாசகத்வம் ஆக்ருத்யதி கரண ஸித்த மாகையாலும் ப்ரக்ருதத்தில் ஜீவாத்மவாசியான ஆத்ம சப்தத்தைப் பரமாத்மபர்யந்த வாசகமாக நிர்வஹிப்பது தான் உசிதமென்று கருதினர். .... ... .... *

★ ஸம்ஸ்க்ருத வேதாந்த மஹார்த்தங்கள் பதினெட்டு முற்றிற்று. ★

வேண்டுகையாலே என்றபடி. இது மிகவும் ஆவச்யகமானது. ஏவஞ்ச, *அத புருஷோ ஹ வை நாராயணோ காமயத—ப்ரஜாஸ் ஸ்ருஜேயேதி*, *ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாநோ நேமே த்யாவாப்ருதிவீ* இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்களில் நாராயணனுக்கே ஜகத்காரணத்வம் ஓதப்பட்டிருக்கையாலே ஸத்வித்யையிலுள்ள காரணவாசகங்களான ஸாமாந்ய சப்தங்களுக்கு [ஸச்சப்த தேவதா சப்தங்களுக்கு] நாராயணனுகிற தேவதா விசேஷத்திலே பர்யவஸானமின்றிக்கே யொழிந்தால் காரண வாக்யங்களுக்கெல்லாம் ஐககண்டியம் ஸம்பவிக்க மாட்டாது. ஆகவே ப்ரக்ருதங்களான ஸச்சப்த தேவதா சப்தங்கள் நாராயணன் பக்கலிலே பர்யவஸிக்கின்றன வாதலால் ப்ரதாநம் ப்ரக்ருத ஸச்சப்த வாச்யமன்று என்பதாக "கதிஸாமாந்யாத்" என்கிற ஸூத்ரத்திற்குப் பொருளாகத் தேறி நின்றது. பல சொல்லி என்? ஸாரமாகச் சொல்லலாவ திவ்வளவே. ஸூத்ரங்களின் பொருளை நிர்வஹிப்பதற்கு உபநிஷத்துக்களிலிருந்து விஷய வாக்கியங்கள் கொள்ளப்படுகின்றன வென்பது யாவருமறிந்ததே. சங்கர பாஷ்யத்திலும் ஸ்ரீபாஷ்யத்திலும் பெரும்பாலும் விஷயவாக்கியங்கள் வெவ்வேறாகக் கொள்ளப்படாமலிருப்பதையும் காண்கிறோம். அந்த விஷய வாக்யங்களிலெல்லாம் சொல்லப்படுகிற தன்மைகள் ஸ்ரீமந்நாராயணனுக்கே அஸாதாரணங்களென்பது ச்ருதிபுராணாதிகளில் ப்ரஸித்தம்—என்கிற விதனையும் முக்கியமாகக் குறிக்கொள்க. ஆனந்தமயத்வம், ஆதித்ய மண்டலத்தினுள்ளிருத்தல், புண்டரீகாக்ஷத்வம், அபஹதபாப்மத்வம், மோக்ஷார்த்த உபாஸந விஷயத்வம், அக்நி இந்திரன் முதலிய ஸர்வ தேவதைகளுக்கும் அந்தர்யாமியா யிருத்தல், ஸர்வ பூதங்களுக்கும் அந்தர்யாமியாயிருத்தல் இத்யாதிகளான தரும விசேஷங்களுக்கு இருப்பிடமான வஸ்துவே ஜகத்காரணமாகக் கூடியதென்று நிஷ்கர்ஷிக்கின்ற ஸூத்ரகாரருடைய உள்ளத்தில் ஸ்ரீமந்நாராயணனே உறைந்திருக்கின்றாரென்பது பிராமாணிகர்களுக்கு அறிவரிதன்று. இனி, ஆதிசங்கரர்சாரியர் நாராயணபாரம்யத்தையே ஸ்தாபித்தவரென்பது ஸ்பஷ்டமாக நிரூபிக்கப்படுகிறது. .... .... .... .... .... *

6. ஆதிசங்கரர் இயற்றிய விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் தேவதாந்தரங்களுக்கு அவரத்வத்தை நிலை நாட்டி ஸ்ரீமந்நாராயணனுக்குப் பரத்வம் ஸ்தாபித்திருப்பது கதிராயிரமிரவி கலந்தெறித்தா லொப்ப விளங்கா நின்றது. விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு பாஷ்யம் செய்த பகவத் பாதர் சிவ ஸஹஸ்ர நாமத்திற்கு ஏன் பாஷ்யம்செய்யவில்லை என்று வினவினால்,"அப்போது சிவஸஹஸ்ரநாமஸ்துதியில்லை; பிற்பட்ட காலத்தில் தான் அஃது உண்டாயிற்று; ஆதலால் தான் அதற்கு பாஷ்யம் செய்ய ப்ரஸக்தி யுண்டாகவில்லை" என்கிறார்கள். அது நிற்க. பாஞ்சராத்ராகம ப்ராமாண்யாதிகரணத்தில், *உத்பத்த்யஸம்பவாத்* என்கிற ஸூத்ர பாஷ்யத்தில் "தத்ர பாகவதா மந்யந்தே" என்று தொடங்கி பாஞ்சராத்ராகம ப்ரமேயங்களான விஷயங்கள் மூன்றென்று ஸங்க்ரஹித்து, அவற்றுள் இரண்டு விஷயங்களில் தம்முடைய ஸம்மதியைக் காட்டி, மூன்றாவதான ஒரு விஷயத்தில் மட்டும் வைமத்யம் காட்டியுள்ளார் பகவத்பாதர். தமக்கு ஸம்மதமாகக் காட்டின இரண்டு விஷயங்கள் இவை;—(இங்கு அவருடைய பங்க்திகளையே உதாஹரிப்போம்). "தத்ர யுத்

# 4. பகவத்கீதையில் பதினெட்டு

பதினெட்டு அத்யாயமாக அமைந்த கீதையில்
பதினெட்டு ஸாரார்த்தங்கள் கேண்மின்.

1. கண்ணபிரான் பாண்டவர்கட்காகத் துரியோதநாதியரிடம் தூதுசென்று ஸமாதான வழிகள் பல பேசியும் "**வீரபோக்யா வஸுந்தரா**" ஆகையாலே போர்க் களத்தில் வீரத்தனத்தைக் காட்டி வெற்றி பெறுமவர்களே ராஜ்யமாளக் கடவர்கள் என்று த்ருதராஷ்டிர வகுப்பினர் கூற, பிறகு யுத்தமே நடத்தக் கடவதாக முடிவு பெற்றது. இருவகுப்பினரும் படைத்துணை வேண்டிக் கண்ணபிரான் பக்கலிலே வந்தார்கள். துரியோதனன் கண்ணபிரானைத் துணையாக விரும்பவில்லை. ***க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:*** என்னும் புகழ் பெற்ற பாண்டவர்களுக்கே கண்ணபிரான் துணைவனாக நிற்க வேண்டிற்று. பக்த பரதந்திரனான ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா தன்னுடைய பரமபக்தனான அர்ஜுனனுக்குத் தேர்ப்பாகனாயிருந்து கொண்டு குருக்ஷேத்திரமென்னுமிடத்தில் வந்து போர் புரிய அணிவகுத்து நின்றனன். அப்பொழுது அர்ஜுனன் கண்ணபிரானை நோக்கி 'பெருமானே! இந்தப் போரில் யான் யாருடன் போர் புரிவது தகுதியானது? துர்ப்புத்தி வாய்ந்த துரியோதனனுக்குத் துணைபுரிவதற்காக யார் யார் வந்திருக்கிறார்களென்பதை நான் கண்டு தெரிந்து கொள்ளுமாறு தேரை இரண்டு சேனைகளினிடையில் நிறுத்த வேணும்" என்று கூற, அப்படியே கண்ணபிரான் இரண்டு படைகளினிடையே தேரை நிறுத்தி 'அர்ஜுநா! இவ்விரு படைகளிலுமிருக்கின்ற போர்வீரர்களைப் பாராய்' என்றனன். பார்த்த அர்ஜுனன் போர் புரியமாட்டேனென்றானென்பது தெரிந்ததே. அது நிற்க. 'தேரைக்கொண்டு நிறுத்து' என்று அர்ஜுனன் கட்டளையிட, உடனே அங்ஙனம் செய்த கண்ணபிரான் தன்னுடைய ஆச்ரித பாரதந்த்ரியத்தைக் காட்டிக்கொண்டானென்பது கண்ணனுடைய திருக்குணங்களில் ஸாரமாக அறியத்தக்கது. மேலே தன்னுடைய பரத்துவத்தைப் பலவாறு பேசப்போகிறான்; அதனிலும் சிறப்பாக ஸௌலப்யத்தை முந்துற முன்னம் அனுஷ்டான முகத்தினால் காட்டியருளினானென்பது விசேஷம். ... ... ... ... ... ●

2. இரண்டாமத்யாயத்தில் பதினோராவது ச்லோகமாகிய "அசோச்யாந் அந்வசோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ச்ச பாஷஸே, கதாஸூந் அகதாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டிதா:" என்கிற ச்லோகந்தான் உபதேசத்தின் உபக்ரமமாகவுள்ளது. இதற்கு முன்னே அர்ஜுனன் வாயில் "சிஷ்யஸ் தேஹம் சாதிமாம் த்வாம் ப்ரபந்நம்" என்று வெளிவந்திருக்கிறது. 'கண்ணா! எனக்கு தர்மாதர்மங்கள் தெரியவில்லை; எனக்கு ச்ரேயஸ்ஸென்று நீ அறுதியிட்ட பொருளை எனக்கு உரைப்பாயாக. உனக்கு நான் மித்திரன் மாத்திரமல்லேன்; சிஷ்யனுமாகிறேன்: இதோ உன் திருவடிகளில் வீழ்ந்து யாசிக்கிறேன்காண்; எனக்கு ஹிதா ஹிதங்களை யுபதேசிப்பாயாக' என்று அர்ஜுனன் சொல்லும்படி செய்து விட்டான் கண்ணபிரான். இந்த ப்ரார்த்தனையைப் பெறாமல் சிறந்த சாஸ்த்ரத்தை யுபதேசிப்பது தகுதியன்றாதலாலும், நிர்வேதமில்லாதவனது வாயில் இந்த பிரார்த்தனை வெளிவராதாகையாலும் இத்தனையும் கண்ண

பிரான் செய்துவைத்த வொரு நாடகம் என்பது அறியத்தக்கது. ஆகவே அர்ஜுன னுக்குண்டான வ்யாமோஹம் அவன்றன்னுடைய ஸ்வபாவத்தாலுண்டானதன்று, மாயப்போர்த் தேர்ப்பாகனுடைய மாய மந்திரம் செய்வித்த செயல் என்றதாயிற்று. இல்லையாகில் கீதாசாஸ்த்ரம் அவதரிக்க அவகாசமே யிராதன்றோ. ... ✱

3. (3-22) ✱ "ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந, நாநவாப்த மவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி"✱ என்பது. இதில் பகவான் தானும் கர்மாநுஷ்டானத்தில் ஊன்றி யிருப்பதாக வற்புறுத்திச் சொல்லப்பட்டுள்ளது. க்ருஷ்ணவதாரத்திற்கு முந்தின அவதாரமான ஸ்ரீராமாவதாரத்தில் இது தன்னை ஸுஸ்பஷ்டமாகக் காணலாம். விச்வாமித்ர முனிவன் தசரத மன்னனிடம் வந்து ✱ **அஹம் வேத்மி மஹாத்மாநம்** ✱ இத்யாதிகளைச் சொல்லி ஸ்ரீராமபிரானைக்கொண்டு சென்றான். ✱ ஊந ஷோடச வர்ஷோ மே ராமோ ராஜீவ லோசந:✱ என்று சக்ரவர்த்தி சொன்னபடி இராமன் செந்தாமரைக் கண்ணனுகையாலே ஸூர்யன் அஸ்தமித்த வாறே தாமரை முகுளிதமாகுங் கணக்கிலே இராமனும் கண்மூடினான். பிறகு ஸுப்ர பாத காலத்திலே முனிவன் "கௌஸல்யா ஸுப்ரஜா ராம! பூர்வா ஸந்த்யா ப்ரவர்த் ததே" என்று சொல்லித் துயிலுணர்த்துகிறான். "இராமா! எழுந்திரு; நாம் சீக்கிர மாக ஆச்ரமம் சென்று சேர்ந்து யாகம் தொடங்கவேணும்' என்று சொல்லவேண்டி யிருக்க, அங்ஙனே சொல்லாதே "உத்திஷ்ட நரசார்தூல! **கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்**" என்றான் முனிவன். ப்ராதஸ் ஸந்த்யாநுஷ்டானம் வழுவாமற் செய்யவேண்டுமே, அதற்காக எழுந்திராய் என்று சொன்னவிதனால் எம்பெருமானுடைய அவதாரம் முக்கியமாக தர்மாநுஷ்டானத்திற்காகவே யென்பது நன்கு விளங்கும். மேலே பிராட்டியைப் பிரிந்து வருந்திக் கிடக்கிற காலங்களிலும் பெருமாள் ஸந்தியாகாலங் களில் தவறாது ஸந்தியாவந்தனம் அனுட்டித்தபடியை வான்மீகி பகவான் அஸக்ருத் கூறியிருக்கின்றார். ஆகவே பகவான் ✱ **வர்த்த ஏவ ச கர்மணி** ✱ என்று சொன்னது மிகப்பொருந்தும். ... ... ... ... ✱

4. நாலாமத்யாயத்தில் (7) ✱யதா யதா ஹி தர்மஸ்ய✱ என்கிற ச்லோகத் தில் **"ததா ஆத்மாநம் ஸ்ருஜாம்யஹம்"** என்ற விடத்தில் ரஸ்யமும் ரஹஸ்யமுமான ஒரு விசேஷார்த்தமுண்டு; மேலே ஏழாமத்யாயத்தில் **"ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்"** (18) என்று கீதாசார்யன் தானே ஜ்ஞானிகளைத் தனக்கு ஆத்மாவாகச் சொல்லுகையாலே இங்கு "ஆத்மாநம் ஸ்ருஜாமி" என்றதற்கு ஞானிகளை அவதரிப்பிக்கிறேன் என்பதும் அந்தரங்கமான பொருளாகும். அதர்மம் தலையெடுத்து தர்மம் தலைமடிந்து நிற்குங் காலங்களில் பகவான் தான் வந்து அவதரிப்பதிற்காட்டிலும் ஞானிகள் அவதரிப்பதில் ப்ரயோஜநாதிசயமுண்டு. இராமாநுச நூற்றந்தாதியில் (41) ✱ மண்மிசை யோனி கள் தோறும் பிறந்து எங்கள் மாதவனே கண்ணுற நிற்கிலும் காணகில்லா வுலகோர் களெல்லாம் அண்ணலிராமானுசன் வந்துதோன்றிய வப்பொழுதே நண்ணரு ஞானம் தலைக்கொண்டு நாரணற்காயினரே✱ என்றுள்ள பாசுரம் இங்குப் பொருத்தமாக அநுஸந்திக்கத்தகும். அன்றியும் இந்த நான்காமத்யாயத்திலேயே மேல் (34) ✱ தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா, உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநி நஸ் தத்வதர்சிந:✱ என்கிற ச்லோகத்தில் ஞானிகளின் உபதேசப் பெருமை நன்கு கூறப்பட்டிருக்கிறது. 'தத்வமாகிய நான் சொல்லுவதிற் காட்டிலும், தத்வமாகிய என்னை ஸாக்ஷாத்கரித்து தத்வதர்சிகளென்று பேர் பெற்ற ஞானிகள் உபதேசிப்பது மிகச்சிறந்திருக்கும், அவர்களை யடிபணிந்தும் பலகால் அநுவர்த்தித்துக் கேட்டும் தெரிந்துகொள்' என்று அந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. அப்படி யுபதேசித் துத் திருத்திப் பணிகொள்ளவல்ல ஞானிகளை ஸமய விசேஷங்களில் நானே அவதரிக்

கச் செய்கிறேன் என்கிறானிங்கு. தன்னுடைய அவதாரத்தைப் பற்றிச் சொல்ல ப்ராப்தமான இந்த ப்ரகரணத்தில் ஞானிகளின் அவதாரத்தைப்பற்றிச் சொல்வதற்கு என்ன ப்ரஸக்தி யென்று நினைக்கவேண்டா ; * பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து * என்கிற பெரியாழ்வார் திருமொழிப்படியும் * ஸாக்ஷாந் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநூம், மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ர பாணிநா* என்கிற ப்ரமாணப்படியும் ஞானிகளின் அவதாரமும் பகவதவதார விசேஷமேயாகையாலே. * சேமம் குருகையோ செய்ய திருப்பாற்கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ ?—தாமம் துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு முளவோ பெருமானுனக்கு* என்று நம்மாழ்வாரை நோக்கி ஒரு பரமபக்தர் பணித்த பாசுரமும் இங்கு அநுஸந்திக்கப் பொருந்தும். ... ... ... ●

5. ஐந்தாமத்யாயத்தில் (18) * வித்யாவிநயஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி, சுநிசைவ ச்வபாகே ச பண்டிதாஸ் ஸமதர்சிந: * என்பதொரு சுலோகம். இந்த ச்லோகத்தில் '' பண்டிதாஸ் ஸமதர்சிந:'' என்றிருப்பது கொண்டு, 'ஜாதிபேதம் முதலானவற்றை யிட்டு ஏற்றத்தாழ்வு காண்பவர்கள் பண்டிதர்களல்லர், பாமரர்களே' என்கிற அபார்த்தம் நவீந ஸம்ஸ்காரகர்களின் வாக்கில் உலாவி வருகிறது. அது சிறிதும் பொருந்தாது, பாஷ்யஸூக்திகளை நோக்குக. பசுவினாலாகிற காரியம் யானையினாலாகாது, யானையினாலாகிற காரியம் பசுவினாலாகாது. பால்வேண்டும்போது பசுவைத் தேடுவதும் மஹோத்ஸவங்களுக்கு யானையைத் தேடுவதும் யாவரிடத்துங் கண்ட வியல்பு. லோகரீதியில் ஸமதர்சனம் எங்ஙனே பண்ணமுடியும்? 'ஸர்வத்ர ஸ்மதர்சிந:' என்றதற்கு நவீநர்கள் சொல்லுகிற பொருள் பொருந்தவேணுமாகில், யானைக்குச் செய்கிற அலங்காரங்களை நாய்க்குச் செய்யவேண்டும்; நாய்க்குச் செய்யுமவற்றைக் குதிரைக்குச் செய்யவேண்டும். இப்படிப்பட்ட ஆபத்திகளைப் பரிஹரிக்கைக்காக 'ஸர்வத்ர ஸமதர்சிந:' என்பதற்குப் பொருத்தமான பொருள் காணவேண்டும். அதுதான் பாஷ்யத்தில் காண்பது. அன்றியும், இதற்குமேல் மூன்றுவது ச்லோகத்தில் (5-20) சொல்லப்பட்டிருக்கின்றதாவது—ப்ரியமானது கிடைத்தால் ஸந்தோஷிக்கக் கூடாது; அப்ரியமானது கிடைத்தால் வெறுப்புக்கொள்ளலாகாது என்று கூறப்படுகிறது. இப்படியிருக்க வல்லவனுக்குத்தான் ஸர்வத்ர ஸமதர்சநரூபமான ஜ்ஞாந விபாக முண்டாகுமென்று பாஷ்யகாரர் அருளிச் செய்கிறார். அப்படிப்பட்ட ஓர் அதிகாரி தேறுவனாகில் அவனுடைய ஸர்வத்ரஸமதர்சித்வம் எப்படிப் பட்டதென்று நேராகக் கண்டு கொள்ளலாம். ... ... ●

6. ஆறுவது அத்யாயத்தில் (5.) * **உத்தரேத் ஆத்மநாத்மாநம் நாத்மாநமவஸாதயேத், ஆத்மைவ ஹ்யாத்மநோபந்து: ஆத்மைவ ரிபுராத்மந:** * என்கிற ச்லோகம் ஒவ்வொருவருடைய நெஞ்சிலும் அநவரதமும் ஊன்றியிருக்கத்தக்கது. தன்னைக்கொண்டே தான் கடைத்தேறவேணுமென்றும், தன்னைத்தானே கெடுத்துக் கொள்ளலாகாதென்றும், தனக்குத் தானே உறவு, தனக்குத்தானே பகைவன் என்றும் இந்த 'ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. ஒருவன் கடைத்தேறுவதற்குப் பல பல ஸாதனங்கள் வேண்டியிருக்கின்றன. ஸத்ஸஹவாஸம் வேணும், ஆசார்யோபஸேவை வேணும், பிராட்டியை முன்னிட்டு எம்பெருமான் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுதல்வேணும்......... என்றிப்படியாக உஜ்ஜீவனத்திற்கு வேண்டியவை பல இருந்தாலும் இவற்றுள் மிக முக்கியமான ஸாதனம் மனம் ஒன்றேயாம். அதை விஷயாந்தரங்களில் யதேஷ்டமாகச் செல்லவிட்டு வைத்தால் தன்னைத்தானே மாய்த்துக் கொண்டபடியாகும். மனத்தை விஷயக்ராமங்களில் புகவிடாமல் ஆத்மோஜ்ஜீவனத்திற்கு அபிமுகமாக்குமளவில் அந்த மனத்தைக்கொண்டு தான் வாழ்ந்தவனாவன். ஆகவே, மனமானது உறவாயு மிருக்

கும், பகையாயு மிருக்கும். உறவாகக்கொண்டு வாழ்வதே விவேகிகளின் பணி ; பகையாகக்கொண்டு பாழாய்ப் போகவேண்டாமென்று கீதாசார்யன் வெகு பொருத்தமாக உபதேசித்தருளுகின்றான். ... ... ... ... *

7. ஏழாமத்யாயத்தில்—(17.) * **தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த:** * என்னும் ச்லோகத்தின் உத்தரார்த்தம் **"ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய:"** என்றுள்ளது. இங்கு நம் ஸ்வாமி "ஜ்ஞாநிந: அஹம் அத்யர்த்தம் ப்ரிய:" என்று க்ரமாந்வயத்தையே திருவுள்ளம்பற்றி பாஷ்யமிட்டருளினார். இவ்வந்வயக்ரமத்தில்—ஞானிக்குத்தன்னிடத்தில் ப்ரீதி அதிகம் என்றதாக விளங்குகிறது. உண்மையில், பகவானிடத்தில் ஞானி வைத்திருக்கிற ப்ரீதி அதிகமா? ஞானியினிடத்தில் பகவான் வைத்திருக்கிற ப்ரீதி அதிகமா? என்று ஆராய்ந்து பார்க்கு மனவில் ஞானியினிடத்தில் பகவான் வைதிருக்கிற ப்ரீதிதான் அதிக மென்னத் தகும். ஆகவே இந்த ச்லோகத்தில் **[அத்யர்த்தம்]** என்பதை 'அஹம் ப்ரிய:' என்பதிலே கூட்டுவதைவிட 'மம ப்ரிய:' என்பதிலே கூட்டுவதுதான் ரஸவத்தரமென்று திருவுள்ளம் பற்றின ஸ்வாமி ஸ்ரீபாஷ்யத்தில் சரமஸூத்ரமான *அநாவ்ருத்தி ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் **"அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா"** என்கிற அநர்க்கமான வாக்யத்தினால் அந்த அந்வய க்ரமத்தையும் காட்டியருளினார். அந்த ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியின்படி ப்ரக்ருத கீதாச்லோகாந்வயம் எப்படி கொள்ளவேணு மென்னில்; "ஜ்ஞாநிந: அஹம் ப்ரிய: ; ஸ ச மம அத்யர்த்தம் ப்ரிய:" என்றிங்ஙனே கொள்ளவேணும். உபயபாஷ்யத்திலும் துல்யமான அந்வயக்ரமமே விவக்ஷித மென்று சில பண்டிதர்கள் கூறுவதுண்டு. இங்கு நாம் வாதப்ரதிவாத ருசியுடையோமல்லோம். ... ... ... *

8. எட்டாமத்யாயத்தில் ஒரு நிதி காட்டுகிறேன் காண்மின். (14,) * **அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகிந:.*** என்கிற சுலோகத்தின் உண்மைப் பொருளைக் கண்டுணர்ந்து பாஷ்யமிட்டருளினவர் நம் ஸ்வாமி. இதை மிக விவரித்து அடியேன் வேறு சில நூல்களில் விளக்கியிருக்கிறேன். இங்கு மிகச் சுருக்கமாகத் தெரிவிக்கிறேன். *நாயமாத்மாச்ருதியில் ***யமேவைஷ வ்ர்ணுதே தேந லப்ய:*** * என்றதிலுள்ள அர்த்தவிவாதத்தை ஸ்வாமி தமது பாஷ்யத்தில் அறவே அறுத்தருளுகிறார். அதை தாத்பர்ய சந்த்ரிகா ஸ்ரீ ஸூக்திகள் மிக நன்றாக விளக்குகின்றன. சேதநனுடைய காரியங்களில் பசை யறுத்து எம்பெருமானுடைய க்ருதியின் ப்ராபல்யத்தை ஸ்திரீகரிப்பது இவ்விடத்து பாஷ்யம். பரகத ஸ்வீகாரத்தின் பெருமையை யுணர்த்துவதென்றபடி. **"தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே. ......அத்யர்த்தமத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமீதி அர்த்த:"** இத்யாதிபாஷ்ய ஸ்ரீஸூக்திகளையும், **"உக்தஸ்ய அதிவாத மாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாம் ஆஹ—* யமேவேதி."** என்கிற தாத்பர்ய சந்த்ரிகா ஸ்ரீஸூக்தியையும் சிந்தனை செய்வது. ... ... ... ... *

9. ஒன்பதாமத்யாயத்தில் (26) ***பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி, ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந:*** * என்கிற ச்லோகத்தினால் கண்ணபிரான் தான் ஆராதனைக் கெளியன் என்னுமிடத்தை அருளிச் செய்கிறான். இதர தெய்வங்களிற் காட்டில் எம்பெருமான் எத்தனையோ விதங்களால் நெடுவாசி பெற்றிருப்பது போல இவ்வகையாலும் நெடுவாசி பெற்றிருக்கிறான், 'ஆடு பலி கொடு, கோழி பலி கொடு' என்று அருந்தேவைகளையிட்டு மஹாபரிச்ரம ஸாத்யங்களான ஆராதனைகளை அபேக்ஷித்திருப்பவை தேவதாந்தரங்கள்; எம்பெருமான்படியோ அப்படியன்று. நாம் இட்டது கொண்டு த்ருப்தியடைவதே அவனது ஸ்வரூபம்.

எம்பெருமானுக்கு நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பதானது அவனுக்கு ஏற்கெனவே யில்லாததொரு பூர்த்தியை யுண்டாக்குவதற்காகவன்று. நாம் ஸத்தை பெறுவதற்காக. அவனே அவாப்த ஸமஸ்தகாமன்; அன்னவன் குறையுற்றிருந்து நாமிட்டது கொண்டு பூர்த்தியடைகிறு னென்பது அஸம்பாவிதம், ஸ்வத: பரிபூர்ணனான பரமபுருஷன் திறத்தில் நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பது நமது ஸ்வரூபம் நிறம்பெறுவதற்கே யன்றி அவனை நிரப்புவதற்கன்று என்பது வெளிப்படை. நாம் சிறந்த பெரும் பொருள்களைத் தேடி யிடவேணு மென்பதுமில்லை, இடுகிற பொருள் எதுவாயினும் இடுவது ப்ரேம பூர்வகமாக வேணுமென்பதொன்றிலேயே நியதியுள்ளது. திருமங்கை யாழ்வார் * கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியும் ஆம் பலுமுன் கண்டக்கால் புள்ளாயோ ரேனமாய்ப்புக்கிடந்தான் பொன்னடிக் கென்று, உள்ளாதாருள்ளத்தை யுள்ளமாக் கொள்ளோமே * என்று பெரிய திருமொழியில் (11-7-6) அருளிச் செய்கிறார். திருத்துழாய் முதலிய எந்த வஸ்துவைக் கண்டாலும் 'இது எம்பெருமானுக்குச் சாத்தத்தக்கது' என்று அத்யவஸாயங் கொள்ளாதாருடைய நெஞ்சை நெஞ்சாகக் கொள்ளமாட்டோம் [நஞ்சாகவே கொள்ளுவோம்] என்று உரைக்கின்ற இப்பாட்டில், எம்பெருமானுக்கே உரித்தான திருத்துழாயோடு விஜாதீய வஸ்துக்களும் கூட்டியெடுக்கப்பட்டிருத்தலால், எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்க வேணு மென்கிற சுத்தபாவத்துடனே கொள்ளுகிற புஷ்பம் எதுவாயிருந்தாலும் குற்றமில்லை; * செண்பக மல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி * என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவே யிருக்கவேணு மென்கிற நியதியில்லை, ஏதேனு மொரு புஷ்பமாக இருக்கலாமென்பதும், பக்திப் பெருங்காதலே முக்கியமான தென்பதும் தோற்றுவிக்கப்பட்டன. * **பத்ரம் புஷ்பம்** * என்று மேலே யெடுத்த கீதா ச்லோகமும் 'இடுகிற பொருளில் வாசி பார்ப்பதில்லை; இடுகிறவன் னெஞ்சில் ஈரமுள்ளதா என்பதொன்றையே பார்ப்பேன்,' என்று ஸ்பஷ்டமாகக் காட்டுகின்றது. பூர்வார்த்தத்தில் '**யோ மே பக்த்யா ப்ரயச்சதி**' என்று சொல்லிவைத்து உத்தரார்த்தத்திலும் '**தத் பக்த்யுபஹ்ருதம்**' என்று மீண்டும் சொல்லியிருக்கிறதல்லவா? **தத்** என்றாலே போதுமாயிருக்க 'பக்த்யுபஹ்ருதம்' என்றது பக்தியின் கனமே முக்கியமென்று காட்டுதற்காம். ... ... ... ... *

10, 11. பத்து பதினொன்று ஆகிய இரண்டத்யாயங்களின் ஸாரங்களைச் சேர்த்து அநுபவிப்போம். பத்தாவது அத்யாயத்திற்கு விபூத்யத்யாயமென்று பெயர்; பதினோராமத்யாயத்திற்கு விச்வரூபாத்யாய மென்று பெயர்; பத்தாமத்யாயத்திற்கு ஸ்வாமி யெம்பெருமானாருடைய அவதாரிகை வருமாறு:—கீழே பக்தியோகம் ஸாங்கமாக விவரித்துரைக்கப்பட்டது; இப்பொழுது பக்தியுண்டாவதற்காகவும் அது வளருவதற்காகவும் எம்பெருமானுடைய [தன்னுடைய] நிகரற்ற ஐச்வர்யம் முதலிய திருக்கல்யாணகுணங்களின் திரள் அளவு கடந்திருக்கிற படியையும், உலகமெல்லாம் தனக்கு சரீரமாயிருக்கையாலே அவனுருவாய் அவன் ஏவச்செல்லும்படியாயிருக்கின்றமையும் விஸ்தரித்துச் சொல்லப்படுகின்றன—என்று. இடையிடையில் அர்ஜுநன் கேள்வி கேட்டால் அதற்குமேல் கண்ணன் விடை கூறுவது என்கிற முறையை இவ்விடத்தில் வைத்துக்கொள்ளாமல் தானாகவே * **பூய ஏவ மஹாபாஹோ! ச்ருணு மே பரமம் வச:** * (10-1) என்று, மீண்டும் நான் சொல்லுவதைக் கேளப்பா! என்று ஆரம்பித்துச் சொல்லுகிறான்; இப்படி அப்ருஷ்டோத்தரமாகச் சொல்லுவது கூடுமோ வென்று சங்கிக்க இடமில்லாதபடி உத்தரார்த்தத்தில் * **யத் தேஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா** * என்று, ச்ரோதாவான அர்ஜுநனுடைய முகத்தில் ப்ரீதி **விசேஷத்தைக்கண்டு இவனுக்கு இன்னமும்** விரிவாகச் சொல்லியே யாகவேண்டு

மென்று திருவுள்ளம்பற்றிச் சொல்லுவதாகக் காட்டப்படுகிறது. 'விஷயம் கேட்கிறவன் சிறிது வெறுப்போடிருப்பதாகத் தெரியவந்தால் வக்தாவுக்கு மேன்மேலும் சொல்ல வாயெழும்பாது; ச்ரோதா ப்ரஸந்நமுகனைத் தென்பட்டால் அபூர்வமான விஷயங்களும் 'என்னைக்கொள் என்னைக்கொள்' என்று முற்பட்டு நினைவுக்கு வந்து நிற்கும். அவற்றை யெல்லாம் சொல்லியே தீரவேண்டியதாகும். இங்கு 10, 11. ஆகிய இரண்டத்யாயங்களிலும் சொல்லப்புகுகிற விஷயங்கள் கீதா சாஸ்த்ரத்தினுள் ஸாரங்களாயிருப்பதால் இவற்றைச் சொல்லத் தொடங்கும்போதே அர்ஜுநன் தன்னுடைய அவாவை அதிகமாகக் காட்டினனென்பது **"ப்ரீயமாணாய தே"** என்பதனால் விளக்கப்படுகிறது. அவன் ப்ரீதனைத் தென்படாமற் போனாலுங் கூட அவனுடைய ஹிதத்தை யுத்தேசித்துத் தான் சொல்லியே தீரப்போகிறதாகக் காட்டப்படுகிறது **"வக்ஷ்யாமி ஹிதகாம்யயா"** என்பதனால். ஆக, இவ்விரண்டத்யாயங்களிலும் தெரிவிக்கப்படுகிற அர்த்தங்கள் ப்ரியங்களுமாய் ஹிதங்களுமாயிருக்குமென்று ஆரம்பத்திலேயே அறிவிக்கப்பட்டதாயிற்று. (10-19.) * **ஹந்த தே கதயிஷ்யாமி விபூதீ ராத்மநச் சுபா:, ப்ராதாந்யத: குருச்ரேஷ்ட! நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே** * என்று, அர்ஜுநா! என்னுடைய மிகவழகிய விபூதிகளை உனக்குச் சொல்லுகிறேன்; எல்லாவற்றையும் சொல்லுவதென்றால் அவற்றுக்கு முடிவே கிடையாமையாலே சொல்லப் போகாது; உன்னால் கேட்கவும் போகாது; ஆகையாலே முக்கியமாகச் சிலவற்றைச் சொல்லுகிறேன் கேளாய் என்று சொல்லி, (21) * **ஆதித்யாநாமஹம் விஷ்ணு:** * என்று தொடங்கி முப்பத்தொன்பதாவது ச்லோகமளவும் சொன்னான். இவையெல்லாம் கேட்ட அர்ஜுநன் (11-1ல்) ***யத் த்வயோக்தம் வசஸ் தேந மோஹோயம் விகதோ மம*** என்று, கண்ணா! நீ சொன்னவற்றையெல்லாம் கேட்டு என்னுடைய மோஹ மெல்லாம் தொலைந்தது என்று சொல்லி, (11-3ல்) * **த்ரஷ்டுமிச்சாமி தே ரூபமைச்வரம் புருஷோத்தம** * என்று பகவானுடைய அஸாதாரண ரூபத்தைக் காண்பதிலே தனக்கு விருப்பமிருப்பதாக வெளியிட்டான். அவனுக்குக் கண்ணபிரான் விச்வரூபம் காட்டியருளத் திருவுள்ளம்பற்றி அதை ஊனக்கண்ணாலே காண முடியாதாகையால் அது காண்கைக்காக திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்தருளி விச்வரூபத்தை அற்புதமாகக் காட்டியருளினான். ஆக, பத்தாமத்யாயத்தில் விபூதி விஸ்தாரத்தைப் பேசி, பதினோராமத்யாயத்தில் விச்வரூபத்தைக் காட்டியருளினானாயிற்று. இவையெல்லாம் எம்பெருமானுடைய உடைமைகள் என்றதாயிற்று. ... ... *

12. பன்னிரண்டாமத்யாயத்தில் 18, 19 ச்லோகங்கள் ஸாரமானவை. அவை யாவன—* **ஸமச் சத்ரௌ ச மித்ரே ச ததா மாநாவமாநயோ:, சீதோஷ்ண ஸுக துக்கேஷு ஸமஸ் ஸங்கவிவர்ஜித:, துல்ய நிந்தாஸ்துதிர் மௌநீ ஸந்துஷ்டோ யேந கேநசித், அநிகேத: ஸ்திரமதிர் பக்திமாந் மே ப்ரியோ நர:,** * என்பன. பகைவனிடத்திலும் நண்பனிடத்திலும் ஒரேவிதமான பாவனையுள்ளவனும், பஹுமானம் நேர்ந்தாலும் அவமானம் நேர்ந்தாலும் அவற்றையும் துல்யமாகவே பாவிப்பவனும், சீதோஷ்ணங்களையும் ஸுகதுக்கங்களையும் ஸமமாக நினைப்பவனும், எதிலும் பற்றில்லாமலிருப்பவனும், பிறர் நிந்திப்பதையும் துதிப்பதையும் துல்யமாக நினைப்பவனும், ஒருவரோடும் பேசாமலிருப்பவனும், ஏதேனுமொன்றினால் ஸந்துஷ்ட சித்தனாயிருப்பவனும் உறுதியும் பக்தியு முடையவனுமானவன் எனக்குப் பரம ப்ரீதிபாத்ர பூதன் என்று சொல்லுகிறான் கண்ணபிரான். இப்படிப்பட்ட அதிகாரி உலகில் மிகவும் துர்லபனேயாயினும் இப்படியிருக்க ஆசைப்படவேணு மென்பதற்காகவே இஃது அருளிச் செய்தபடி. **இத்தகைய அதிகாரிகள் இமயமலைச் சாரல்களில் காணப்படுவர்கள்.** ... *

13. பதின்மூன்றுமத்யாயத்தில் முதல் ச்லோகமும் இரண்டாம் ச்லோகமும் சிறிது விபரீதவுணர்ச்சியை உண்டாக்குவது போலுள்ளது. இங்கு ஸ்வாமியினுடைய பாஷ்யமும் அதற்கு டீகையான தாத்பர்ய சந்த்ரிகையும் மிகமிக விரிவாக அமைந்திருக்கின்றது. மூல ச்லோகங்களாவன—* **இதம் சரீரம் கௌந்தேயஃ க்ஷேத்ரமித்யபிதீயதே, ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹுஃ க்ஷேத்ரஜ்ஞ இதி தத்விதஃ** * என்பது முதல் ச்லோகம், இனி இரண்டாவது ச்லோகமாவது * **க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத !, க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞானம் யத் தத் ஜ்ஞானம் மதம் மம** * என்பது. இங்கு (ஆபாத ப்ரதீதியில்) மேல்நோக்கில் என்ன தோற்றுகிறதென்றால், க்ஷேத்ரமென்னப்படுகிற அசேதநமும், க்ஷேத்ரஜ்ஞனென்னப்படுகிற சேதநனும் ஆகிய இரண்டையும் அர்ஜுநா! நானாக அறிந்துகொள் என்னப்படுகிறது பூர்வார்த்தத்தில்; க்ஷேத்ர—க்ஷேத்ரஜ்ஞர்களாகிற சேதநாசேதநங்களை யறிந்து கொள்வதென்பது யாதொன்றுண்டோ, அது தான் என்னையறிந்து கொள்வதாகும் என்கிறது உத்தரார்த்தத்தில். இவற்றால் அத்வைதவாதம் ஸித்திக்கிறதென்று கருதிய சங்கராசாரியர் தமது பாஷ்யத்தில் அக்கருத்தை விளக்கியிருக்கின்றார். அதற்கு விரிவான மறுப்பு நமது ஸ்வாமியின் பாஷ்யத்திலுள்ளது; மிகமிக விரிவான மறுப்பு தாத்பர்யசந்த்ரிகையிலுள்ளது. அதன் ஸாரத்தை மிகவும் சுருக்கமாகத் தெரிவிக்கிறேனிங்கு. தேஹத்திற்காட்டிலும் ஆத்மா வேறுபட்டவன் என்பது தெரிந்திருக்கச்செய்தேயும் 'தேவோஹம் மநுஷ்யோஹம்' என்று வ்யவஹாரம் செய்துவருகிறோம். அஹம் என்பதற்கு ஆத்மாஅர்த்தமேயொழிய தேஹம் அர்த்தமன்று; தேவத்வமோ மநுஷ்யத்வமோ சரீரத்திலுள்ளதேயன்றி அஹமர்த்தமான ஆத்மாவிலுள்ளதன்று. அப்படியிருந்தும் 'தேவஃ அஹம், மநுஷ்யஃ அஹம்' என்று ஸமாநாதிகரணமாக ப்ரயோகிப்பது எப்படி பொருந்துகிறதென்றால் கேண்மின்; ஆத்மாவும் சரீரமும் ஒன்றைவிட்டொன்று தனித்து நிற்பனவல்ல. தேஹமானது. ஆத்மாவுக்கு அப்ருதக்ஸித்தவிசேஷணமாய்க்கொண்டேயிருப்பதால் இந்தச் சேர்த்தியையிட்டு 'தேவஃ அஹம், மநுஷ்யஃ அஹம்' என்று வ்யவஹரிக்கப்பட்டு வருகிறது. இதற்கு அர்த்தம் என்னவென்றால், தேவ சரீரகஃ அஹம், மநுஷ்ய சரீரகஃ அஹம்—என்பதேயாம். ஏவஞ்ச, சரீராத்மபாவரூபமான ஸம்பந்தத்தைக்கொண்டு பொருத்தப்பட்டதாயிற்று. இவ்வண்ணமாகவே * **க்ஷேத்ரஜ்ஞஞ் சாபி மாம் வித்தி** * என்றதும் சரீராத்ம பாவ ஸம்பந்த நிபந்தனமாகவே பொருந்தக் குறையில்லை. அசேதநமான தேஹமானது ஜீவாத்மாவுக்கு சரீரமாயிருப்பது போல, இவ்விரண்டும் சேர்ந்து பரமாத்மாவுக்கு சரீரமாயிருக்கும் விஷயம் ஸுபாலோபநிஷத்து முதலானவற்றில் ஸுப்ரஸித்தமா யிருப்பதால் க்ஷேத்ரத்தையும் க்ஷேத்ரஜ்ஞனையும் பரமாத்மாவாக நினைப்பதென்பது க்ஷேத்ரத்தையும் க்ஷேத்ரஜ்ஞனையும் சரீரமாகக் கொண்டவன் பரமாத்மா'' என்று நினைப்பதாகவே முடிந்து நிற்கும். இவ்விஷயம் பலபல உபபத்திகளுடன் ஸ்வாமி பாஷ்யத்தில் விரித்துரைக்கப் பட்டிருப்பது காண்க. ... *

14. பதினான்காமத்யாயத்தில் (24,25ல்) * **குணாதீதஸ் ஸ உச்யதே** * என்று ஓர் உத்தமாதிகாரி சொல்லப்படுகிறான். இவனுக்கு குணாதீதனென்று பெயர். குணங்களைக் கடந்தவனென்று பொருள். ஸகலகுணங்களுக்கும் கொள்கலமாக இருப்பவனன்றோ உத்தமாதிகாரி; குணங்களைக் கடந்தவன் எப்படி உத்தமாதிகாரியாவன்? என்று கேள்வி பிறக்கக்கூடும். இங்கு விவக்ஷிக்கப்படுகிற குணங்கள் சமதமாதிகுணங்களல்ல; ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள். *முக்குணத்து வாணியத்து இரண்டிலொன்று நீசர்கள் * என்று திருமழிசைப்பிரானும். *முக்குணத்திரண்டவையகற்றி, ஒன்றினிலொன்றி நின்று * என்று திருமங்கையாழ்வாரும் அருளிச் செய்கிறபடி ரஜஸ் தமோ குணங்களிரண்டுதானே ஹேயங்கள்; ஸத்வகுணம் உபாதேயந்தானே; அதுவுங்கூட

ஹேயமென்று தோன்றும்படியுள்ளதேயென்று நினைக்கவேண்டா; சுத்தஸத்வம் என்பது உபாதேயமே. ரஜஸ் தமஸ்ஸுக்களோடு கலசின ஸத்வம் உபாதேயமன்று, அது ஹேயமே. ஆக, தமோகுணமும் ரஜோகுணமும் ரஜஸ்தமோமிச்ரஸத்வகுணமு மாகிய முக்குணங்களையும் கடந்தவன் குணாதீதனெனப்படுவான். இவனை நாம் எப் படித் தெரிந்துகொள்ளுவதென்றால் அவனுடைய நிலைமையைக் கொண்டு தெரிந்து கொள்ளலாம். அந்த நிலைமை தெரிவிக்கப்படுகிறது இரண்டு ச்லோகங்களினால். *** "ஸமதுக்க ஸுகஸ் ஸ்வஸ்த: ஸமலோஷ்டாச்ம காஞ்சந:, துல்யப்ரியாப்ரியோ தீரஸ் துல்ய நிந்தாத்ம ஸம்ஸ்துதி:; மானாவமானயோஸ் துல்யஸ் துல்யோ நிந்தாரிபக்ஷயோ: ஸர்வாரம்பபரித்யாகீ குணாதீதஸ் ஸ உச்யதே *** என்னு மிவ்விரண்டு ச்லோகங்களும் அநவரதம் கண்டபாடம் செய்யத்தக்கன. ஸுகம் வந்தாலும் துக்கம் வந்தாலும் ஒரேவிதமான சித்தவ்ருத்தியையுடையனாயிருக்கவேணுமென்கிறது. [**'ஸமதுக்கஸுக:**] என்பதனால். அதன்மேல் [**ஸ்வஸ்த;**] என்கிறது. இதற்கு இவ்விடத்தில் அபூர்வமான வ்யுத்பத்தியைக் காட்டியருளுகிறார் ஸ்வாமி யெம்பெருமானார். (தன்னிடத்திலேயே யிருப்பவன்) என்கிறார். உடனே அதை விவரிக்கிறார்—உலகில் ஸுகதுக்கம், ப்ரியா ப்ரியம் என்னும் சப்தங்கள் விசேஷமான பொருள்வாசியையுடையனவல்ல; பர்யா யசப்தங்கள் போலவேகாணும். ஆனாலும் விஷய பேதத்தாலே பொருள் பேதித் திருக்கும். [**"ஸமலோஷ்டாச்மகாஞ்சன:"**] லோஷ்டத்தையும் கல்லையும் பொன்னையும் துல்யமாக நினைப்பவன். இப்படியாக மேன்மேலும் சொல்லப்படுகிற தன்மைகள் இந்நிலத்தில் நம் போன்ற பாமரர்களுக்கு எவ்வளவு பழக்கம் செய்தாலும் வாய்க்கக் கூடியவையல்ல. இத்தகைய நலம் வாய்ந்தவர்கள் பூலோகம் முழுவதற்குள்ளும் ஒருவரிருவர் தேறுவதும் அருமையென்னலாம். ஆயினும் இப்படிப்பட்ட ச்லோ கங்களை நாம் மனனம் செய்துகொண்டே யிருந்தால் பெரிதும் பயன்படும் என்றிவ் வளவே சொல்லலாம்.கீழே பன்னிரண்டாமத்யாயத்திலும் இது சொன்னோம். ... *

15. பதினைந்தாமத்யாயத்தில் (15) *** ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்தஸ் ஸ்ம்ருதிர் ஜ்ஞானமபோஹநஞ் ச. வேதைச் ச ஸர்வைரஹமேவ வேத்யோ வேதாந்த க்ருத் வேதவிதேவ சாஹம்.*** இந்த ச்லோகத்தின் பூர்வார்த்தம் பகவத்கீதைக்கு அவ தாரிகை போன்றிருக்கும். (எங்ஙனே யென்னில்;) யுத்தம் செய்வதற்கு மிகுந்த உத்ஸாஹத்தோடு குருக்ஷேத்ரம் வந்து சேர்ந்த அர்ஜுனன் தீடீரென்று யுத்தஞ் செய்ய மாட்டேனென்று வில்லையும் அம்புகளையும் எறிந்துவிட்டு உட்கார்ந்ததான்து அவனு டைய ஸொந்த எண்ணத்தினாலன்று. எப்படியாவது கீதா சாஸ்த்ரத்தை அவதரிப் பிக்க வேணுமென்று தீவிரமான குதூஹலங்கொண்டிருந்த கண்ணபிரான் சாஸ்த்ர ச்ரவணத்திற்குப் பூர்வாங்கமாக அர்ஜுனனுக்கு நிர்வேதத்தை யுண்டாக்கவே விளை வித்த வைராக்யமது என்று (2ல்) சொன்னோம். அதைத்தான் இங்கு ஸூசனையாகக் காட்டுகிறான். ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் நானே உறைந்திருந்து ஜ்ஞான ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையுண்டாக்கிவருகிறேன் என்று சொல்லுகிறானிங்கு. இது வேதாநுக்ருஹீதமுமான அர்த்தம். *** அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா *** இத்யாதிச்ருதிகள் காண்க. இனி உத்தரார்த்தத்தின் விவரணம் கேண்மின். [இங்கு சங்கரபாஷ்யத்திலுள்ள விவரணம் மிகவும் ஸாமாந்யமானது. நம் ஸ்வாமி பாஷ்யத் தின்படி விவரணம் கேளீர்.] **வேதைச் ச ஸர்வை ரஹமேவ வேத்ய:**—கர்மகாண்டங்களி லும்கூட எனக்குத்தான் ப்ரசம்ஸையுள்ள தென்றபடி. ஸ்ரீரங்கராஜஸ்தவ-உத்தர சதகத்தில் * ஆம்நாய வேதா: ப்ரமாணம் * என்கிற சுலோகத்தின் நான்காவது பாதம் "வேத்யோ வேதைச் ச ஸர்வைரஹமிதி பகவந் ஸ்வேந ச வ்யாசகர்த்த" என்பது. அங்கு அடியேனுடைய வியாக்கியானத்தில் விரிவு காண்க. **[வேதாந்தக்ருத்]** "வேதாந்

தார்த்த ஸம்ப்ரதாயக்ருத்'' என்றுரைத்தார் சங்கராசாரியர். **அந்தம்** என்பதற்குப் பலன் என்று பொருள். வேதோக்த கருமங்களை யனுட்டிப்பவர்களுக்கு நானே பலனளிப்பவன் என்பது ஸ்வாமியின் ஸமஞ்ஜஸமான பாஷ்யம். **[அஹமேவ வேதவித்]** ஸர்வவேத வேத்யன் நானேயென்றும், வேதோக்தகர்ம பல ப்ரதாதா நானேயென்றும் அறியாதவன் வேதவித்தல்லன்; இப்படியறிகிற நானே வேதவித்து என்றபடி.

16. பதினாறு மத்யாயத்தில் தேவாஸுரவிபாகம் முக்கியமானது. தைவப் பிறப்பு அஸுரப்பிறப்பு என்று பிறப்பிலேயே இருவகையுண்டு. (16-6.) * **த்வௌ பூத ஸர்கௌ லோகேஸ்மிந் தைவ ஆஸு ஏவ ச** * என்று, உலகத்திலுள்ள பிராணிவர்க்கங்களை யெல்லாம் இரண்டே வகுப்பாக வகுக்கிறான் கீதாசார்யன். தைவவகுப்பு ஒன்று, ஆஸுரவகுப்பு மற்றொன்று. இதைப்பற்றிச் சுருக்கமாகத் தெரிந்து கொள்ள வேணுமானால் * **தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாய ஆஸுரீ மதா** * (16-5) என்கிற வொரு பாதி ச்லோகத்தை மனனம் பண்ணினாற்போதும். ஸம்ஸாரபந்தத்தில் நின்றும் விடுபட்டு ஸத்கதியை யடையும் வழியைச் சிந்தனை செய்யும் வகுப்புதான் தெய்வ வகுப்பெனப்படுவது. அப்படிப்பட்ட சிந்தனையின்றிக்கே அதோகதியை யடையும் வழியைத் தேடும் வகுப்புதான் ஆஸுர வகுப்பெனப்படுவது. இங்ஙனே சொன்னதைக் கேட்டவுடனே அர்ஜுநனுடைய முகத்தில் துக்கக் குறி காணப்பட்டது. நம்மைக் கண்ணபிரான் தைவவகுப்பில் சேர்த்திருக்கிறானோ ஆஸுரவகுப்பில் சேர்த்திருக்கிறானோ தெரியவில்லையே யென்று அர்ஜுநன் கவலையுற்று நின்றான். அதை யறிந்த கண்ணபிரான் உடனே யருளிச் செய்கிறான் * [**மா சுசஸ் ஸம்பதம் தைவீம் அபிஜாதோஸி பாண்டவ!**] * அப்பா! நீ கவலை கொள்ளாதே, நீ தெய்வ வகுப்பில் சேர்ந்தவனே யென்று கூறி அவனைப் பரமானந்தப்படுத்துகிறான். தான் செய்யும் உபதேசங்களை அவன் ருசிவிச்வாஸங்களோடு கேட்டுக் கொண்டிருப்பது பற்றியே அவனைத் தைவஸம்பத்து வாய்ந்தவனாக அறுதியிட்டருளினன் கண்ணபிரான். நமக்கு ஆஸ்திக்ய முள்ளதா? நாஸ்திக்ய முள்ளதா? என்பது உலகில் அவரவர்களுடைய நெஞ்சுக்குத் தெரியுமன்றோ. ஆஸ்திக்ய முண்டாகில் நம்முடைய பிறப்பு தெய்வப் பிறப்பு என்று தானே நிச்சயித்துக் கொள்ளலாம். அஃதில்லையாகில் ஆசுரப் பிறப்பே நமக்கு வாய்த்ததென்று நிச்சயித்துக்கொள்ள என்ன தடை? இத் தீய பிறப்பின் தன்மைகளை மேலே பல ச்லோகங்களினால் கண்ணபிரான் தானே நன்கெடுத்துக் கூறுகின்றான். * **ந சௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே. அஸத்யமப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரநீச்வரம்** * இத்யாதிகள் காண்க. ... ... *

17. பதினேழாமத்யாயத்தில் மூவகையான தபஸ்ஸுக்களைக் கூறுகின்றான் கண்ணன். அவை சாரீர தபஸ்ஸென்றும், வாங்மயதபஸ்ஸென்றும், மாநஸதபஸ்ஸென்றும் வழங்கப்படுவன. * ஊன்வாட வுண்ணாது உயிர்காவலிட்டு உடலிற்பிரியாப் புலனைந்தும் நொந்து, தான்வாட வாடத் தவஞ்செய்ய * என்றும், * காயோடு நீடுகனி யுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து தீயூடு நின்று தவஞ்செய்ய * என்றும் ஆழ்வார்கள் ஒருவிதமான உடல்தவத்தை யருளிச் செய்துள்ளார்கள். கீதாசார்யன் அருளிச்செய்வது அதனில் வேறுபட்டது. பகவானையும் அந்தணர்களையும் ஆசாரியர்களையும் பண்டிதர்களையும் வழிபாடு செய்வது, புண்ய தீர்த்தங்களில் குடைந்தாடுவது, நெஞ்சில் நினைத்தபடியே அனுஷ்டித்துக் காட்டுவது, மாதர்களைக் கண்டு காதல் கொள்ளாமை, ப்ராணி பீடைகள் செய்யாமை ஆகிய இவை காயிக தபஸ்ஸென்கிறான். * **அநுத்வேககரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத், ஸ்வாத்யாயாத்யயநம் சைவ வாங்மயம் தப உச்யதே** * என்பது வாங்மயமான தபஸ்ஸைத் தெரிவிக்கும்

ச்லோகம். பிறரை நோவச் செய்யாத வார்த்தைகளைச் சொல்லுவது, உண்மையைச் சொல்லுவது, ப்ரியமும் ஹிதமுமானவற்றைச் சொல்லுவது, வேதமோதுவது ஆகிய விவை வாசிகதபஸ்ஸெனப்படும். * **மநஃப்ரஸாதஸ் ஸௌம்யத்வம் மௌனமாத்மவிநிக்ரஹஃ, பாவஸம்சுத்திரித்யேதத் தபோ மானஸ, முச்யதே** * கோபம் முதலியன கொள்ளாமையாகிற மனத்தெளிவு, பிறர்க்குத் தீங்கிழைக்க நினையாமையாகிற ஸௌம்யத்வம்; வாய்திறந்து பேசாமை, ஸதா தியானிக்கத் தகுந்த பரமபுருஷன் விஷயத்திலே நெஞ்சைச் செலுத்துகை, வேற்றுவிஷயங்களில் சிந்தனை கொள்ளாமை ஆகிய இவை மாநஸதபஸ் ஸெனப்படும். இங்ஙனம் மூவகைப் பட்ட தபஸ்ஸுமறுபடியும் மூவகையாக வகுக்கப்படுகிறது; ஸாத்விகமென்றும் ராஜஸமென்றும் தாமஸ மென்றும். அங்கே விரிவு காண்க. ... ... ... *

18. கீதையுபதேசம் கேட்பதற்கு முன்பு அர்ஜுநன் இருந்த இருப்பு என்ன? இப்போது நின்றநிலை என்ன? என்பதே ஸாரமாக இங்கு உய்த்துணரத் தக்கது. நான் யுத்தம் செய்யமாட்டேனென்று வில்லையும் அம்புகளையும் விட்டெறிந்து தேர்த்தட்டிலே உட்கார்ந்து விட்டான் என்பது முதலத்யாயத்தின் முடிவில் சொல்லப்பட்டது. நீ சொன்னபடியே செய்கிறேனென்று சொல்லி யுத்தத்திற்கு உடன்பட்டு நின்றானென்பது பதினெட்டாமத்யாயத்தின் முடிவில் சொல்லப்பட்டது, அவரவர்களுக்கு ஸ்வதர்மத்தில் ருசியையுண்டாக்குவதே கீதையின் முழுநோக்கு என்றதாயிற்று. இந்த கீதாசாஸ்த்ரம் அவதரித்திருக்கிற ரீதியை ஊன்றி நோக்குமிடத்து வெகு ஆச்சரியமாக வேயிருக்கிறது. திருவாய்மொழியில் (4-8-6.) * அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவரறிய, நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத்தொரு மூர்த்தி* என்கிற பாசுரத்தில் கீதையின் பெருமை ஸாரமாக அருளிச் செய்யப்பட்டது. இதன் அருமை பெருமையைக் கண்ணபிரான் தானே முடிவில் * **இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந, ந சாசுச்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோப்யஸூயதி** * என்கிறவொரு ச்லோகத்தினால் அற்புதமாகப் பேசினான். அர்ஜுநா! நான் உனக்குச் சொன்ன இந்த பரம குஹ்யமான சாஸ்த்ரத்தை அதபஸ்கனுக்குச் சொல்லாதே, அபக்தனுக்குச் சொல்லாதே, அசுச்ரூஷுவுக்குச் சொல்லாதே, என்னிடத்தில் அஸூயை யுள்ளவனுக்குச் சொல்லாதே யென்று கட்டளையிடுகிறான் கண்ணபிரான். இங்கு "ந ச மாம் யோப்யஸூயதி" என்ற விடத்திற்கு நம் பாஷ்யகாரர் பாஷ்யமிட்டருளுகிறார்; காணக் கண்ணாயிரம் வேண்டும்; கேட்கக் காதாயிரம் வேண்டும். நவில நாவாயிரம் வேண்டும். என்னுடைய ஸ்வரூபத்தையும் என்னுடைய ஐச்வர்யத்தையும் என்னுடைய குணங்களையும் ஒருவர் எடுத்துரைத்தால் அவற்றில் தோஷாவிஷ்கரணம் செய்பவனே என்னிடத்தில் அஸூயை கொண்டவன், அவனுக்கு நீ ஒன்றும் சொல்லாதே—என்று கண்ணபிரான் கட்டளை யிடுவதாக ஸ்வாமி பாஷ்யம் செய்தருளுகிறார். பகவத் குணங்களை எத்தனை உயர்த்தியாகச் சொன்னாலும் அத்தனையும் ஒக்கும்! ஒக்கும்!! என்றிராதே அவற்றில் அஸம்பாவிதத்வத்தை உபபாதிக்கிறோம் கேண்மினென்று, தங்களுக்குண்டான பாண்டித்யத்தை யெல்லாம் பகவத் குணங்களை இல்லைசெய்வதிலும் இறக்குவதிலுமே உபயோகப்படுத்துகிறவர்கள் பகவத் கீதைக்கு வெகுதூரத்திலே நிற்கவேண்டுமென்பது ஸ்வாமி திருவுள்ளமாகக் காண்கிறது. ... *

## 4. பகவத்கீதையில் பதினெட்டு முற்றிற்று

---

# 5. பூருவாசாரிய க்ரந்தங்களைப்பற்றிப் பதினெட்டு

நம்முடைய பூருவாசாரியர்களில் மணவாளமாமுனிகளீறுகவுள்ள பரிகணிதர்களான ஆசாரியர்கள் பதினெண்மர்தாம் க்ரந்தங்களை யருளிச்செய்து உபகாரம் செய்தருளினவர்கள் என்று நிரூபிக்கப் படுகிறது. இது வொரு விலக்ஷணமான பதினெட்டு.

1. **ஆளவந்தார்.** முதன்மையான ஆசாரியர் ஸ்ரீமந்நாதமுனிகளானாலும், அவர் தாமும் நியாய தத்வமென்கிற க்ரந்தமருளிச்செய்ததாகப் பிரஸித்தியிருந்தாலும் அந்த திவ்ய க்ரந்தம் லுப்தமாயிற்றென்று தெரிவதனால் ஆளவந்தாரையே முந்துற முன்னம் கொள்ளுகிறேன், இவரருளிச்செய்த க்ரந்தங்களுள் ஒன்றிரண்டு லுப்தங்களெனப் படுகிறது. இப்போது பிரசாரத்திலுள்ள க்ரந்தங்களாவன—ஸ்தோத்ர ரத்னம். சதுச்ச்லோகி, ஸித்தித்ரயம். ஆகமப்ராமாண்யம். கீதார்த்தஸங்க்ரஹம். இவையே. புருஷ நிர்ணயமென்கிற ஒரு க்ரந்தம் லுப்தமென்று தெரிகிறது, ஸித்தித்ரயத்தை கத்ய த்ரயம்போலே மூன்று க்ரந்தமாகக் கணக்கிடுவர் பெரியார், [குருபரம்பராஸாரம் காண்க]. ... ... ... ... ... *

2. **எம்பெருமானார்.** ஸ்வாமியருளிச் செய்த க்ரந்தங்களில் ஒன்றுகூட லுப்தமானதாகத் தெரியவில்லை. 'நவரத்னம்' அல்லது 'நவநிதி' என்னும்படியாக ஸ்வாமி ஸாதித்தருளின க்ரந்தங்கள் ஒன்பது. கீதாபாஷ்யம், ஸ்ரீ பாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தஸாரம், வேதார்த்த ஸங்க்ரஹம், சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவை குண்ட கத்யம், நித்யம்—என்னுமிவை ஒன்பது க்ரந்த ரத்னங்களாம். வேதாந்த தீப வேதாந்த ஸாரங்களுக்குத் தவிர மற்ற ஏழு க்ரந்தங்களுக்கும், வியாக்கியானங்கள் அவதரித்துள்ளன. வேதாந்த தேசிகனருளிச் செய்த ஸ்ரீ பாஞ்சராத்ரரக்ஷையில் மூன்றுமதிகாரத்திற்கு நித்யவ்யாக்க்யாநாதிகாரமென்று பெயரிட்டிருப்பதால் நித்யத் திற்கும் வியாக்கியான முள்ளதாகக் கொண்டோம். ... ... *

3. **திருக்குருகைப்பிரான்பிள்ளான்.** *தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப்பிரான் பிள்ளான், எதிராசர் பேரருளால்—உள்ளாருமன்புடனே மாறன்மறைப் பொருளை அன்றுரைத்தது, இன்பமிகுமாறுயிரம் * என்கிற உபதேசரத்தினமாலைப் பாசுரப் படியே எம்பெருமானார் திருவாணையின்படி திருவாய்மொழிக்கு முதன்முதலாக ஆறுயிரப்படியென்கிற ஸங்க்ரஹ வியாக்கியானமிட்டருளினவர் திருக்குருகைப்பிரான் பிள்ளான். ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் முதன்முதலாகத் திருவவதரித்த மணிப்ரவாள க்ரந்தம் [அதாவது ஸம்ஸ்க்ருதத்ராவிட மிச்ரமான க்ரந்தம்] இதுவேயாகும்.

4. **கூரத்தாழ்வான்.** ஸ்ரீவைகுண்ட ஸ்தவம், அதிமாநுஷஸ்தவம், ஸுந்தர பாஹு ஸ்தவம், வரதராஜ ஸ்தவம், ஸ்ரீ ஸ்தவம் என்னுமிந்த பஞ்சஸ்தவங்கள் ஆழ்வானருளிச் செய்தவை. வியாக்கியானத்தோடுகூடிய யமகரத்நாகரம் ஆழ்வானருளிச் செய்ததாகச் சொல்லப்படுவது விவாத க்ரஸ்தம். கூரேச விஜயம் பின்புள்ளார் பணித்ததென்று அதிலேயே வ்யக்தமாகிறது. சரமச்லோக வியாக்கியானமும் நித்யமுமருளிச்செய்திருந்ததாக தேசிகன் உதாஹரிக்கிறுர் ; அவை லுப்தங்கள். கூரத்தாழ்வான் திருவடியான கூரநாராயண ஜீயர் **ஸுதர்சநசதகம்** பணித்தார். ஆனல் இவர் ஆசார்ய பரம்பரையில் சேர்ந்தவரல்லர். மந்த்ரசாஸ்த்ரத்தில் மஹாநிபுணர்.

5. **பட்டர்.** [ஸ்ரீ பராசரபட்டார்யரென்பது இவரையே.] இவரருளிச் செய்த க்ரந்தங்கள்—ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவம், ஸ்ரீ குணரத்நகோசம், ஸ்ரீ ரங்கநாதஸ்தோத்ரம் [*ஸப்தப்ராகாரமத்யே* இத்யாதி.] அஷ்டச்லோகி. **பகவத்குண** தர்ப்பணமென்று மறுபெயருடைய ஸஹஸ்ரநாமபாஷ்யம். க்ரியாதீபமென்கிற நித்யக்ரந்தம். கைசிக புராண வியாக்கியானம். நம்பெருமாள் திருமஞ்சனச்லோக ரத்னங்கள். லக்ஷ்மீ கல்யாண நாடகமும் தத்வரத்நாகரமும் லுப்தங்கள். பட்டருடைய திருத்தம்பியாரான சீராமப் பிள்ளையின் திருக்குமாரரான வேதாசார்யர் **க்ஷமா ஷோடசி** யருளிச்செய்தார்.

6. **நஞ்சீயர்.** பட்டர் திருவடிகளிலே ஆச்ரயித்த நஞ்சீயரருளிச் செய்த க்ரந்தங்களாவன—திருவாய்மொழிக்கு வியாக்கியானமான ஒன்பதினாயிரப்படி. திருப்பாவை வியாக்கியானம், கண்ணிநுண்சிறுத்தாம்புவியாக்கியானம். நித்யமும் ஸ்ரீஸூக்தபாஷ்யமும் லுப்தங்கள். ... ... ... *

7. **எங்களாழ்வான்.** ஸ்ரீ விஷ்ணு சித்தார்ய ரென்கிற எங்களாழ்வான் மஹாஜ்ஞாநாதிகராய் விளங்கினவர், ஸ்ரீ பாஷ்யத்தில் அப்ரதிம பாண்டித்யம் பெற்றவர். ஸ்ரீவிஷ்ணு சித்தீயமென்கிற ஸ்ரீ விஷ்ணு புராண வியாக்கியானமொன்றுதா னருளிச் செய்ததாகத் தெரியவருகிறது. ... ... ... *

8. **நடாதூரம்மாள்.** வாத்ஸ்ய வரதாசார்ய ரென்னுமிவர் எங்களாழ்வான் திருவடிகளிலாச்ரயித்து மஹாஜ்ஞாதாவாயிருந்தவர் அருளிச்செய்தவை.—**தத்வஸார** மென்கிற ஸ்ரீ பாஷ்யார்த்த ஸாரஸங்க்ரஹ ரூபமான க்ரந்தம், ப்ரபந்நபாரிஜாதம், ப்ராதரநுஸந்தேயச்லோகமாலா, பரத்வாதிபஞ்சகம். ... ... *

9. **நம்பிள்ளை.** இவரருளிச் செய்தவை—திருவாய்மொழி வியாக்கியானமான ஈடு முப்பத்தாறாயிரப்படி. திருவிருத்த வியாக்கியானமான ஈடு. இவற்றை வடக்குத் திருவீதிப்பிள்ளையின் க்ருதிகளாகவுங் கொள்ளலாம். நம்பிள்ளை கங்காப்ரவாஹமாக அருளிச்செய்தவைகளை ஏடுபடுத்தினவர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. ஆகவே இவற்றை இருவருடையவும் க்ருதியாகக் கொள்ளத் தட்டில்லை. ... *

10. **வடக்குத் திருவீதிப் பிள்ளை.** இவர் திவ்யப்ரபந்த வியாக்கியானமாக வல்லாமல் வேறு சில க்ரந்தங்களுமருளிச் செய்திருப்பதாகக் காண்கிறது. குன்றத்தூரய்யன் திருக்குமாரரான அப்பன் ஸ்ரீ நிவாஸாசார்யர் பணித்ததாக (1913-ஆம் வருஷத்தில்) தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டுள்ள அஷ்டச்லோகி பெரியபடி வியாக்கியானத்தில் (பக்கம் 14லும் 66லும்) வடக்குத் திருவீதிப்பிள்ளை அஷ்டாக்ஷர தீபிகையென்றொருக்ரந்த மருளிச்செய்திருப்பதாக உதாஹரிக்கப்பட்டுள்ளது. அது லுப்தமென்றே சொல்லவேணும். ... ... ... ... *

11. **பெரியவாச்சான் பிள்ளை.** இவரருளிச் செய்த க்ரந்தங்கள்—நாலாயிர திவ்யப்பிரந்த வியாக்கியானங்கள். அதிலும் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம் நானூறு பாசுரங்களுக்கு லுப்தம். ஸ்தோத்ர ரத்ன வியாக்கியானம். ஜிதந்தா வியாக்கியானம். நிகமனப்படியென்கிற மிகச் சிறியதொரு ரஹஸ்ய க்ரந்தம். ஸ்ரீராமாயணநுதி தனிச்லோகம். ... ... ... *

12. **பிள்ளை லோகாசாரியர்.** இவரருளிச் செய்த க்ரந்தங்கள். **அஷ்டாதசரஹஸ்யம்.** அவையாவன—ஸ்ரீ வசநபூஷணம், தத்வத்ரயம், அர்த்தபஞ்சகம், அர்ச்சிராதி, ப்ரமேயசேகரம், ப்ரபந்நபரித்ராணம். ஸாரஸங்க்ரஹம், ஸம்ஸாரஸாம்ராஜ்யம், நவரத்னமாலை, நவவிதஸம்பந்தம், யாத்ருச்சிகப்படி. பரந்தபடி, ச்ரிய: பதிப்படி

தத்வசேகரம். தனிப்ரணவம், தனித்வயம், தனிசரமம், முமுக்ஷுப்படி. இந்த ரஹஸ்ய க்ரந்தங்கள் தவிர வேறு சில க்ரந்தங்களும் இவரருளிச் செய்திருந்ததாகத் தெரியவருகிறது. கத்யத்ரயத்திற்கு ஒரு வியாக்கியான மருளிச்செய்திருந்ததாக மணவாள மாமுனிகளெடுத்துக் காட்டியருளுகிறார் ;—தத்வத்ரயத்தில் ஈச்வர ப்ரகரணத்தில் (6) "ஜ்ஞாநா நந்தைக ஸ்வரூபனுகையாவது ஆநந்த ரூபஜ்ஞாநனுயிருக்கை" என்றவிடத்து மாமுனிகளின் வியாக்கியானத்தில் "அநுகூலஜ்ஞானமே ஸ்வரூபமாயிருக்க ஜ்ஞாநானந்தங்களென்று பிரித்துச் சொல்லுகிறது இரண்டு முண்டாகைக்காக, என்றிறே இவர் தாமிட்டருளின கத்ய வ்யாக்க்யானத்திலே அருளிச்செய்தது" என்கிற ஸ்ரீஸூக்தி காண்கிறது. அந்த வியாக்கியானம் லுப்தம். ... *

13. **அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்.** இவர் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் இளைய திருக்குமாரர் ; பிள்ளைலோகாசார்யருடைய திருத்தம்பியார். இவரருளிச் செய்த க்ரந்தங்கள்—ஆசார்ய ஹ்ருதயம். அருளிச்செயல் ரஹஸ்யம், திருப்பாவைக்கு ஆருயிரப்படி வியாக்கியானம். கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம், அமலனுதி பிரான் வியாக்கியானம். (பெரிய திருமடல் வியாக்கியானம்,) ஆசார்ய ஹ்ருதயத்திற்கு மூலமான பட்டோலை, (இது லுப்தம்.) ... ... *

14. **ஸ்ரீஸுதர்சந பட்டர்.** ச்ருதப்ரகாசிகாசார்ய ரென்பது இவரையே. இவர் நடாதூரம்மாள் திருவடிகளிலே யாச்ரயித்து தீபாதுத்பந்ந ப்ரதீபம் போலே மிக விளங்கினவர். இவரருளிச் செய்த க்ரந்தங்கள்—ஸ்ரீபாஷ்யத்திற்கு விபுல வியாக்கியானமான ச்ருதப்ரகாசிகையும், அதிஸம்க்ஷிப்த வியாக்கியானமான ச்ருதப்ரதீபிகையும், வேதார்த்த ஸங்க்ரஹ வ்யாக்யானமான தாத்பர்ய தீபிகையும். சரணுகதிகத்ய வ்யாக்யானமும், ஸுபாலோபநிஷத்பாஷ்யமும். ... ... *

15. **ஸ்ரீமந்நிகமாந்த தேசிகன்.** ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் அதிக ஸங்க்யையான க்ரந்தங்கள் அருளிச்செய்தவர் இவ்வாசிரியர். அந்த க்ரந்தங்கள் ஸ்தோத்ராவளீ விபாகம், காவ்ய நாடக விபாகம், வேதாந்த விபாகம், வ்யாக்க்யான விபாகம், ஸம்ப்ரதாய விபாகம் என்று ஐந்து தொகுதிகளாக அடியேனுல் வகுத்து அச்சிடப்பட்டுள்ளது. உலகமெல்லாம் பரவியுள்ளது. ... ... *

16. **ஆச்சான்பிள்ளை.** இவர் பெரியவாச்சான் பிள்ளையின் திருக்குமாரரும் திருவடியுமாவர். இவர், பரந்த ரஹஸ்யம், மாணிக்கமாலை, சதுச்ச்லோகீ வியாக்கியானம், தத்வ ஸங்க்ரஹம் முதலான க்ரந்தங்களை யருளிச் செய்தவர். ... *

17. **வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர்.** இவர் ஆச்சான் பிள்ளை திருவடிகள். இவரருளிய க்ரந்தங்கள்—திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படியுரை, திருவிருத்தத்திற்கு ஸ்வாபதேசவுரை, திருப்பாவைக்கொரு ஸங்க்ரஹ வியாக்கியானம். தத்வதீபம், தீபப்ரகாசம், தத்வநிரூபணம், ரஹஸ்யத்ரய காரிகாவளீ, தீபஸங்க்ரஹம். *

18. **மணவாளமாமுனிகள்.** ஸ்வாமி எம்பெருமானுரான பூர்வாவதாரத்திலருளிச் செய்தவை ஒன்பது திவ்ய க்ரந்தங்கள் ; அவற்றுக்கிரட்டிப்பாகப் பதினெட்டு க்ரந்தங்கள் இவ்வவதாரத்திலருளிச் செய்தவை. 1. முமுக்ஷுப்படி வியாக்கியானம், 2. தத்வத்ரய வியாக்கியானம், 3. ஸ்ரீவசநபூஷண வியாக்கியானம், 4. ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானம், 5. பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம் [நானூறு பாசுரங்களுக்கு,] 6. இராமாநுச நூற்றந்தாதியுரை, 7. உபதேச ரத்தினமாலை, 8. திருவாய்மொழி நூற்றந்தாதி, 9. ஆர்த்திப் பிரபந்தம், 10. ஞானஸார ப்ரமாண யோஜனை, 11. ப்ரமேய ஸாரப்ரமாண யோஜனை, 12. யதிராஜவிம்சதி, 13. தேவராஜ

மங்களம், 14. கீதாதாத்பர்ய தீபம் (லுப்தம்), 15. திருவாராதன ப்ரயோகம், 16. ஈட்டு ப்ரமாணஸங்க்ரஹம். (இப்போது அச்சிடப்பட்டிருப்பதல்ல.) 17. ரஹஸ்ய ப்ரமாண ஸங்க்ரஹம், 18. திவ்யதேசமங்களாசாஸன மாலிகை. ... *

ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# 6. ராமாநுஜனுக்கும் ராமாநுஜருக்கும் ஒற்றுமைகள் பதினெட்டு

**முகுந்தமாலை** யென்னும் ஸ்தோத்ரத்தில் **"ஹே ராமாநுஜ! ஹே ஜகத்த்ரய குரோ! ஹே புண்டரீகாக்ஷ மாம் ஹே கோபீஜநநாத! பாலய"** என்று ராமாநுஜ திருநாமத்தினாலே பல ராமாநுஜனை கண்ணபிரான் அழைக்கப்பட்டுள்ளான். ஆகவே கண்ணபிரானுடைய அந்தத்திருநாமமே ஸ்வாமி உடையவர்க்குச் சாத்தப்பட்டதென்று கொள்ளுகிற ஸம்பிரதாயமும் ஒன்றுண்டு. யதிராஜ ஸப்ததியில் **"சமிதோதய சங்கராதிகர்வ: ஸ்வபலாத் உத்த்ருதயாதவ ப்ரகாச:, அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய:"** என்ற ச்லோகம் இதற்கு ஆதாரமாக அவதரித்ததாகும். கண்ணபிரானுக்கும் உடையவர்க்கும் பல படிகளாலும் ஸாம்யமுண்டு. கண்ணபிரானகத் தோன்றின பகவான் செய்த செயல்களும் ஸ்ரீராமாநுஜர் செய்தருளின செயல்களும் ஒத்திருக்கையாகிற ஒற்றுமைநயம் ஈண்டு நிரூபிக்கப்படுகிறது. மேலே யெடுத்துக் காட்டிய * **சமிதோதய சங்கராதிகர்வ:** * இத்யாதியான யதிராஜஸப்ததிச்லோக ரத்னத்தில் கண்ணனுக்கும் உடையவர்க்கும் ஸாம்யம் சிலேடையினால் நிர்வஹிக்கப்பட்டுளது: அது வடமொழிக்கடலில் ஆழ்ந்தவர்கட்கே ரஸிக்கக்கூடியது. இப்போது இங்கு நாம் பதினெட்டு வகையாக நிரூபிக்கும் ஒற்றுமை சரித்திரப்போக்கில் ஸம்பந்தப்பட்டதாகும். கேண்மின் ;— ... ... ... *

1. கண்ணபிரான் திருவவதாரஞ் செய்த இடம் சிறைக் கூடம் என்பது உலகமறிந்தது. ஸ்ரீராமாநுஜர் அவதரித்த இடமும் சிறைக் கூடமே. எப்படியெனில்; * அமரரோடு உயர்விற் சென்று அறுவர்தம் பிறவி யஞ்சிறையே * [திருவாய்மொழி 1—3—11] என்ற நம்மாழ்வார் திருவாக்கின்படி இந்த ஸம்ஸார மண்டலமே ஒரு சிறைக்கூடமன்றோ. இஃது * இருள்தருமா ஞாலமாதலால் இருள் மலிந்த விடத்தே வந்து பிறந்தார் உடையவர். கண்ணனும் * இருள் நாள் பிறந்த வம்மான் * என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தின்படியும் * வேண்டித் தேவரிரக்க — வீங்கிருள்வாய் வந்து பிறந்ததும் * என்ற நம்மாழ்வார் பாசுரத்தின்படியும் இருள்மலிந்த போழ்தன்றே வந்து பிறந்தது. ... ... ... ... *

2. கண்ணபிரான் அவதரித்தபோது ***ஜாதோஸி தேவதேவேச சங்கசக்ரகதாதர!*** என்கிறபடியே சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையனுகவே சுடர்விளக்கத்தோடு திருவவதரித்தான். ஸ்வாமி அவதரிக்கும்போதும் நம்போலியரைப்போலே அழுதல் அரற்றுதல் செய்யாதே மிக்க ஞான வெள்ளச் சுடர் விளக்கத்தையே காட்டிக் கொண்டு அனைவரும் வியப்புறுமாறு அவதரித்தார். ... ... *

3. கண்ணபிரான் பிறந்த விடம் ஒன்று; இளமையில் வளர்ந்த விடம் வேறொன்று; பிறகு வளர்ந்தவிடம் மற்றொன்று. (அதாவது) வடமதுரையிலே பிறந்தது; திருவாய்ப்பாடியிலே இளமையில் வளர்ந்தது; பிறகு முதுமையில் த்வாரகை முதலான விடங்களில் வளர்ந்தது. நம் ஆசாரியரும் பிறந்தது, ஸ்ரீபெரும் பூதூரில்; இளமையில் வளர்ந்தது காஞ்சீபுரியில்; பிறகு வளர்ந்தது ஸ்ரீரங்கம் திருநாராயணபுரம் முதலான விடங்களில். ... ... ... *

4. [மற்றொரு வகையுமுண்டு;] "திருமந்திரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து" என்கிற நம்முன்னோர்களின் முதுமொழியின்படியே திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தினால் ஸ்வரூபவுணர்ச்சி பெறுதலாகிற பிறவியைப்பெற்று, த்வயம் என்கிற மந்த்ரரத்னத்தின் அநுஸந்தானத்தையும் அதன்படி அனுட்டானத்தையுமே செல்வ வாழ்ச்சியாகக் கொண்டிருப்பவரென்க. பிறக்குமிடம் திருமந்த்ரம்; வளருமிடம் த்வயம்—ஆக இதனாலும் கண்ணனோடு ஒப்புமை. ... ... *

5. கண்ணபிரான் பிறந்த வயிற்றில் இவனொருவனே பிறக்கவில்லை; *மக்களறு வரைக் கல்லிடை மோத இழந்தவள் தன் வயிற்றில், சிக்கன வந்து பிறந்து நின்றாய் * [பெரியாழ்வார் திருமொழி 5-3-1.] என்கிறபடியே மற்றும் பல மக்கள் பிறந்தாருண்டு; ஆனால் அந்தப் பிள்ளைகளினால் உலகுக்கு யாதொரு உதவியும் நேர்ந்ததில்லை; அவர்கள் பிறந்ததும் இறந்ததுமே தெரியவருகின்றது. இதுபோல, எம்பெருமானார் திருவவதரித்த இவ்வுலகத்தில் மற்றும் பலபேர்களும் ஒக்கப்பிறக்கின்றார்களெனினும் அவர்களால் உலகுக்கொரு நன்மையுமில்லையாயிற்று. அவர்களின் பிறப்பும் இறப்புமேதான் உலகுக்குத் தெரியும். ... ... *

6. கண்ணபிரான் வடமதுரையில் நின்றும் திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளும் போது **"வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ"** என்னும்படி பேராழமான பெருவெள்ளமும் முழந்தாளளவாக வற்றிப்போயிற்றென்று தெரியவருகிறது. அதுபோல, நம் ஆசாரியர் சிறிது ஸஞ்சரிக்கத் தொடங்கும்போதே "பிறவியென்னுங் கடலும் வற்றிப் பெரும்பதமாகின்றதால்" என்ற பெரியாழ்வார் திருவாக்கின்படியே ஸம்ஸாரமாகிற பெருங் கடலும் வற்றத் தொடங்கிற்றென்க. ... *

7. பராத்பரனான பெருமான் தனது பெருமைகளை யெல்லாம் மறைத்து அடக்கிக்கொண்டு நீறு பூத்த நெருப்புப்போலேயாகி இடக்கை வலக்கை யறியாத ஆயர்களோடே கலந்து பழகினான்; அதுபோல எம்பெருமானாரும் மிகுஞானச் சிறுகுழவியாய்த் தமது ஞானசக்திப்பெருமைகளையெல்லாம் மறைத்துக்கொண்டு அறிவிலா மனிசரோடே கலந்து பழகியிருந்தனர். கண்ணன் இடையர்களோடு மாத்திரம் கலந்து பழகி யிருந்தானல்லன்; தன்னை வதைக்க வழிபார்த்திருந்த ஆஸுரப்ரக்ருதிகளோடும் கலந்திருந்து காலங் கழித்தனன். எம்பெருமானாரும் தம்மை மாய்க்க வெண்ணின யாதவப்ரகாசர்போல்வாரிடத்திலும் கலந்திருந்து காலங் கழித்ததுண்டே. கண்ணன் விரோதிகளை முடித்தனன்; இவர் வாழ்விப்பதும் செய்தனர். *

8. வளர்ந்தருளுமிடத்தில் தீயபுந்திக் கஞ்சனால் ஏவப்பட்ட பூதனை தாய் வேஷம் பூண்டுவந்து நஞ்சு தீற்றிய முலையை உண்ணக் கொடுத்துக் கண்ணனைக் கொல்ல முயன்று தானே முடிந்துபோனாள். இந்தப் பூதனையின் வரலாற்றைப் பேசுகின்ற தேசிகர் யாதவாப்யுதயத்தில் * **கம்ஸப்ரயுக்தா கில காபி மாயா** * என்று மாயை என்கிற சொல்லால் கூறினர். மாயை யென்று மூலப்ரக்ருதிக்குப்பெயர். அது உண்மையில் விஷம்போன்றதாயிருக்கச் செய்தேயும் தன்னிடத்தில் போக்யதா

புத்தியை யுண்டுபண்ணிக்கொண்டு தன்பக்கலிலே யீடுபடுத்தி நம்போல்வாரை முடிக்கப்பார்க்கிறது. இப்படியே ஆசாரியரையும் முடிக்கப் பார்க்கையில் அவரை முடிக்க மாட்டாமல் அவரது அளவற்ற பெருமையினால் தானே முடிந்து நின்றது. *

9. *கள்ளச் சகடங் கலக்கழியக் காலோச்சி* [திருப்பாவை—6] என்றபடி அஸுராவேசம் பெற்றவொரு சகடத்தைக் கண்ணன் திருவடிஸ்பர்சத்தால் நொறுக்கி முறித்து முடித்தனன் என்பது ப்ரஸித்தம். எம்பெருமானாரும் தமது திருவடி ஸ்பர்சத்தினால் சகடபங்கஞ் செய்தவரே, (எப்படியெனில்) ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுபோகும் ஸாதனம் சகடமெனப்படுவது. இங்கிருந்து நாம் அப்பால் செல்லப் பல வழிகளுண்டு; நரகம் சுவர்க்கம் முதலானவற்றின் வழிகளிற் கொண்டு செல்லுவது கள்ளச் சகடமாகும்; நம் ஆசாரியருடைய திருவடி ஸம்பந்தத்தினால் அது தொலைந்தொழிந்ததேயாம். அர்ச்சிராதி மார்க்கமாகிய நல்வழியிற் செல்லும் ஸாதனமே மேம்பட்டுத் தீயவழிகளில் செல்லும் ஸாதனம் சிதைந் தொழிந்ததென்க.

10. கயிற்றினால் கட்டி ஒருரலிலே பிணித்துவிடப்பெற்ற கண்ணன் அவ்வுரலையுமிழுத்துக்கொண்டு தவழ்ந்து இரட்டை மருதமரங்களின் நடுவே யெழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அந்த இரட்டை மரங்களிரண்டும் முறிந்து விழுந்தனவாக யமளார்ஜுன பங்க விருத்தாந்த முள்ளது. இணைபிரியாதே நின்ற இரட்டை மருத மரங்கள்போல இணைபிரியாது நின்று நம்மை நலியுமவை பலவுண்டு; பகவத்கீதையில் நான்காவது அத்யாயத்தில் *** த்வந்த்வாதீதோ விமத்ஸர: *** என்றும், ஏழாவது அத்யாயத்தில் *** த்வந்த்வமோஹேந பாரத *** என்றும் பதினைந்தாமத்யாயத்தில் *** த்வந்த்வைர் விமுக்தாஸ் ஸுக து:க்க ஸம்ஜ்ஞை: *** என்றும் இப்படிப் பலவிடங்களில் த்வந்துவம் (இரட்டை) என்று பல சொல்லப்பட்டுள்ளன; இன்பு துன்பு. அஹங்கார மமகாரம், காமக்ரோதம், புண்ணிய பாபம்...என்னுமிவையெல்லாம் இரட்டைகளாம். இவையெல்லாம் எம்பெருமானார் திருவடி ஸம்பந்தம் பெற்றவளவிலே இற்றொழிந்தனவென்க. "காமாதி தோஷஹரமாத்மபதாச்ரிதாநாம்." ... ... ... *

11. *வையமேழுங் கண்டாள் பிள்ளைவாயுளே * என்றும் * வாயுள் வையகங் கண்ட மட நல்லார் * என்றும் சொல்லுகிறபடியே கண்ணபிரான் தனது திருவாயில் ஏழுலகங்களையும் அன்பர்களுக்குக் காட்டினன். அதுபோல எம்பெருமானாரும் 1. ச்ருதிகள், 2. ஸ்மிருதிகள், 3. இதிஹாஸங்கள், 4. புராணங்கள், 5. பாஞ்சராத்ரங்கள், 6. ஆழ்வாரருளிச்செயல்கள், 7. ஆசார்ய திவ்யஸூக்திகள் ஆகிய ஏழையும் தமது திருவாக்கில் அன்பர்கட்குக் காட்டியருளினர். ... ... *

12. யமுனையாற்றில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்னியினால் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினன். இவ்வரலாற்றை யாதவாப்யுதயகாவியத்தில் தேசிகர் கூறுமிடத்து (4-125) ஸ்ரீ ராமாநுஜர் செய்தருளின செயலையே உவமையாகக் காட்டியருளினர். ஐந்தலைவாய் நாகமாகிய காளியன் யமுனையாற்றைக் கலக்கிக் கெடுத்தது—விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம்போனபடியெல்லாம் கூறும் தவறான பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி யமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்தது—ஸ்வாமி தவறான பொருள்களை நீக்கி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக ஆக்கின படியாம். யமுனையின் ஸ்தானத்தில் வேதம்; காளியன் ஸ்தானத்தில் குதர்க்கவாதிகள்; கண்ணன் ஸ்தானத்

தில் ஆசாரியர். * தூயபெரு நீர் யமுனைத் துறைவனை * என்னும்படி யமுனையாறு இடையறுத பகவத் ஸம்பந்தத்தை யுடையதாயிருந்ததுபோல வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடைத்தாயிருக்குமிறே. ... ... *

13. காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை யுமிழ்ந்து நாசம் விளைவித்தது போல புறமதத்தவர்கள், ஐந்துவிதமான துர்வாதங்களாலே நாசத்தை விளைவிக்கின்றனர்; (எப்படி யென்னில்) 1. ஈச்வரனே யில்லையென்னுதல், 2. ஈச்வரன் உண்டெனினும் அவன் அனுமானத்தால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்த்ரத்தால் ஸித்திப்பவனல்லன் என்னுதல்; 3. சாஸ்த்ரங்களைக்கொண்டு ஈச்வரனை யங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் இல்லை யென்னுதல்; 4. ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை, பல ஈச்வரர்கள் உண்டென்னுதல், 5. பிரபஞ்சமேயில்லை—ஸர்வம் சூன்யம் என்னுதல். ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்தங்களினால் புறமதத்தவர்கள் வேதங்களைக் கெடுக்க, அந்தக் கெடுதல்களை எம்பெருமானார் போக்கியருளினர், காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போலே * நாவலிட்டுழிதருகின்றோம் நமன் தமர் தலைகண்மீதே * (திருமாலை—1) என்ற கணக்கிலே யமபடர்களின் தலைமீதும் குத்ருஷ்டிகளின் தலைமீதும் கூத்தாடப்பெறுவோம். ... ... *

14. குதிரை வடிவங்கொண்டு மஹாபயங்கரனாகவந்த கேசி யென்னு மஸுரனைக் கண்ணபிரான் தொலைத்தருளினன்; அதுபோல நம்பேராசிரியர் * **இந்த்ரியாணி ஹயாநாஹு:** * என்ற உபநிஷத்தின்படியே குதிரைகளாகச் சொல்லப்பட்ட இந்திரியங்களின் வலியை யடக்கி ஜிதேந்த்ரியராய் * **மதநகதநைர் ந க்லிச்யந்தே யதீச்வரஸம்ச்ரயா:** * (யதிராஜஸப்ததி) என்று சொல்லும்படி வாழ்ந்தவர். ... *

15. கம்ஸனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஓரசுரன் விளாமரத்தின் வடிவமாய், தன் கீழே கண்ணன் வரும்போது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்து நிற்கவும், மற்றொரு அசுரன் கண்ணனை முட்டிக்கொல்லும்பொருட்டுக் கன்றின் வடிவங்கொண்டு நிற்கவும் இவற்றையறிந்த கண்ணபிரான் "விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே." "கன்றுகொண்டு விளங்கனியெறிந்து" என்கிறபடியே கன்றைச்சுழற்றி விளவின்மீதெறிந்து இரண்டையும் ஒருசேரமுடித்தருளினன் என்ற வரலாறு முள்ளைக்கொண்டே முள்ளைக் களைகிறபடியைக் காட்டுகின்றது. இதுபோலவே ஸ்வாமி ஸ்ரீ பாஷ்யகாரர் புறமதங்களைக் கண்டிக்குமிடத்து அவை பரஸ்பரவ்யாஹதங்களாயிருக்கும்படியை நன்கு நிரூபித்துக்காட்டி அவைகளைக்கொண்டே அவற்றை மறுத்தொழிப்பவர்... *

16. இடையர்கள் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பற்பல வண்டிகளில் சோறும், தயிரும், நெய்யும், காய்கறிகளும் சேகரிப்பதைக்கண்டு கண்ணன் அப்பூசனையனைத்தையும் கோவர்த்தனமலைக்கே இடும்படி கட்டளையிட்டுத் தானே ஒரு தேவதாரூபங் கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள. இந்திரன் பசிக்கோபத்தினால் மேகங்களை ஏவிக் கடூரமான கல்மழையை ஏழுநாள் பெய்விக்க, அதனால் யார்க்கும் யாதொரு தீங்கும் நேரிடாதபடி கண்ணன் அம்மலையையே குடையாக வெடுத்துப்பிடித்து நின்றனன் என்பது ப்ரஸித்தமான கதை: தேவதாந்தரத்திற்கு வழிபாடு செய்வதைப் பொறுத தன்மையும் அந்தவழிபாடுகளையெல்லாம் தானே ஏற்றுக்கொள்ளும் தன்மையும், அதனால் எதிரி என்ன தீங்கு செய்ய நினைத்தாலும் அதற்குப் பிரதியாகத் தீங்கிழைக்க நினையாத பெருந்தகவும், தன்னையடுத்தவர்களைத் தான் ரக்ஷித்துக்கொண்டு நிற்றலுமாகிய விஷயங்கள் இவ்விதிஹாஸத்தில் கிடைக்கின்றன. * மறந்தும் புறந்தொழாமாந்தர் * என்றிருக்குமாசிரியர் தேவதாந்தர

பஜனத்தைச் சிறிதும் ஸஹியார். "திருவில்லாத் தேவரைத் தேறேல்மின் தேவு" என்று துணிந்து உபதேசிப்பர். * **ஸாக்ஷாத் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாநுத் தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா** * என்றும் * பீதகவாடைப் பிரானர் பிரமகுருவாகி வந்து* என்றுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமானே ஆசார்யனாக வந்து பிறந்ததனால் ஆராதனைகளெல்லாம் ஆசார்யனுக்கே சேரும். "குற்றஞ் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்" [ஸ்ரீவசனபூஷணம் 305] என்றிருப்பவர் ஆசார்யராகையாலே தீங்கிழைப்பவர் திறத்திலும் ப்ரதியாகத் தீங்கிழைக்க நினையார். பெருமழையில் நின்றும் கண்ணன் காத்தருளினதுபோல * **அவிவேக கநாந்த திங்முகே பஹுதா ஸந்ததது:க்கவர்ஷிணி—பவதுர்த்திநே** * [ஸ்தோத்ரரத்னம் 49] என்னப்பட்ட பெருமழையில் நின்றும் (அதாவது, ஸம்ஸாரத் துயர்ப் பெருமழையினின்றும்) காத்தருளினர். கண்ணன் ஏழுநாள் காத்தனன். ஆசிரியர் காப்பது ஏழேழ் பிறவிக்கும். ... *

17. கண்ணன் நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்துகொள்ளுதற்காக, அவளது தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி அஸுராவேசம்பெற்ற ஏழு எருதுகளை வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்துகொண்டனன். நம் பரமாசார்யர் "எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம்போலே திருமந்த்ரம்" [முமுக்ஷுப்படி 113] என்கிறபடியே திருமந்த்ரமாகிற திருமங்கலியத்தை சேதநர்களுக்குக் கட்டி விவாஹம் நடத்துகைக்கு அங்கமாக, காமம், குரோதம், லோபம், மோஹம், மதம் மாத்ஸர்யம் அஸூயை என்கிற ஏழு விரோதிகளையும் தொலைத்தருளினர். கண்ணன் இரண்டு மல்லர்களை மடித்ததுபோல ஆசிரியர் * நீர் நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து* என்கிறபடியே அஹங்கார மமகாரங்களை அடியறுத்தவர். கண்ணன் குவலயா பீடமென்கிற மதயானையை முடித்தாப்போலே "மதக்களிறைந்தினையும் சேரி திரியாமல் செந்நிறீஇ" என்கிற பொய்கையார் பாசுரத்தின்படியே மதகளிருகிய இந்திரியத்தின் துஷ்டத்தன்மையைத் தொலைத்தவர். கண்ணன் மாலாகாரர் திருமாளிகைக் கெழுந்தருளி அவர் தந்த பூவைப்பெற்று உகந்ததுபோல நம் ஆசிரியர் * **அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ:, ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத:, ஜ்ஞாநம் புஷ்பம் தப: புஷ்பம் த்யாநம் புஷ்பம் ததைவச, ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத்** * என்னப்பட்ட எண்பகர் பூவையும் சிஷ்யர்கள் பக்கலிலே செழித்து வளரக் காணப்பெற்றுக் களித்தவர். ... *

18. கண்ணபிரான் கம்ஸ சிசுபால கௌரவ ப்ரப்ருதிகளை முடித்துப் பஞ்ச பாண்டவாதிகளை வாழ்வித்ததுபோல நம் பரமாசார்யர் *தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும் நான்மறையும் நிற்கக் குறும்பு செய்நீசரும் மாண்டனரென்னுபடியாக *நாட்டிய நீசச் சமயங்களை மாள்வித்து அர்த்தபஞ்சகம் முதலிய விசேஷார்த்தங்களை எங்கும் விளங்கச்செய்தனர்.

**ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியரெழுதிய**
**அஷ்டாதசாஷ்டாதசமஹார்த்தநிதியில்**
**முதல் ஷட்கம் முற்றிற்று**

# 7. மநுஸ்மிருதியில் பதினெட்டு

தர்ம சாஸ்த்ரங்களுக்கு ஸ்ம்ருதியென்று பெயர். **"கலௌ பாராசரம் ஸ்ம்ருதம்"** என்கிறபடியே கலியுகத்தில் பராசரஸ்மிருதிக்குச் சிறப்பு சொல்லப்பட்டிருந்தாலும் வேதத்தில் (2-2.) * **யத் வை கிஞ்ச மநுரவதத் தத்பேஜஷம்** * என்று மநுசொன்னதெல்லாம் மருந்தென்று புகழப்பட்டிருப்பதாலும், * வேதேஷு பௌருஷம் ஸூக்தம் புராணேஷுச வைஷ்ணவம், பாரதே பகவத்கீதா **தர்மசாஸ்த்ரேஷு மாநவம்** * என்று தர்ம சாஸ்த்ரங்களுக்குள்ளே மநுஸ்மிருதி சிறந்ததென்று கூறப்பட்டிருப்பதாலும் மநுஸ்மிருதியின் ப்ராசஸ்த்யம் ஸர்வஸம்மதமானது. மேலே உதாஹரித்த * யத் வை கிஞ்ச மநுரவதத் * என்கிற ச்ருதியில் **மநுः** என்பதற்கு மநுமஹர்ஷி அர்த்தமன்றென்று சிலர் சொல்லுவதுண்டாகிலும் (2-1-1.) *ஸ்ம்ருத்யதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் மநுமஹர்ஷிபரமான அர்த்தமேயுள்ளது. முந்தினபாஷ்யத்திலும் அப்படியேதானுள்ளது. சததூஷணியிலும் (64ல்) உள்ளது. ஆக, மநுஸ்ம்ருதியின் ஏற்றம் வேதமேறினதாதலால் அதிலிருந்து பதினெட்டு விஷயங்கள் ஸாரமாக வெடுத்து நிரூபிக்கப்படுகின்றன. ... ... ... ... ... *

1. (அத். 1. சுலோ. 85) * **அந்யே க்ருதயுகே தர்மாः த்ரேதாயாம் த்வாபரே அபரே. அந்யே கலியுகே ந்ருணாம் யுகஹ்ராஸாநுரூபதः** * = தருமங்கள் எப்போதும் ஒரு படிப் பட்டே யிருக்கமாட்டா. யுகங்களுக்குத் தக்கபடி தருமங்கள் குறைந்துகொண்டே வரும் என்கை. இதற்கடுத்த சுலோகத்தில், க்ருதயுகத்தில் தபஸ்ஸுக்கு ப்ராதான்யமென்றும், த்ரேதாயுகத்தில் ஜ்ஞானத்திற்கு ப்ராதான்யமென்றும், த்வாபரயுகத்தில் யஜ்ஞத்திற்கு ப்ராதான்யமென்றும், கலியுகத்தில் தானமொன்றுக்கே ப்ராதான்யமென்றும் சொல்லப்பட்டுள்ளது. வேறோரிடத்தில் * **த்யாயந் க்ருதே யஜந் யஜ்ஞைஸ் த்ரேதாயாம் த்வாபரே அர்ச்சயந், யதாப்நோதி ததாப்நோதி கலௌ ஸங்கீர்த்ய கேசவம்** * என்று க்ருதயுகத்தில் த்யானத்துக்கு ப்ராதான்யமும், த்ரேதாயுகத்தில் யஜ்ஞத்துக்கு ப்ராதான்யமும், த்வாபரயுகத்தில் அர்ச்சனைக்கு ப்ராதான்யமும், கலியுகத்தில் நாம ஸங்கீர்த்தனத்திற்கு ப்ராதான்யமும் சொல்லப்பட்டுள்ளது. ... *

2. இரண்டாமத்யாயத்தில் 36, 37, 38 ஆம் சுலோகங்கள் குறிக்கொள்ளத் தக்கவை. (36ல்) * **கர்ப்பாஷ்டமே அப்தே குர்வீத ப்ராஹ்மண ஸ்யோபநாயநம்** * என்று கர்ப்பாஷ்டமமாகிய ஏழாவது வயதில் பிராமணனுக்கு உபநயனம்பண்ணவேண்டுமென்றது. (37ல்) **ப்ரஹ்மவர்ச்சஸ காமஸ்ய கார்யம் விப்ரஸ்ய பஞ்சமே** * = ஐந்தாவது வயதிலேயே உபநயநம் பண்ணினால் அப்போதிருந்தே வேதாத்யயன ஸம்பத்து மலிந்து ப்ரஹ்மவர்ச்சஸம் மிகும் என்றபடி. இங்கு **பஞ்சமே** என்பதற்கு "கர்ப்ப பஞ்சமே" என்றே வியாக்கியானம் செய்கிறார்கள். நான்காவது பிராயத்திலென்றதாயிற்று. (38ல்) * **ஆஷோடசாத் ப்ராஹ்மணஸ்ய ஸாவித்ரீ நாதிவர்த்ததே** * = இதனால் பிராமணனுக்குப் பதினாருவது வயது வரையில் உபநயனகாலம் அனுமதிக்கப்படுகிறது. இதே ச்லோகத்தில் க்ஷத்ரியனுக்கு இருபத்திரண்டாம் வயது வரையிலும், வைச்யனுக்கு இருபத்துநான்காம் வயது வரையிலும் உபநயனகாலம் அனுமதிக்கப்பட்டிருப்பதால் இக்காலத்து ப்ராஹ்மணப்பிள்ளைகளுக்கு க்ஷத்ரிய வைச்ய தர்மமே கொள்ளப்பட்டு வருவதாகத் தெரிகிறது. ... ... ... *

3. இரண்டாமத்யாயத்திலேயே (127) நூற்றிருபத்தேழாம் சுலோகம்—***ப்ராஹ்மணம் குசலம் ப்ருச்சேத் க்ஷத்ரபந்து மநாமயம். வைச்யம் க்ஷேமம் ஸமாகம்ய சூத்ரம் ஆரோக்யமேவ ச. *** = இதில் **(ஸமாகம்ய)** என்றது ப்ராஹ்மணம் ஸமாகம்ய, க்ஷத்ர பந்தும் ஸமாகம்ய, வைச்யம் ஸமாகம்ய, சூத்ரம் ஸமாகம்ய என்றபடி. ப்ராம்மணன் அணுகினால் **குசலமா?** என்று கேட்கவெண்டியது ; க்ஷத்ரியன் அணுகினால் **அநாமயமா?** என்று கேட்கவேண்டியது. வைச்யன் அணுகினால் **க்ஷேமமா ?** என்று கேட்கவேண்டியது. சூத்ரன் அணுகினால் **ஆரோக்யமா ?** என்று கேட்கவேண்டியது. இதில் குசலம் க்ஷேமம் என்கிற பதங்களும், அநாமயம் ஆரோக்யம் என்கிற பதங்களும் பரியாய மேயானாலும் இங்கு அர்த்தத்தில் நோக்கில்லை; உச்சரிக்க வேண்டிய சப்தத்தில் நியமம் விவக்ஷிதம் என்பர் வ்யாக்க்யாதா. இது யுக்தமே. ... *

4. இரண்டாமத்யாயத்திலேயே (131.) நூற்றுமுப்பத்தோராம் சுலோகம் *** மாத்ருஷ்வஸா மாதுலாநீ ச்வச்ரூ: அத பித்ருஷ்வஸா. ஸம்பூஜ்யா குருபத்நீவத் ஸமாஸ் தா குருபார்யயா. *** = சிறிய தாயார் அம்மாமி மாமியார் அத்தை ஆகிய இவர்கள் ஆசார்ய பத்னியோடொத்தவர்களாகையாலே அவளைப்போலவே இவர்களை வழிபட வேண்டு மென்கிறது. எழுந்திருத்தல் தொழுதல் செய்யவேண்டிய தென்கை. இதற்குமேல் 140, 141-ஆம் சுலோகங்களில் இன்னாருக்கு ஆசார்யரென்று பெயர், இன்னாருக்கு உபாத்யாயரென்று பெயர் என்பது தெரிவிக்கப்படுகிறது. (140) *** உபநீய து யச் சிஷ்யம் வேதம் அத்யாபயேத் த்விஜ:, ஸகல்பம் ஸரஹஸ்யஞ்ச தமாசார்யம் ப்ரசக்ஷதே. *** = சிஷ்யனைத் தம்மிடத்திலேயே வைத்துக்கொண்டு கல்பம் ரஹஸ்யம் இவற்றோடுங்கூட வேதசாகையைப் பூர்த்தியாக ஓதுவிப்பவரை ஆசார்யரென்று கூறுவர்கள். (141.) *** ஏகதேசம் து வேதஸ்ய வேதாங்காந்யபி வா புந:, யோத்யாபயதி வ்ர்த்த்யர்த்தம் உபாத்யாயஸ் ஸ உச்யதே. *** வேதத்தில் ஏகதேசத்தையோ (அல்லது) வியாகரணம் முதலான வேதாங்கங்களையோ வ்ருத்திக்காக ஓதுவிப்பவர் உபாத்யாயரெனப்படுவர். இதற்கு மேல் (145-ல்) *** உபாத்யாயாந் தசாசார்ய: *** இத்யாதியில், பத்து உபாத்யாயர்களுக்கு ஸமமானவர் ஒரு ஆசார்யரென்றும், நூறு ஆசாரியர்களுக்கு ஸமமானவர் ஒரு பிதா என்றும், ஆயிரம் பிதாக்களுக்கு ஸமமானவள் ஒரு மாதா என்றும் சொல்லப்படுகிறது. இதற்குமேல் 225, 226-ஆம் சுலோகங்களில் இன்னும் விசேஷம் சொல்லப்படுகிறது. ஆசார்யன் பரமாத்மாவின் வடிவமானவன். பிதா பிரமனுடைய வடிவமானவன். மாதா பூமிப்பிராட்டியின் வடிவமானவள். ஆசார்யன் தந்தை தாய் தமையன் ஆகிய இவர்களால் தனக்கு ஏதேனும் பீடை யுண்டானாலுங்கூட இவர்களை பிராமணன் அவமதிக்கவே கூடாது என்கிறது. ... ... ... *

5. மூன்றுவதத்யாயத்தில் (77, 78-ஆம் சுலோகங்களில்) க்ருஹஸ்தாச்ரமிக்கு மிக்க ஏற்றம் சொல்லப்படுகிறது. (77.) *** யதா வாயும் ஸமாச்ரித்ய வர்த்தந்தே ஸர்வ ஜந்தவ:. ததா க்ருஹஸ்தமாச்ரித்ய வர்த்தந்தே ஸர்வ ஆச்ரமா: *** = ஸர்வப்ராணிகளும் வாயுவை யவலம்பித்தே வாழ்வதுபோல ஸர்வாச்ரமிகளும் க்ருஹஸ்தாச்ரமியை யவலம்பித்தே வாழவேண்டியிருக்கிறது. வாயுவில்லையானால் மூச்சடங்கிவிடும் ; க்ருஹஸ் தனில்லையானால் ப்ரஹ்மசாரிகளும் ஸம்ந்யாஸிகளும் ஜீவிக்க முடியாதென்றபடி. அடுத்த சுலோகத்தினால் இது உபபாதிக்கப்படுகிறது. *** யஸ்மாத் த்ரயோ ப்யாச்ரமிண: ஜ்ஞாநேந அந்நேநசாந்வஹம். க்ருஹஸ்தேநைவ தார்யந்தே தஸ்மாத் ஜ்யேஷ்டாச்ரமோ க்ருஹீ. *]** வேதார்த்த வ்யாக்க்யான முகத்தாலும் அன்னதான முகத்தாலும் க்ருஹஸ் தனே மற்ற ஆச்ரமிகளுக்கு உபகாரகனென்கை. ஆனதுபற்றியே காளிதாஸர் ரகு வம்சத்தில் **“ ஸர்வோபகார க்ஷமமாச்ரமம் தே ”!** என்றார் . ... ... *

6. மூன்றுமத்யாயத்திலேயே (சுலோ. 238-ல்) போஜன காலத்து நியமம் கூறப்படுகிறது. ❁ **யத் வேஷ்டிதசிரா புங்க்தே** ❁ இத்யாதி. முட்டாக்கிட்டுக் கொண்டு உண்ணலாகாது; தெற்கு முகமாயிருந்து உண்ணலாகாது. பாதரக்ஷை யணிந்து கொண்டு உண்ணலாகாது. இந்த நிஷேதத்திற்குக் கட்டுப்படாமல் உண்டால் அந்த வுணவு ராக்ஷஸர்களுக்கே சேரும். [இந்த மூன்றுமத்யாயம் 286 சுலோகங்கள் கொண்டது; பூர்த்தியாக ஊன்றி வாசிக்கத்தக்கது.] ... ... ❁

7. நான்காமத்யாயத்தில் ஜீவிக்க வேண்டிய வழிகள் கூறப்படுகின்றன. ❁ **ருதாம்ருதாப்யாம் ஜீவேத் து ம்ருதேந ப்ரம்ருதேந வா. ஸத்யாந்ருதாப்யாமபி வா ந ச்வ வ்ருத்த்யா கதாசந** ❁ பிறர்க்குத் தொண்டு செய்து ஜீவிப்பதுகூடாதென்று முடிவாகச் சொல்லி, ருதம் அம்ருதம் ம்ருதம் ப்ரம்ருதம் ஸத்யாந்ருதம் என்னும் வழிகளால் ஜீவிக்கலாமென்கிறது. இந்த பதங்களெல்லாம் விவரணஸாபேக்ஷமாகையாலே மேலே மஹர்ஷிதாமே விவரிக்கிறார். **ருதம்** உஞ்சம் ஸிலம் என்று பர்யாயம். தட்டுத்தடையில்லாதவிடங்களில் ஓஷதிகள் முளைத்திருக்குமே. அவற்றை ஒவ்வொன்றாகக் கிள்ளிக் கொய்து கொள்ளுமது **உஞ்சம்**; கொத்துக் கொத்தாகக் கொய்து கொள்ளுமது **ஸிலம்.** இனி **அம்ருதம்** என்பது அயாசிதம். இரந்து பெறாமல், பாத்ரவிநியோகம் பண்ணுமவர்கள் கொடுப்பதைக் கொள்ளுவது அம்ருதம். இரந்து பெறுமது ம்ருதம். க்ருஷியினால் கிடைக்குமது **ப்ரம்ருதம். ஸத்யாந்ருத** மென்று வாணிஜ்யத்திற்குப் பெயர்; அதாவது வர்த்தகம். மெய்யும் பொய்யும் கலந்து வாணிஜ்யம் நடத்தப்படுவதால் அதற்கு ஸத்யாந்ருத மென்று பெயர் போலும். ஆக இவற்றால் ஜீவிக்கலாமேயொழிய ஸேவகவ்ருத்தியால் ஒரு போதும் ஜீவிக்கலாகாது. * **ஸேவா ச்வவ்ருத்திராக்க்யாதா தஸ்மாத் தாம் பரிவர்ஜயேத்** ❁ என்று கடுமையாகச் சொல்லி முடிக்கிறார். இதைக் கண்ட ஒரு அபியுக்தர் சொல்லி வைத்தார்—"**ஸேவா ச்வவ்ருத்திரிதியத் அபத்தம் தத்உதீரிதம். ஸ்வைரசாரீ க்வ சுநகஃ விக்ரீதாஸுஃ க்வ ஸேவகஃ**". [இதன் பொருளாவது. அடிமைப் படுவதை நாய்வேலையென்று மநுமஹர்ஷி கூறியது தவறு; ஒருவர்க்கும் அடிமைப் படாமல் யதேஷ்டமாகத் திரிகிற நாய் எங்கே? நாலுகாசுக்கு உயிரை அறவிலை செய்திருக்கும் சேவகன் எங்கே? என்பதாம். இதனால் சேவகன் நாயினும் கடை கெட்டவன் என்றதாயிற்று.] குணங்கண்டு ப்ராப்த விஷயத்திலே ஸேவகனாயிருப்பவனைப் பற்றியதன்று இந்த நிந்தை. ... ... ... ... ❁

8. நாலாமத்யாயத்திலேயே (ச்லோ. 18.) ❁ **வயஸஃ கர்மணோர்த்தஸ்ய ச்ருதஸ்ய அபிஜநஸ்ய ச. வேஷவாக்வ்ருத்தி ஸாரூப்யமாசரந் விசரேதிஹ.** ❁ = இந்த சுலோகம் ஒவ்வொருவருடைய சிந்தனையிலுமிருக்கவேண்டும். வேஷம் வாக்கு வ்ருத்தி என்னுமிவை மூன்றும் வயதுக்கும் தொழிலுக்கும் பொருளுக்கும் படிப்புக்கும் குலத்துக்கும் தக்கபடியிருக்கவேண்டுமென்பது பொருள். இதன் கருத்தை விவரிப்போம். வேஷமாவது அரையில் துணிகட்டுதல், நெற்றியில் புண்ட்ரமணிதல், ஆபரணம் பூணுதல் பூமுடித்தல் முதலியன. இவை வயதுக்குத் தக்கபடியிருப்பதாவது—சைசவம் கௌமாரம் யௌவநம் வ்ருத்தாப்யம் ஆகிய பருவங்களுக்குத் தக்கபடியிருப்பதாம். வயதுக்கு மட்டுமன்று; தொழிலுக்கும் தக்கபடி இருக்க வேணும். லௌகிகத் தொழிலுக்குத் தக்க வேஷம் வேறு; வைதிகத் தொழிலுக்குத் தக்க வேஷம் வேறு என்பது தெரிந்ததே. **அர்த்தஸ்ய**=தனத்திற்கும் தக்கபடியிருக்கவேணும். தனிகன் கொள்ளத்தக்க வேஷத்தை தரித்ரன் கொள்ளலாகாது; தரித்ரன் கொள்ளத்தக்க வேஷத்தை தனிகன் கொள்ளலாகாது. **ச்ருதஸ்ய**=படிப்புக்குத்தக்கபடி வேஷமிருக்க வேணும். வித்வான்களின் வேஷம் வேறாகவும், படிப்பில்லாத மூடர்களின் வேஷம்

வேறாகவுமிருக்கத்தக்க தென்கை. **அபிஜநஸ்யச**=அபிஜநமாவது ஆபிஜாத்யம், ஸத்குல ப்ரஸூதத்வமென்றவாறு. உயர்குடிப் பிறப்பாளர் வேஷம் வேறு, அநபிஜாதர்களின் வேஷம் வேறு. ஆக இதுவரை வேஷத்தைப் பற்றிச் சொல்லியாயிற்று; இனி வாக்கைப் பற்றிச் சொல்லுவோம். வாக்கும் வயது தொழில் பொருள் படிப்பு குலம் ஆகிய இவற்றுக்குத் தக்கபடியிருக்கவேணும். பெரியார் வாக்கில் வெளி வரவேண்டியது சிறியார் வாக்கில் வெளி வரலாகாது; சிறியார் சொல்லக் கூடியதைப் பெரியார் சொல்லலாகாது. நிஹீந காரியங்களைச் செய்பவன் சொல்லுமதை உத்க்ருஷ்ட காரியங்கள் செய்பவர் சொல்லலாகாது. தனிகர்கள் சொல்லக்கூடிய வாக்கை தரித்ரன் சொல்லலாகாது. படிப்பாளிகள் சொல்ல வேண்டிய வாக்கை அறிவிலிகள் சொல்லலாகாது; குலீனர்கள் சொல்லவேண்டிய வாக்கை அநபிஜாதர்கள் சொல்லலாகாது. இனி வ்ருத்தியைப் பற்றிக் கேண்மின். வ்ருத்தியாவது தானிருக்கவேண்டிய நிலைமை. இதுவும்—வயது தொழில் பொருள் படிப்பு குலம் ஆகிய இவற்றுக்குத் தக்கபடியிருக்கத் தக்கது. இந்த சுலோகம் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் முமுக்ஷுத்வாதிகாரத்தில் உதாஹரிக்கப்பட்டுள்ளது. ... ... ... ... *

9. ஐந்தாவது அத்யாயத்தில் (சுலோ. 39.) * **யஜ்ஞார்த்தம் பசவஸ் ஸ்ருஷ்டாஃ ஸ்வயமேவ ஸ்வயம்புவா, யஜ்ஞச்ச பூத்யை ஸர்வஸ்ய தஸ்மாத் யஜ்ஞே வதஃ அவதஃ** * யாகத்தில் பசுவதம் செய்வது வதமாகாது என்று இந்த சுலோகத்தில் ஸ்பஷ்டமாகக் கூறப்படுகிறது. ப்ரஜாபதியினால் யஜ்ஞத்திற்காகவே பசுக்கள் விரும்பிப் படைக்கப்பட்டன. யஜ்ஞமானது ஸகலலோக க்ஷேமத்திற்காக ஏற்பட்டது. ஆகையினால் யஜ்ஞத்தில் செய்யப்படும் வதம் வதமன்று. வதத்தினாலுண்டாகும் பாபம் அணுகாதென்றபடி. இங்கே விசேஷித்துச் சில விஷயங்களைத் தெளிவாகத் தெரிவிக்கின்றேன். அடியேனெழுதிய உபந்யாஸ சதத்வயத்தில் (54.) அக்நிஹோத்ராதி யாகப்ரசம்ஸோபந்யாஸத்திலும், மேலே இதன் அநுபந்தமாக 151 பக்கம் முதல் 8 பக்கமும் இதைப்பற்றி மிக விரிவாக எழுதியிருக்கிறேன். தச்சேஷபூதமாக இங்கும் விளக்கமாகச் சில விஷயங்கள் தெரிவிக்கிறேன். யஜ்ஞத்தில் பசுவதம் செய்வது பாபமென்று அடியேன் நெஞ்சிலும் நினைத்ததில்லை, வாக்கினாலும் சொன்னதில்லை, எழுதிற்றுமில்லை. பகவத்கீதை இரண்டாமத்யாயம்—முப்பத்தோராம் சுலோகத்தின் பாஷ்யத்திலும் (அவ்விடத்துத்) தாத்பர்ய சந்த்ரிகையிலும் ஸாதித்திருப்பவைகளைக் காணாதவனல்லேன். அர்ஜுநன் யுத்தத்தில் கொலை செய்ய நேருவதைப் பாபமாக நினைத்துப் பேசினபோது அவனுடைய மதத்தைக் கண்டிப்பதற்காகக் கண்ணபிரான் க்ஷத்ரியனுக்கு யுத்தம் அதர்மமன்று, தருமமேயாகும் என்று உபதேசிக்கிறான். அங்கு பாஷ்யகாரர் "**அக்நீஷோமீயாதிவத்**" என்றும் "**அக்நீஷோமீயாதிஷு ந ஹிம்ஸா பசோஃ**" இத்யாதிகளும் அருளிச் செய்கிறார். மருத்துவர்கள் செய்யும் சஸ்த்ரசிகித்ஸையையும் எடுத்துக் காட்டுகிறார். இங்கு தாத்பர்ய சந்திரிகையில் "உக்தஞ்ச மநுநா— * **தஸ்மாத் யஜ்ஞேவதஃ அவதஃ** * இதி" என்று இப்போதடியேனெடுத்துக் கொண்டு விமர்சிக்கும் சுலோகத்தின் கடைப்பகுதியையும் உதாஹரித்துள்ளார் ஸ்வாமி. உதாஹரித்தது மட்டுமன்றிக்கே ஸாரமாக ஒரு ஸ்ரீஸூக்தியை யருளியுள்ளார். அதாவது "**வத இதி பாமரத்ருஷ்ட்யா அநுவாதஃ, அவத இதி தத்வகதநம்**" என்று. இதன் கருத்து என்னவென்றால், 'வதம் என்று சொல்லவே கூடாது; பாமரர்கள் இதைப் பாபமாக நினைக்கிறபடியால் அநுவாதமாத்ரமிது; உண்மையில் வதமன்று' என்பதாம். யஜ்ஞத்தில் பசுவதம் செய்ய வேணுமென்கிற கொள்கையுடையார்க்குத் தெரியாத ப்ரமாணங்களையும் அதிகமாக அடியேன் தெரிந்து கொண்டிருக்கிறேனென்பது ஆத்மஸ்துதியன்று, உண்மையுரை. க்ஷத்ரியர்களுக்கு யுத்தம் போலே ப்ராஹ்மணர்களுக்கு

யஜ்ஞம். இதில் ஸந்தேஹமில்லை. நமக்கு ப்ராஹ்மண்யத்திற்காட்டிலும் பரமைகாந்தித்வம் மிகச் சிறந்தது. அந்த பாரமைகாந்த்யத்திற்கு பசுவதம் பண்ணிச் செய்ய வேண்டியதான யஜ்ஞம் அநர்ஹம். "வதம் பாபமன்றே, அதைச் செய்தாலென்ன ?" என்கிற கேள்வியையே மீண்டும் மீண்டும் கேட்டுக்கொண்டிருப்பீர்கள். மநுஸ்ம்ருதியில் இப்போது நாம் விமர்சிக்கிற சுலோகம் [5-39.] இதற்குமுன்னே இருபத்தாறும் சுலோகத்தில் **"ஏததுக்தம் த்விஜாதீநாம் பக்ஷ்யாபக்ஷ்யம் அசேஷதஃ, மாம்ஸஸ்யாதஃ ப்ரவக்ஷ்யாமி விதிம் பக்ஷணவர்ஜநே"**= இந்த ச்லோகத்தில் "மாம்ஸஸ்ய பக்ஷணவர்ஜநே விதிம் வக்ஷ்யாமி" என்றதற்கு 'மாம்ஸபக்ஷணஸ்ய வர்ஜநே' என்று அர்த்தம் செய்யப்படவில்லை ; **"பக்ஷணே வர்ஜநேச"** என்று விவரிக்கிறார் குல்லூகபட்டர். உண்மையில் இதுதான் இங்கு அர்த்தம். மேலே மாம்ஸம் பக்ஷிக்கத்தக்கது, பக்ஷிக்கவேண்டியது என்பதையும் மநுமஹர்ஷி கூறியுள்ளார். உடனே **"ப்ரோக்ஷிதம் பக்ஷயேந் மாம்ஸம்"** என்று ஆரம்பிக்கிறார். இங்கு "**யஜ்ஞஹுத பசுமாம்ஸபக்ஷணம் இதம் யஜ்ஞாங்கம் விதீயதே**" என்கிறார் வ்யாக்யாதா. சிலர் சொல்லுவதென்னவென்றால் 'மாம்ஸபக்ஷணம் கலிவர்ஜ்யத்தில் சேர்ந்துவிட்டபடியால் அதை பக்ஷிக்கக் கூடாது' என்று. இங்ஙனே பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். அவர்களை அடியேன் கேட்பது ஒன்றே; 'கலியிலும் மாம்ஸமுண்ணலாம்' என்று சாஸ்த்ரம் சொல்லிவிட்டால் பரமைகாந்திகள் உண்பர்களா? மிகவும் அருவருக்கக் கூடிய கார்யமன்றோ இது. * தேவரேண ஸுதோத்பத்தியை கலியிலும் உபாதேயமாக சாஸ்த்ரம் விதித்து விட்டால் சிஷ்டர்கள் அந்த யநுஷ்டிப்பர்களோ? வர்ஜ்ய மென்று தெரிந்தும் வர்ஜியாதவர்கள் எத்தனை பேரில்லை. 'பசுவதத்தில் எங்களுக்கு அருவருப்பில்லை' என்னுமவர்கள் அதை தாராளமாகச் செய்யலாமென்று அடியேன் பலகால் எழுதியிருக்கிறேனே. * **அக்ரியாவதநர்த்தாய தத்து கர்ம ஸமாசரேத்** * என்று ரஹஸ்யத்ரய ஸாரத்தில் கையாளப்பட்ட வசனத்தைக் கண்ணெடுத்துப் பார்ப்பாரில்லையே. அகரணே ப்ரத்யவாயம் காட்டித் தீரவேணுமே. அதைத் தேடிப்பிடித்துக் காட்டுகிறவரையில் * பசுமாரண கர்மதாருணர்களின் வாதம் செல்லாது ; வதம் செல்லும். ஆப்தரான ஒரு வித்வான் அடியேனுக்கெழுதினார்—"யஜ்ஞம் ஸாமாந்யமாக எல்லாரும் செய்ய முடியாது ; அதற்கு த்ரவ்யஸம்பத்து வேண்டும் ; அஃதுள்ளவர்கள் செய்யாதிருக்கலாமா ?" என்று. இதற்கு ஒரே வார்த்தை சொல்லி முடித்துவிடுகிறேன். கீதையில் மூன்றாமத்யாயத்தில் (8) * **நியதம் குரு கர்ம த்வம்** * என்கிற சுலோகத்தின் பாஷ்யத்திலே "**ந்யாயார்ஜிததநேந மஹாயஜ்ஞாதிகம் க்ருத்வா தச்சிஷ்டாசநேநைவ சரீரதாரணம் கார்யம்**" என்கிறார் ஸ்வாமி. தனிகர்கள் தனத்தைக்கொண்டு பசுவதம்பண்ணி மாம்ஸபக்ஷணம் பண்ணி தேஹதாரணம் பண்ணவேணுமென்றோ இதற்குப் பொருள்? மேலே ஆறாமத்யாயத்தில் 37. * **அநதீத்ய த்விஜோ வேதாந் அநுத்பாத்ய ததா ஸுதாந், அநிஷ்ட்வாசைவ யஜ்ஞைச்ச மோக்ஷமிச்சந் வ்ரஜத்யதஃ** * என்னுமிந்த சுலோகத்தை ஆழ்ந்து விமர்சிக்க வேண்டா ; மேலெழ விமர்சித்தாலும் போதும். வேதமோதாவிடில் நரகம் புகுவன், யஜ்ஞம் செய்யாவிடில் நரகம்புகுவன் என்றது ஸரி. இடையில் 'மக்கள் பெறாவிடில் நரகம் புகுவன்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறதே. இது யாரைப் பற்றிச் சொன்னது? என்று விமர்சிக்கவேண்டும். பகவத்கீதை 8-3ல் பாஷ்யத்தில் * **யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி** * என்று மேலுள்ள வசனத்தையும் எடுத்துக்காட்டி "**ச்ருதிஸித்தோ யோஷித்ஸம்பந்தஃ ... உத்வேஜநீயதயா பரிஹரணீயதயா ச முமுக்ஷுபிஃ ஜ்ஞாதவ்யம்**" என்று ஸ்வாமி ஸாதித்திருப்பதை விச்வஸித்து யோஷித்ஸம்பந்தத்தை வெறுத்தவர்களுக்குமா நரகம் வரும், 'ஆமாம், வரத்தான்வரும்'

மென்னில், அவர்களோடு கூடவே இவர்களும் நரகம் போகட்டுமே. எவர்களும்? பசுவதத்தைக் கொண்ட யாகத்தைச் செய்யாதவர்களும். ... *

10. நாலாமத்யாயத்திலே ச்லோ. 171 முதல் நான்கு சுலோகங்கள் தார்மிகர்கள் கண்டபாடம் செய்து வைத்துக் கொள்ளத்தக்கவை. அதர்மம் செய்பவர்கள் தனிகர்களாயிருப்பதையும், தருமம் செய்பவர்கள் அகிஞ்சனர்களாயிருப்பதையும் காணும்போது தார்மிகர்களுக்கு அதர்மருசி ஏற்படக்கூடும்; தருமம் செய்து தரித்ரர்களாயிராமல் அதர்மம் செய்து தனிகர்களாயிருப்போமென்கிற எண்ணமுண்டாகி அதர்ம ப்ரவ்ருத்தி விளையக்கூடுமன்றோ. அன்னவர்களைக் குறித்துச் சொல்லப்படுகிறது *** ந ஸீதந்நபி தர்மேண மந꞉ அதர்மே நிவேசயேத். அதார்மிகாணாம் பாபாநாம் ஆசு பச்யந் விபர்யயம். *** தர்மேண ஸீதந்நபி மந꞉அதர்மே ந நிவேசயேத் = தருமம் செய்வதனாலேதான் நமக்குக் கஷ்டங்களுண்டாகின்றனவென்று நினைக்க நேர்ந்தாலுங்கூட அதர்மாசரணத்தில் நெஞ்சைச் செலுத்தக்கூடாது; ஏனென்றால், அதர்மஞ் செய்யும் பாபிகள் வாழ்ந்தே நிற்காமல் அதற்கு மாறுபாடான நிலைமையையும் அடையக் காண்கையாலே. அடுத்த 172 சுலோகத்தினால் அதர்மம் பலன் காட்டியே தீருமென்று வற்புறுத்திச் சொல்லப்படுகிறது. *** நாதர்மச் சரிதோ லோகே ஸத்ய꞉ பலதி கௌரிவ, சனைராவர்த்தமாநஸ் து கர்த்துர் மூலாநி க்ருந்ததி. *** = அதர்மம் செய்யப்பட்டால் அது உடனே அனர்த்தமாகிற பலனைக் கொடுத்துவிடுமென்பதில்லை. எதற்கும் பரிபாகதசை யென்று ஒன்றுண்டு; அப்போது ஸமூலநாசம் பண்ணியே தீரும். 173. *** யதி நாத்மநி...** இத்யாதி. அதர்மமான ஸாக்ஷாத்து கர்த்தாவினிடத்திலும் பலனைக் காட்டும்; இல்லையேல் புத்திரர்களிடத்திலோ பௌத்ரர்களிடத்திலோ ப்ரபௌத்ரர்களிடத்திலோ பலித்தே தீரும். செய்த அதர்மம் எந்த விதத்திலும் நிஷ்ப்பலமாகாது. அடுத்த சுலோகம் 174 மிக முக்கியமானது *** அதர்மேண ஏததே தாவத் ததோ பத்ராணி பச்யதி. ததஸ் ஸபத்நாந் ஜயதி ஸமூலஸ்து விநச்யதி. *** இந்த சுலோகம் அதர்மம் செய்து பழுத்தவன் ஸ்வாநுபவத்தைத் தெரிவிக்கும் சுலோகம் போலவே காண்கிறது. அதர்மம் செய்தவன் தற்காலத்தில் ஸம்ருத்தியடைகிறான்; மாடமாளிகைகள் கட்டிக்கொள்வதும் யானைகுதிரைகள் ஏறப்பெறுவதுமான செல்வங்களையும் அநுபவிக்கிறான். சத்துருக்களையும் வெல்லுகிறான். நாளடைவில் பரிபாகதசை வந்தவாறே ஸமூலநாசத்தை யடைகிறான். ஆகவே தருமநிஷ்டையே க்ஷேமங்கரமென்றதாயிற்று. ... ... *

11. எட்டாமத்யாயத்தில் ச்லோ. 92. *** யமோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவைஷ ஹ்ருதி ஸ்தித꞉. தேநசேத் அவிவாதஸ் தே மா கங்காம் மா குரூந் கம꞉. *** இந்த சுலோகம் ஆழ்வார்கள் பாசுரம் போலுள்ளது. பெரும்பாலும் ப்ரதமபுருஷ நிர்தேசமாகவே செல்லுகிற இந்த தருமசாஸ்த்ரத்தில் இங்கு ஒரு மூன்று சுலோகங்கள் மத்யம புருஷநிர்தேசமாக நிகழ்கின்றன. ஆழ்வார்கள் உபதேசம் செய்தருளும் வகை காண்கிறது. ஆகவேதான் இந்த சுலோகம் பகவத்விஷயத்தில் விசேஷித்துக் கையாளப்படுகிறது. எம்பெருமானோடு த்வேஷம் முற்றி நிற்கும் நிலை நீங்கி அத்வேஷ நிலையென்று ஒன்று உண்டாகும். அது பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகளுக்கு முதற்படியான நிலைமையாகையாலே அதையே பக்தி தசையாகவுங் கொள்ளுவர்கள். எம்பெருமானோடு விவாதப்படுகிற நிலை நீங்குமளவே போதுமானது. எம்பெருமான் கண்ணுக்குப் புலப்பட்டாலன்றோ அவனோடு விவாதப்படமுடியும்; கட்கிலியான அவனோடு விவாத ப்ரஸக்தியே யில்லையே யென்று சிலர் நினைக்கவும் கேட்கவும் கூடும். அவனோடு தனக்குண்டான உறவை ஒப்புக் கொள்ளாமலிருப்பதுதான் விவாதமெனப்

படுவது. **'த்வம் மே'** என்று பகவான் சொல்லுவதாகவும் **'அஹம் மே'** என்று சேதநன் சொல்லுவதாகவும் வைத்து பட்டர் அருளிச்செய்திருப்பது சமத்காரோக்தி விந்யாஸம். பகவச்சேஷத்வத்திற்கு இசையாமலிருப்பதுதான் பகவானோடு விவாதப் படுகையாவது. அது தீராதவளவில் [பகவச்சேஷத்வத்திற்கு இசையாதவளவில்] கங்கைநீர் குடைந்தாடப்போவதும் குரு க்ஷேத்ர யாத்திரை செய்யப்போவதும் வீணேயாகும். சேஷத்வருசி யுண்டாய்விட்டதாகில் க்ஷேத்ரதீர்த்த யாத்திரையே வேண்டா. அது உண்டாகாதவளவில் இந்த யாத்திரை நிஷ்ப்பலமாகையாலே ஸர் வாத்மநா யாத்திரை போகவேவேண்டா வென்கிறது. இதற்கு யாத்ரா நிஷேதத்தில் தாத்பரியமன்று; பகவானோடுள்ள உறவை அறியவேண்டியது முக்கியம் என் கையிலே தாத்பர்யமத்தனை. இந்த சுலோகத்தைத் திருவாய்மொழியில் * வீடுமின் முற்றத்தில் * உம்முயிர் வீடுடையானிடை வீடுசெய்மினே * என்றவிடத்து நம்பிள்ளை அற்புதமாக வியாக்கியானித்தருளுகிறார்; அந்த ஸ்ரீ ஸூக்திகளையே இங்கெடுத்துக் காட்டுகிறேன்;—

"**[யம:]** ப்ராதேசிகமான நியமனத்தை யுடையவனையன்று சொல்லுகிறது; * ப்ரபவதி ஸம்யமநே மமாபி விஷ்ணு: * என்று அவன் தன்னையும் நியமிக்கு மவனாயிற்று இவன். **[வைவஸ்வத:]** விவஸ்வானுடைய குலத்திலே பிறந்தவ னென்னுதல்; ஆதித்யாந்த: அவஸ்திதனென்னுதல். **[ராஜா]** அவனைப்போலே 'தஹ பச' என்கை யன்றிக்கே எல்லார்க்கும் இனியனாயிருக்குமவனாயிற்று இவன். *ரஞ்ஜயதீதி ராஜா.* [ய:] அந்தர்யாமி ப்ராஹ்மணாதிகளில் ப்ரஸித்தி. **[தவைஷ ஹ்ருதி ஸ்தித:]** அவன் எங்குற்றானென்ன; கண்டிலையோ? உன்னுடைய ஹ்ருதயத் திலே புகுந்து ஆட்சியில் தொடர்ச்சி நன்றென்றிருக்கிறான். ஆனால் செய்ய வேண்டுவதென்னென்னில்; **[தேந சேத் அவிவாதஸ் தே]**; உடையவனாயிருக்கிறவ னோடே உனக்கு அவிவாத முண்டாகில். 'இத்தால் பேறு என்?' என்பாயோ? **[மா கங்காம் மா குரூந் கம:]** ஒரு தீர்த்தம் தேடிப்போதல், புண்ய க்ஷேத்ரம் தேடிப் போதல் செய்யவேண்டா. அஹங்கார மமகாரங்கள் கிடக்க ப்ராயச்சித்தம் பண்ணுகையாவது நிஷித்தத்ரவ்யத்தை உள்ளே வைத்து மெழுகூட்டின வோபாதியிறே. உடையவனுக்கும் உடைமைக்கும் தக்கபடியிறே ப்ராயச்சித் தமும். உடையவன் ஸர்வேச்வரன். த்ரவ்யங்களில் தலையான ஆத்மத்ரவ்யத்தை யிறே அபஹரித்தது. த்ரவ்யத்தைப் பொகட்டு ப்ராயச்சித்தம் பண்ணவேணுமே. பொகடுகிற த்ரவ்யம் தானாகையாலே ப்ராயச்சித்தம் பண்ணுகைக்கு வேறு அதிகாரியுமில்லையே. ஆகையாலே நீங்களும் உடையவன் பக்கலிலே வீடுசெய்ம் மின்." இவை ஈடு முப்பத்தாறாயிரப்படி ஸ்ரீ ஸூக்திகள். *

12. எட்டாவதத்யாயத்திலேயே, தவறு செய்த பிராமணனை தண்டிக்க வேண் டிய விதம் கூறப்படுகிறது. ச்லோ. 379. பிராமணனுக்கு மரண தண்டனை விதிக்கவே கூடாது. தலையை மொட்டையடிப்பதுதான் பிராமணனுக்கு வதபர்யாயமான தண்டனையாகும். பிராமணன் தவிர மற்ற ஜாதியாருக்கே வததண்டனை விதிக்கலாம். பிராமணன் எவ்விதமான குற்றம் செய்திருந்தாலும் அவனுக்கு வததண்டம் விதிக் கவே கூடாது. தீவ்ரமான பாபம் செய்திருந்தால் பிராமணனை ராஷ்ட்ரத்தில் நின்றும் வெளியே துரத்தி விடலாம். அப்போதும் அவனுடைய ஜீவனத்திற்குப் போதுமான பொருளைக் கையில் கொடுத்தனுப்பவேணும். சரீரத்தில் எவ்விதமான க்ஷதியையும் உண்டுபண்ணக்கூடாது. ப்ராஹ்மணவதத்திற்கு மேற்பட்ட அதர்மமே உலகத்தில் கிடையாது. ஆகையினால் அரசன் ப்ராஹ்மணவதத்தை நெஞ்சினாலும் நினைக்கலா

காது. [இதற்கான வசனங்களிவை]. * **மௌண்ட்யம் ப்ராணாந்திகோ தண்டோ ப்ராஹ்மணஸ்ய விதீயதே, ... ந ஜாது ப்ராஹ்மணம் ஹந்யாத் ஸர்வபாபேஷ்வபி ஸ்திதம். ராஷ்ட்ராத் ஏநம் பஹி: குர்யாத் ஸமக்ரதநம் அக்ஷதம். ந ப்ராஹ்மணவதாத் பூயாந் அதர்மோ வித்யதே புவி, தஸ்மாதஸ்ய வதம் ராஜா மநஸாபி ந சிந்தயேத்.** * ... ... *

13. ஒன்பதாமத்யாயத்தில் ஸ்த்ரீபுருஷ தருமங்களைச் சொல்லத் தொடங்கி ஸ்த்ரீகளுக்கு ஒருபோதும் ஸ்வாதந்திரியம் கூடாதென்று வலிதாக மறுக்கிறார். சுலோ. 3. * **பிதா ரக்ஷதி கௌமாரே பர்த்தா ரக்ஷதி யௌவநே, ரக்ஷந்தி ஸ்தாவிரே புத்ரா: ந ஸ்த்ரீ ஸ்வாதந்த்ர்யமர்ஹதி.** * இந்த சுலோகம் நீதி சாஸ்த்ரஸங்க்ரஹத்தில் ஏறியிருந்தாலும் இதற்கு ஆகரம் மநுஸ்மிருதியேயாகும். ஸ்த்ரீகளை இளம்பிராயத்தில் தந்தை காக்கிறார்; யௌவனத்தில் கணவன் காக்கிறான். முதுமையில் புத்திரர்கள் காப்பர். ஆக, ஸ்த்ரீகள் தங்களைக் காத்துக்கொள்வதில் ஒருபோதும் ஸ்வாதந்திரியமுடையரல்லர் என்பது ச்லோகார்த்தம். இதன்மேல் கேள்வி பிறக்கக்கூடும்; இளமையில் வைதவ்யமடைந்து பதியுமின்றிக்கே புத்திரனுமின்றிக்கே யொழிந்தவர்களைக் காப்பவர் யார்? என்று. இதற்கு வ்யாக்க்யாதா [குல்லூகபட்டர்] ஸமாதான மெழுதியுள்ளார்—தந்தை, தந்தையுடன் பிறந்தவர் முதலானோர் காக்கும்படியைக் காணாநின்றோமென்று. ... ... ... ... *

14. மாதா பிதாக்கள் ஜீவித்திருக்கும்போது புத்திரர்கள் பங்கு பிரித்துக் கொள்வது கூடாதென்றும், அவர்கள் முடிந்தபிறகு கநிஷ்ட ப்ராதாக்கள் ஜ்யேஷ்ட ப்ராதாவையே அநுவர்த்தித்து வாழ வேண்டுமென்றும் நியமிக்கிறார். (9-104.) * **ஊர்த்த்வம் பிதுச் ச மாதுச் ச ஸமேத்ய ப்ராதரஸ் ஸமம். பஜேரந் பைத்ருகம் ரிக்த்தம் அநீசாஸ் தே ஹி ஜீவதோ:** * மாதா பிதாக்கள் ஜீவித்திருக்கும்வரையில் அவர்களது தனத்தில் புத்திரர்களுக்கு ஸ்வாமித்வம் கிடையாதாகையாலே அத் தந்தைதாயருடைய வாழ்நாள் முடிந்தபிறகே பங்கு பிரித்துக் கொள்ளவேண்டியது. (இங்கு வியாக்க்யாதா எழுதுகிறார்) — "* **விபாகஞ் சேத் பிதா குர்யாத் இச்சயா விபஜேத் ஸுதாந்** * [தகப்பனார் இஷ்டப்பட்டால் புத்ரர்களுக்குத் தாமே பங்கு பிரிக்கலாம்] என்று யாஜ்ஞவல்க்யர் சொல்லியிருக்கையாலே தகப்பனார் இஷ்டப்படாதவளவில் இந்த சாஸ்த்ரம் செல்லுமென்கிறார். அடுத்த சுலோகம் 105. * **ஜ்யேஷ்ட ஏவ து க்ருஹ்ணீயாத் பித்ர்யம் தநம் அசேஷத:. சேஷாஸ் தம் உபஜீவேயு: யதைவ பிதரம் ததா.** * பிதாவின் தனத்தையெல்லாம் மூத்த புதல்வனே அடையக்கடவன்; மற்ற ப்ராதாக்கள் தமையனையே தந்தையாகக் கொண்டு அவன்கீழ் வாழக் கடவர்கள். மேலே ச்லோ. 108. * **பிதேவ பாலயேத் புத்ராந் ஜ்யேஷ்டோ ப்ராத்ருந் யவீயஸ:, புத்ரவச் சாபி வர்த்தேரந் ஜ்யேஷ்டே ப்ராதரி தர்மத:.** * பிதா புத்திரர்களைக் காப்பதுபோல மூத்தவன் தம்பிமார்களைக் காக்கக் கடவன். தம்பிகளும் பிதாவினிடத்திற்போலவே மூத்தவனிடத்தில் வர்த்திக்கக் கடவர்கள். இதெல்லாம் ஜ்யேஷ்ட ப்ராதா யோக்யனாயிருக்குமளவில் என்று நூற்கொள்கை. ... ... ... ... *

15. அநுஷ்டானங்களில் முக்க்ய கல்பமென்றும் கௌணகல்பமென்றும் இரண்டுண்டு. கௌணகல்பத்தை ஏதோ ஆபத்காலத்தில் கொள்ளலாமேயல்லது சக்தியும் ஸௌகர்யமுமிருக்குங் காலங்களில் முக்க்ய கல்பத்தைத்தான் கொள்ள வேண்டும்; கௌணகல்பம் கேவலம் ஆபத்கால மாத்ரவிஷயம். 11-28. * **ஆபத்கல்பேந யோ தர்மம் குருதே அநாபதி த்விஜ:, ஸ நாப்நோதி பலம் தஸ்ய பரத்ரேதி விசாரிதம்.** * கௌணகல்பத்திற்கு ஆபத்கல்பமென்று பெயர். அதை ஆபத் காலத்தில் மட்டுமே அநுட்டிக்கலாம். ஆபத்தொன்றுமில்லாதவளவிலும் ப்ராஹ்மணன் கௌணகல்பத்

தையனுட்டித்தானாகில் அது அனுட்டியாததோடொக்குமத்தனை. [இந்த விதியைப் பரிபாலனம் செய்பவர்கள் மிகச் சிலரே யாவர். ஆசமன ப்ராணாயாமாதிகளையும் தினப்படி பெரும்பாலும் கௌண கல்பமாகவேயன்றோ அனுட்டித்து வருகிறோம்.] *

16. (11-34.) * **க்ஷத்ரியோ பாஹுவீர்யேண தரேத் ஆபதமாத்மந:. தநேந வைச்ய சூத்ரௌ து ஜபஹோமைர் த்விஜோத்தம:.** * நான்கு ஜாதியார்க்கும் சத்துருக்கள் மூலமாகப் பரிபவங்கள் நேருவது ஸம்பாவிதம். அதைப் போக்கிக் கொள்ளுமுபாயம் ஜாதி பேதேந வெவ்வேறு பட்டிருக்குமென்கிறது. க்ஷத்ரியன் தன்னுடைய பராக்ரமத்தைக் கொண்டு ப்ரதிக்ரியை பண்ணக்கடவன். வைச்யனும் சதுர்த்தனும் தனத்தைக் கொண்டு வெல்லக்கடவன். ப்ராஹ்மணோத்தமனோவென்னில், கேவலம் ஜபம் ஹோமம் முதலிய வைதிககருமங்களைக் கொண்டே சத்ருபக்ஷ ப்ரதிக்ஷேபம் பண்ண வேண்டியவன். [இத்தால் தெரிவிக்கப்படுவதென்ன? பிராமணன் தன்னிடத்தில் பராக்ரமமிருந்தாலுங்கூட அதை உபயோகிக்கக் கடவனல்லன்; தனமிருந்தாலும் அதை ப்ராப்த விஷயங்களில் தவிர இத்தகைய காரியங்களில் துர்விநியோகம் செய்யக் கடவனல்லன். ஓதியுணர்ந்திருக்க வேண்டியதையே கடமையாகவுடையவனாதலால் ஜபஹோமாதிகளைக்கொண்டே ஜய சீலனாயிருக்கக் கடவனென்பதாம். * **திக் பலம் க்ஷத்ரிய பலம் ப்ரஹ்மதேஜோ பலம் பலம்** * என்ற புகழ்ச்சியைப் பரிபாலித்துக் கொள்ளக் கடவோம்]. ... ... ... ... ... *

17. ஸம்ந்யாஸிகளை த்ரிதண்டிகளென்கிறோம். முக்கோல் பிடித்த முனிகளென்றபடி. இந்த முக்கோல்களே த்ரிதண்டமெனப்படுகின்றன. தண்டமென்பதற்குக் கோல் என்கிற பொருள் தவிர, தண்டித்தல் [அடக்குதல்] என்கிற பொருளும் ப்ரஸித்தமாதலால் மூன்று வகையான தண்டங்களைக் கொண்டவர்களே த்ரிதண்டிகளெனத் தகுவர்களென்கிறார் மனுமஹர்ஷி. 12-10, வாக்தண்டம், மநோதண்டம், காயதண்டம் என்னுமிவை மூன்று தண்டங்களாம். வாக்கை யடக்குதல், மனத்தை யடக்குதல், சரீரத்தை யடக்குதல் ஆகிற இம்மூன்று அடக்கங்களும் மூன்று தண்டங்கள்; இவற்றை யுடையவர் த்ரிதண்டி. (இதன் விவரணம் வருமாறு) பொய் சொல்லுவது, பழிமொழிகளைச் சொல்லுவது, பகவத் பாகவத ஆசார்ய நிந்தைகளைப் பொழிவது, தன்னைத்தானே ப்ரசம்ஸித்துக்கொள்வது முதலான வாக் தோஷங்களில்லாமை வாக்தண்டமெனப்படும். (வாக்கினாலே தண்டித்தலென்று பொருளன்று; வாக்கைத் தண்டித்து அடக்கி வைத்துக் கொள்ளுதலென்று பொருள்) மனோ தண்டமாவது—அப்ராப்த விஷயங்களைச் சிந்தனை செய்யாதபடி மனத்தை நிக்ரஹித்தல். காய தண்டமாவது—கரசரணாதி யவயவங்களை அப்ராப்த விஷயங்களில் போகவொட்டாதபடி தடுக்கை. பெரிய திருமொழியில் 1-6-7. * நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும் நீதியல்லாதன செய்தும் * என்றருளிச் செய்தபடியே மனமொழி மெய்களால் அநீதியொன்றும் நிகழாதபடி ஜாகரூகர்களாய் வர்த்திப்பவர்களே த்ரிதண்டிகளென்றதாயிற்று. இங்கு வியாக்கியானத்தில் குல்லூகபட்டர் "**ந து தண்ட த்ரயதாரண மாத்ரேண த்ரிதண்டீதி உச்யதே**" என்றெழுதி யிருக்கையாலே அவர் ஏக தண்டிகளை நெஞ்சிலெண்ணாது த்ரிதண்டிகளையே சிந்தனை செய்பவரென்று புலப்படுகின்றது. சததூஷணி 64-ஆம் வாதத்தில் இது வ்யக்தம். ... *

18. (12-122.) பரமபுருஷனையே அநவரதமும் சிந்திக்க வேணுமென்று மநுமஹர்ஷி தம்முடைய ஸ்ம்ருதியைத் தலைக்கட்டுகிறார். * **ப்ரசாஸிதாரம் ஸர்வேஷாம் அணீயாம்ஸம் அணோரபி. ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத் தம் புருஷோத்தமம்.** * (புருஷம்பரம் என்றும் பாடமுண்டு.) இதில் நான்கு விசேஷணங்கள் பரமபுருஷனைச்

சிறப்பித்துக் கூறுவன. **ப்ரசாஸிதாரம் ஸர்வேஷாம்**—ஸர்வநியந்தா என்றபடி. கீதையில் * ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸம்நிவிஷ்டோ மத்தஸ் ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநஞ்ச * என்றதை நினைப்பது. **அணீயாம்ஸம் அணோரபி**=* அணோரணீயாந் மஹதோ மஹீயாந் * என்கிறபடியே அணுபதார்த்தங்களிலும் அந்த: ப்ரவேச ஸௌகர்யார்த்தமாக மிகவும் அணுவாயிருக்குமவன். **[ருக்மாபம்]** ச்சாந்தோக்யத்தில் அந்தராதித்யவித்யையிலே 'ஹிரண்மய: புருஷ:' என்றும் 'ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண:' என்றும் * சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனியொளி யொவ்வாது * (திருவாய்மொழி 3-1-2,) என்றும் சொல்லுகிறபடியே பொன்மேனியன். * திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் * என்கிறபடியே ஹிரண்யவர்ணையான பிராட்டியின் தேஜோவ்யாப்தியாலே பொன்மேனி படைத்தவனென்னவுமாம். **[ஸ்வப்நதீகம்யம்]** ஸ்வப்நமுண்டாவது எப்போது? செவி வாய் கண் மூக்கு முதலான ஸகலேந்திரியங்களினுடையவும் வியாபாரம் உபரதமானவாறே கேவலம் மநோஜந்யமான து கனவு. அப்படியே பரமபுருஷனும் கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலு மைங்கருவிகளும் ஓய்ந்து, * என்றேனும் கட்கண்ணால் காணாத வவ்வுருவை நெஞ்சென்னு முட்கண்ணேல் காணுமுணர்ந்து *



**ஸ்ரீமான் உவே. ஒ. முடும்பை பாஷ்யமையங்கார் திருக்குமாரர் விவாஹ கோஷ்டி**

(பெரிய திருவந்தாதி.) என்கிறபடியே விசுத்தேந மநஸா க்ராஹ்யனுயிருப்பவன். இப்படிப்பட்ட பரமபுருஷனைச் சிந்தித்து வாழ்வோமாக. இந்த ஸ்ம்ருதியின் உபக்ரமத்தில் ச்லோ. 10ல் * **ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ: தா யதஸ்யாயநம் பூர்வம் தேந நாராயணஸ் ஸ்ம்ருத:** * என்று நாராயணநாம நிர்வசனம் செய்திருக்கையாலே இம்முனிவர்க்குப் பரமபுருஷத்வேந விவக்ஷிதன் நாராயணனேயென்றறிவது.

**[உபஸம்ஹாரவிஜ்ஞாபனம் ;—** இந்த ஸ்ம்ருதி பன்னிரண்டு அத்யாயங்களே கொண்டதாயினும் அபரிமிதார்த்த புஷ்கலமென்னத்தட்டில்லை. நாம் பதினெட்டென்று கொண்ட கணக்குக்காகப் பதினெட்டு விஷயங்களை யெடுத்து விவரித்தோமாயினும் இந்நூல் முழுவதும் முஹுர்முஹுரநுஸந்தேயமென்று நெஞ்சில்பட்டது.]

**7. மநுஸ்ம்ருதியில் பதினெட்டு முற்றிற்று**

# ஸ்ரீமதஹோபில விசேஷங்கள் பதினெட்டு

1. இந்த அஷ்டாத சாஷ்டாதசமஹார்த்த நிதியில் இந்தப்பதினெட்டு உத்தேசிக்கப் பட்டிருக்கவில்லை. இது யாத்ருச்சிகமாக இங்கே ப்ராப்தமாகிறது. ஸ்ரீமதஹோபிலத்தில் நடக்கப்போகிற விசேஷங்களைப் பற்றி முன் ஸஞ்சிகைகளில் விரிவாகத் தெரிவித் திருந்தேன். சென்ற ஆவணிமாதத்திலேயே அவ்விடத்து நிகழ்ச்சிகள் செவ்வனே நடந்து நிறைவேறியானபடியால் அதைப்பற்றிச் சிறிது வெளியிடவேணுமென்கிற அவா இருந்தது. அடியேனுக்கு எதுவும் நேராகத் தெரியாமையினால் வாளாவிருக்க நேர்ந்தது. அடியேனுடைய ஆப்தர்கள் பலர் அவ்விடம் நேரில் சென்றிருந்து அநுபவித்து வந்தவர்கள் சிறிது போது அடியேனோடு சந்திக்க நேர்ந்து வார்த்தையாடுங்கால், சிலர் அங்கே ஒருவாரம் தங்கியிருந்ததாகவும் சிலர் இரண்டொருநாள் மட்டுமே தங்கியிருந்த தாகவுஞ்சொல்லி அவ்விடத்து நிகழ்ச்சிகளை வெகு ஆனந்தமாகத் தெரிவித்தார்கள். 1. நாலாயிரம் பக்தர்களுக்குமேல் கூடியிருந்தது. 2. நவீன நிர்மாணமான கோபுரத்தின் மிக அற்புதமான காட்சி. 3. பரத்வாஜாச்ரமததீயாராதனமென்று ப்ரஸித்தமாகச் சொல்லுமதைத் தோற்பிக்கவல்ல ததீயாராதன விசேஷம். 4. எந்த ஸமயத்திலும் எத்தனைபேர்களுக்கும் ஒருவகையான குறைவுமில்லாமல் ஸித்தமாயிருந்த ப்ரஸாத பணியார விசேஷங்களின் ஸம்ருத்தி. 5. எவ்விதமான அஸௌகரியத்திற்கும் இடமில்லாதபடி ஸகலர்க்கும் ஸகலவித ஸௌகரியங்களையும் அமைத்துக் கொடுத்த அதிசயம். 6. ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகியசிங்கரின் ஔதார்ய காருண்ய ஸௌசீல்ய ஸௌலப்யாதி குணவிசேஷங்களின் பௌஷ்கல்யம். 7. ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ பகவானுடைய அப்ரதிமஸேவையின் அற்புதம். 8. வைத்யர்களையோ டாக்டர்களையோ தேடியோடவேண்டாமலும், ஒருவர்க்கும் ஒருவிதமான உபப்லவமும் நேராதபடியும் பாதுகாப்புச் செய்திருந்த பாங்கு — ஆகிய இவற்றை ஒவ்வொருவரும் தனித்தனியாக அடியேனிடம் சொல்லித் தாங்களும் மகிழ்ந்து அடியேனையும் மகிழ்வித்தனர். பெரிய காரியங்கள் நடைபெற்றால் அனைவரும் ஒருமிடறாகப் புகழ்வதென்பது அரிது. இங்கு அப்படியல்லாமல் ப்ரசம்ஸைகள் ஏகமுகமாக இருந்தது விசேஷம். இவர்களில் ஒரு ஸ்வாமி இரண்டு புத்தகங்களை அடியேனிடம் கொடுத்து அவகாசமுள்ளபோது இதைக் கடாக்ஷிக்கவேணுமென்று நியமித்தார். அவற்றில் ஒன்றின் அட்டைமேல் கோபுரஸேவையும், மற்றொன்றின் அட்டைமேல் ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹஸேவையும் ப்ராப்தமானபடியால் அஹோபில ஸம்ப்ரோக்ஷண நினைவுமலர்களிவைபோலுமென்று அவற்றை ப்ரணதிசாலிநா மௌலிநா ஸ்வீகரித்தேன்.

2. அஹோபில நிகழ்ச்சிகளைத் தெரிவித்த இந்த ஸ்வாமிகள் அவ்விடத்து வித்வத் ஸதஸ்ஸைப்பற்றி ஒன்றுமே ப்ரஸ்தாவித்திலர்களாதலால் அதைப்பற்றி அடியேனாகவே அவர்களைக் கேட்டேன். அதற்குச் சொன்னார்கள் — 'ஆஹ்வான பத்ரிகையில் குறிப்பிட்டிருந்த திருநாமங்களில் பலர் எழுந்தருளவில்லையென்றும் சிலரே யெழுந்தருளினார்களென்றும், ஏற்கெனவே குறிப்பிடாத சில வித்வான்களும் எழுந்தருளி யிருந்தார்களென்றும், ஸதஸ்ஸாக நடத்துவதற்கு ஸமய ஸந்தர்ப்ப ஸௌகரியங்கள் அவ்வளவாக அமையவில்லையென்றும், பெரும்பாலும் ஸ்ரீமத் அழகிய சிங்கரே



உபந்யஸித்தாச்சுது என்றும், இப்புத்தகங்களிரண்டையும் கடாக்ஷித்தால் எல்லாம் தெரியவருமேயென்றும் சொல்லிப் போய் விட்டார்களவர்கள். ஸ்த்ரீகளின் ஹரிகதைகள் நடந்தனவென்று ஒரு ஸ்வாமி ஸாதித்தார். அடியேன் நேராகவறியாத விஷயங்களைப் பற்றி விரித்தெழுத விரும்புகின்றிலேன். கையில் கிடைத்த இருபுத்தகங்களையும் வாசிக்கத் தொடங்கினேன். அடியேனுடைய வழக்கமொன்று; வாசிக்கவெடுத்துக்கொண்ட புத்தகமோ பத்ரிகையோ "யத்ர நாந்யத் பச்யதி நாந்யத் ச்ருணோதி நாந்யத் விஜாநாதி ஸ பூமா" என்று உபநிஷத்தோதினபடியே மேன்மேலும் ருசியை விளைத்து ஐகாக்ரியத்தையுண்டாக்குமதாயிருந்தால் பார்ப்பது; நாலுவரி வாசித்தவுடனே தலைவேதனையாயிருக்குமாகில் ஏட்டைத் தள்ளுவது என்பதேயாம். வியாஸங்களின் தலைமேல் எழுதுமவர்களின் திருநாமம் காணப்படுமே. அதுகொண்டே பெரும்பாலும் ஏடுதள்ளிவிட நேரும். ஆனாலும் இவ்விரு புத்தகங்களையும் எப்படியும் பூர்த்தியாகப் பார்த்துவிடுவதென்றே ஸங்கல்பங்கொண்டேன். நவீந வ்யக்தியின் வியாஸத்தை முந்துறமுன்னம் வாசிப்போமென்று ஆசைகொண்டு பெயர்களைப் பார்த்துக்கொண்டே போகையில் (கோபுரக் குறியிட்ட புத்தகத்தில்—பக்கம் 65-ல்) உடையவே. வில்லிவலம் கிருஷ்ணமாசாரியார் என்பவருடைய வியாஸம் முற்பட்டது. "**ஸ்ரீ அழகிய சிங்கரின் புகழ் மாலை**" என்று மகுடமிட்டு வர்த்தமாந ஸ்வாமியின் வைபவங்களை இவர் எழுதுவதாகத் தெரியவந்தபடியால் மிக்க குதூஹலத்துடன் இந்த வியாஸத்தை வாசிக்கத் தொடங்கினேன்.

(இடையில் ஒரு சிறு விண்ணப்பம்.) *ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந

ப்ரூயாத் ஸத்யம் அப்ரியம்* [உண்மையானதாக இருந்தாலும் பிறரை நோவச்செய்யும் வார்த்தையைச் சொல்லக்கூடாது] என்பதை அடியேன் நன்கறிவேன். அன்றியும் *குணதோஷௌ புதோ க்ர்ஹ்ணந் இந்துக்ஷ்வேலாவிவேச்வர:, சிரஸா ச்லாகதே பூர்வம் பரம் கண்டே நியச்சதி.* என்பதை இளமையிலிருந்தே நன்கறிவேன். அடியேன் புதனல்லாமையாலே இந்த சுலோகத்திற்குக் கட்டுப்பட வேண்டாவாயினும் "ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்" என்கிற கட்டளைக்குக் கட்டுப்பட்டேயாகவேணும். அரசாணிபாலை வேங்கடாத்வரியின் காலத்தில் ஒரு மஹாகவி காவியமொன்றையியற்றி அவரிடம் கொணர்ந்து காட்டினராம். அவர் ஒன்றும் வாய்விட்டுச் சொல்லாமல் அதைப் பார்த்துக் கொண்டேயிருந்தாராம். வந்த கவிவரர் 'என்ன? ஏதாவது தப்பு அகப்படுமாவென்று பார்க்கிறீரோ?' என்றாராம். இல்லையில்லை; ஏதாவது நல்லது அகப்படுமோவென்று பார்க்கிறேன் என்றாராம் வேங்கடாத்வரி. கண்ணில் படுவதெல்லாம் கெடுதலாகவே யிருப்பதால் நல்லது தேடவேண்டியதாயிருக்கின்றது என்றாராயிற்று. அந்த வார்த்தை அவருடைய இயற்கையிலே சேர்ந்ததாகவுமிருக்கும். அடியேன் "வித்வாந் விபச்சித் **தோஷஜ்ஞ:**" என்கிற வகுப்பிலும் சேர்ந்தவனல்லேன்; "தோஷைகத்ருக் புரோபாகீ" என்கிற வகுப்பிலும் சேர்ந்தவனல்லேன். "செய்வனதிருந்தச்செய்" என்பதை நினைப் பூட்டவும் எந்தவிதத்திலும் லோகோபகாரம் செய்யவுமே ஆசையுடையேன். அதனால் ஹிதபுத்தியுடன் அடியேன் தெரிவிப்பவைகளை அவரவர்கள் ஹிதமாகவே கொள்ளுவர்கள் என்கிற திட நம்பிக்கையினால் சில வியாஸங்களைப் பற்றி மட்டும் சில தெரிவிக்க முன் வருகிறேன். அன்றியும் பொதுவாக வொரு வார்த்தை விஜ்ஞாபிக்கிறேன். இவ்விரு புத்தகங்களிலும் வியாஸங்களெழுதியுள்ளவர்களின் திருநாமங்கள் பெரும்பாலும் (ஆனி மாதத்தில் வெளியிட்ட) ஆஹ்வான பத்ரிகையில் வெளிவந்திருப்பவையே. அந்த பத்ரிகையில் இவர்களுக்கெல்லாம் உபந்யாஸ விஷய நிர்தேசம் பண்ணப்பட்டே யிருப்பதால் நிர்திஷ்ட பூர்வ விஷயங்களிலேயே இவர்கள் தம்தம் லேகினியைச் செலுத்தி யிருக்கவேண்டும். என்ன காரணத்தாலோ அந்த பத்ததியை ஒருவரும் தழுவவில்லை. அதைப்பற்றி நாக்கென்னவென்று விட்டிடுகிறேன்.

முந்துறமுன்னம் அடியேன் வாசித்ததாகத் தெரிவித்த புகழ்மாலை வியாஸம் மற்ற வியாஸங்களெல்லாவற்றினும் சிறந்து விளங்குகின்றது. எடுத்துக்கொண்ட விஷயத்தை ஸஹ்ருதய ஹ்ருதய ஹாரியாக எழுதியுள்ளார். வர்த்தமாந ஸ்வாமியின் சரிதைகளையும், முன்னைய ஸ்வாமிகளின் சிறப்புகளையும் அந்யூநாதிரிக்தமாகவும் பக்தி வர்த்தகமாகவும் எழுதியிருப்பது பாராட்டத்தக்கது. இவருடைய நடையை மற்றையோர்கள் அநுகரிக்க ஆசைப்படலாம், ஆனால் அநுஸரிக்க இயலாதென்று திண்ணமாகச் சொல்லுவேன். இவரும் சில திருத்தங்களைச் செய்துகொள்ள வேண்டுமென்பதை ஹிதமாக விஜ்ஞாபிக்கி றேன். ஸ்ரீஸ்வாமி அவதரித்த ஊர் **முக்கூர்** என்றெழுதிவிட்டார். மேன்மேலும் அப்படியே அநுவதிக்கிறார். அதற்குப் பொருள் பகருமிடத்து 'முக்கூறுகள் — மூன்று பாகங்கள்' என்கிறார். இந்த உல்லேகம் அழகியதே. இதற்குச்சேர, ஊரின் பெயரை **முக்கூறு** என்றே எழுதி, 'முக்கூர் என்று வழங்குவதானது திருவெவ்வுளூரைத் திருவள்ளூரென்றும், திருவிந்தளூரைத் திருவிழந்தூரென்றும், திருக்கோவலூரைத் திருக்கோயிலூரென்றும் திருச்சேறையைத் திருச்சிறையென்றும் ....வழங்குதல் போலத்

தவருனது' என்று முடித்திருக்கவேண்டும். **முக்கூர்** என்று இடையினரகர வீற்றதாக க்ராமநாமமிருப்பதாகக் காட்டியிருக்கவே கூடாது.

தேவனார் விளாகம் அழகிய சிங்கர் நைமிசாரண்யத்தில் திருமேனி பாங்கிழந்தா ரென்பதை யெழுதிவருமிடத்து "நாளுக்குநாள் நிலைமை **மோசமாகி வந்தது**" என்றெழுதியுள்ளார். உத்தமாச்ரமிகள் திறத்தில் (தத்ராபி) மஹாசார்யர் திறத்தில் இங்ஙனே பதப்ரயோகம் செய்வது தகுதியற்றது. கல்கி கலைமகள் போன்ற பத்ரிகை களிலும் நாவல்களிலும் காணும் பேச்சு இது. 'கவலைக்கிடமாயிற்று' என்றோ. 'சிஷ்யர் களைச் சிந்தைக் கடலில் ஆழ்த்தியது' என்றோ எழுதியிருக்கலாம். இந்த லேககரால் இனியும் திருத்திக்கொள்ள முடியாததொன்று தெரிவிக்கிறேன். ஸ்ரீ இஞ்சிமேடு. ஸ்ரீ பெருமாள்கோயில்; ஸ்ரீ திருவேங்கடமுடையான், ஸ்ரீ புள்ளம்பூதங்குடி. ஸ்ரீ அழகிய சிங்கர், ஸ்ரீ பெருமாள், ஸ்ரீ பெரியபெருமாள், ஸ்ரீ தேவனார்விளாகம்...என்றிப்படியெழுதி வருகிறார். ஆறாயிரப்படி. தேசிக ரஹஸ்யங்கள் போன்ற திவ்ய க்ரந்தங்களை இவர் கண்டிருப்பரே. அவற்றில் இங்ஙனே ஒரு ப்ரயோகமாவது கண்டிருப்பரோ? ஒரு கதை கேட்டதுண்டு; மடத்திற்கு வந்த வொருவர் 'ஸ்வாமி என்ன செய்தருளுகிறார்?' என்று கேட்டாராம். அதற்கு விடை கூறினாராம் 'ஸ்ரீ அல்பசங்கைக்கென்று எழுந்தருளி யாச்சுது; ஸ்ரீமச்ஸ்ரீபஹிச்சங்கையும் ப்ராப்தமாயிற்றுப் போலும்; ஸ்ரீ ப்ரக்ஷாளனம் செய்தருளியாகிறது' என்று. —அழகியசிங்கர்—பெருமாள்—பெரியபெருமாள் இஞ்சிமேடு என்றிங்ஙனே யெழுதினால் அவமரியாதையாகத் தோன்றிவிடும் என்று நினைத்தன்றோ இப்படியெல்லாம் புதியபுதிய பரிபாஷைகள் காட்டப்படுகின்றன. மற்றையோரைப் பார்த்து இவரும் இந்த ஸரணியைப் பின்பற்றியிருக்கவேண்டா. "ஸ்ரீ அழகியசிங்கர் ஸ்ரீ அஹோபிலக்ஷேத்ரத்தில் ப்ரஹ்மோத்ஸவ **தர்சனத்**திற்காக எழுந்தருளியாயிற்று" என்றெழுதுகிறார். உத்ஸவதர்சனம் என்று ஸ்ரீ வைஷ்ணவர்கள் வழங்கக்கண்டதுண்டா? 'மங்களாசாஸனத்திற்காக' என்றெழுதியிருந்தால் எவ்வளவு இனிமையாயிருக்கும். வகுத்த பரிபாஷைகளைவிட்டுப் புதிய பரிபாஷைகள் ஏதுக்கு.

அடியேனுக்கு இரண்டு புத்தகங்கள் கிடைத்ததாகத் தெரிவித்தேனே; மற்றொரு புத்தகத்திலும் [லக்ஷ்மீந்ருஸிம்ஹக்குறியீட்டிலும்] இவருடைய வியாஸம் "தகவால் மிக்க தேசிகர்" என்பது காணப்பட்டது. அதிலும் இவருடைய எழுத்து நடை அதிசயித்தேயிருப்பது. "ஸ்ரீ இஞ்சிமேட்டு ஸ்ரீ அழகியசிங்கர்" ["ஸ்ரீ செங்கற்பட்டு ஸ்ரீ வக்கீல்"] பரிபாஷைகளை அதிலும் விட்டவரல்லர். அவர் தாமாகவே வெறுப்புற்று இவற்றை விடுவதாயிருந்தாலுங்கூட, அடியேன் எடுத்துக் காட்டுவதே ஹேதுவாக விடவொண்ணாததாயுமிருக்கும். இதிலும் சில திருத்தங்களை ஹிதபுத்த்யா தெரிவித்துக் கொள்ளுகிறேன். மதுரகவிகளைப்பற்றி இவர் எழுதிவருகையில் "ஈச்வரன் அவதரித்த நாள்தொட்டு நானும் மாறிமாறிப் பலபல யோனிகள் தோறும் பிறந்திறந்து.... என்றெழுதுகிறார். இங்கு "அநாதிகாலமாக" என்னப்பொருந்தும். ராமாவதாரம் க்ருஷ்ணாவதாரம் என்னுமாபோலே ஈச்வராவதாரம் என்று ஒன்றில்லையே. அந்த ராமாத்யவதாரங்களைத்தான் ஈச்வராவதாரமாக எழுதினேனென்பர்; 'ஈச்வரன் அவதரித்த நாள்தொட்டு' என்று என்னகணக்கு? அதற்கு முன்னேயிருந்த நிலையென்ன? என்று கேள்விபிறக்குமே.

வழக்கப்பட்டு விட்டது கர்மவசம் என்றுதான் சொல்லவேணும். நாலுநாள் பொறுத்து மறுபடியும் குணரத்னகோசமென்றுதான் என் வாயில் வரும். அதற்கென்ன பண்ணுவது? ஸ்ரீயைச் சேர்க்கத்தகாத விடத்திலே சேர்ப்பதும் சேர்க்கவேண்டுமிடங்களிலே நழுவ விடுவதும்..............' மேலே ஸாதித்ததை இங்கே நிறுத்திக் கொள்ளுகிறேன். அப்போது நடந்துகொண்டிருந்த உக்தி நிஷ்டை ஆசார்ய நிஷ்டை விவாதச் சுவடிகளில் 'ஸ்ரீ திருவுள்ளம்' என்று ஒருவர் எழுதுவதும், மற்றொருவர் 'ஸ்ரீ ஸ்ரீ திருவுள்ளம்' என்றெழுதுவதும், இன்னொருவர் 'ஸ்ரீமச்ச்ரீ திருவுள்ளம்' என்றெழுதுவதுமான வைகரிகளை எடுத்தெடுத்துச் சொல்லி மாய்ந்து போனார் ஸ்வாமி. அதெல்லாம் புத்தகங்களில் ஏறியே கிடக்கின்றன. இது நிற்க.

7. ப்ரக்ருதரான நாராயணாசார்யருடைய பாஷைகளையோ பரிபாஷைகளையோ சிறிதநுபவிப்போம். இவருடைய வியாஸங்களும் இரண்டாதலால் இரண்டிலுமநுபவிப்போம். எழுதுகிறாரிவர்—“வண்ணானுக்கு வண்ணாத்தியின் மேல் ஆசை; வண்ணாத்திக்கோ......” என்று பாமரர்கள் வழங்குவதும் அஸதஸ்யமுமான இந்த ஆபாணகத்தைக் கூசாமல் எழுதுகிறார். இந்த த்ருஷ்டாந்தத்திற்கு எது தார்ஷ்டாந்திகமென்னில்; பெருமாளுக்கு ப்ரஹ்லாதனுடைய க்ஷேமத்தில் ஆசையாம். ப்ரஹ்லாதனுக்கு லோகக்ஷேமத்தில் ஆசையாம். தேசிகனுங்கூட “**அவ்யாத் த்ரீணி ஜகந்தி**” என்கிறாராம். வண்ணான் பெருமாள். வண்ணாத்தி ப்ரஹ்லாதன். ஸகலலோகங்களும் கழுதை. இப்படியாக இவருடைய ஸ்ரீமச்ச்ரீ திருவுள்ளம். சில உபந்யாஸகர்கள் நினைவுக்கு வருவதையெல்லாம் சொல்லி ஆசை தீருவது போல இவர் நினைவுக்கு வருமதையெல்லாம் எழுதி யாசைதீருகிறார். ஒரு சாஸ்த்ரஜ்ஞன் எழுதுகிற எழுத்தா இது? 'எம்பெருமானுக்குப் பிராட்டி மேல் ஆசை; பிராட்டிக்குச் சேதநர்களின் மேலாசை' என்றிங்ஙனே யெழுதத் தோன்றவில்லையே. ஒருகவி “ஆத்யந்தரஹிதம் வந்தே மத்வஸ்த்ரஸத்ருசம் ஹரிம்” என்றாரென்று ப்ரஸித்தமானது. இது ஸதஸ்யமும் சமத்காரசாலியுமான வார்த்தையாகையாலே இதற்கு ரஸிகர்கள் உகப்பர்கள். இந்த வண்ணான் வண்ணாத்தி கழுதைகதைக்கு இவர்தம்பியாவது உகப்பரா? *யாந்தி ந்யாயப்ரவ்ருத்தஸ்ய திர்யஞ்சோபி ஸஹாயதாம், அபந்தாநம்து கச்சந்தம் ஸோதரோபி விமுஞ்சதி* என்றார் முராரி.

8. மற்றோர் அரியபெரிய விஷயம் கேளீர்; நம் பகவத்ராமாநுஜர் அருளிச் செய்த சாரீரகமீமாம்ஸா பாஷ்யத்தை ஸ்ரீ பாஷ்யமென்றே நாம் வழங்கிவருவது போல எதிரிகளுங் கூட தூஷணார்த்தமான அநுவாதங்களிலும் ஸ்ரீ பாஷ்யத்திலென்றே சொல்லுவதும் எழுதுவதுமாயிருக்கிறார்கள். உண்மையில் இது ஸ்ரீ பாஷ்யத்திற்கு ஓர் ஏற்றம். அஸ்மத்தர்சநார்த்த தூஷணமே போதுபோக்காயிருந்த அனந்தக்ருஷ்ண சாஸ்த்ரியார் இவ்விஷயத்தைத் தம்முடைய சில நூல்களில் தாமேயெழுதியுள்ளார் —'ஸ்ரீ பாஷ்யத்திற்கு இதுவொரு பெருத்த பாக்கியம்' என்று (*அவசா: ப்ரதிபேதிரே என்ற கணக்கில்) எழுதியுள்ளார். இதை அடியேன் சில நூல்களில் எடுத்துக் காட்டியுமிருக்கிறேன். இந்த நாராயணாசார்யர் அவசியமானால் அதை யநுவதித்தெழுதியிருந்தால் போதுமானது. எழுதுகிறாரிவர்—(வியாஸத்தின் ஆரம்பம்)—“மாத்ரு காதுகனுக்கும் கத்தியோங்கிய கைகனத்தால் அம்மா என்றே அழைக்க வேண்டும்படி தாயுறவு உள்ளதென்பர்; அதுபோல் கண்டனம் செய்யப் புகுந்தவருங்கூட 'ஸ்ரீ பாஷ்யத்தில் குறிப்பிட்ட விஷயம் தவறு'

என்றே ஸ்ரீயுடன் கூட்டி கௌரவந்தோற்றச் சொல்லுவர்" என்று. இது மிகவும் அசடு தட்டிய வார்த்தை. "மாத்ரு காதுகனுக்கும் கைசலித்தால் அம்மேயென்ன ப்ராப்தியுண்டிறே" என்பது நம்பிள்ளை ஸ்ரீ ஸூக்தி. ஒருவன் தௌராத்ம்யத்தாலே பெற்றதாயை ப்ரஹரிக்கிறுன்; அப்போது கைநொந்தால் அம்மாவென்கிறுன். இதனுல் ந்ருசம்ஸனை மகனுக்கும் தாய் பக்கலிலே ப்ரேமம் தவிர்க்கவொண்ணுதென்று தேறும். மேலே குறித்த நம்பிள்ளை ஸூக்தியை எங்கேயோ அரைகுறையாகக் கேட்டவிவர் அநுவதிக்கவும் தகாதபடி யெழுதுகிறுர். 'கத்தியோங்கிய கை கனத்தால்' என்பது செவிபுதைக்க வேண்டும் வார்த்தை. கத்தியோங்குவதோ கைகனப்பதோ அம்மா! என்றழைப்பதோ எதுவுமிங்கிடையாது. இந்த த்ருஷ்டாந்தத்திற்கும் ஸ்ரீ பாஷ்யமென்று பிறர் நிர்தேசிப்பதற்கும் என்ன ஸம்பந்தம்? ஒருவர் 'திருவண்ணுமலை வழியாகத் திருக்கோவலூர் போனேன்' னென்றால் இரண்டிடத்திலும் அவர்க்குத் துல்யமான ப்ரதிபத்தியென்று சொல்லிவிட முடியுமோ? ஒருசைவர் 'ஸ்ரீரங்கம் வழியாக ஜம்புகேச்வரம் சென்றேன்' னென்றால் அரங்கத்தை ஸ்ரீரங்கமென்றபடியாலும் அப்படி ஸ்ரீ ஜம்புகேச்வரமென்று சொல்லாதபடியாலும் அவர்க்கு ஸ்ரீரங்கத்தில்தான் ப்ரதிபத்தி அதிகம், ஜம்புகேச்வரத்தில் அநாதரந்தானென்று சொல்லிவிட முடியுமோ? ஸ்ரீ பாஷ்யத்தை பாஷ்யமென்றே பலகால் எழுதிவைத்திருக்கிற தேசிகாதிகளுக்கு அதில் அவமதிப்பென்னத்தான் முடியுமோ? ச்ருதப்ரகாசிகாசார்யர் "ஸ்ரீ பாஷ்யம் வ்யவ்ருணோத் யதி ஸ்வயம்" என்று அநாயாஸமாக ச்லோகம் பண்ணலாமாயிருக்கவும் "பாஷ்யஞ்சேத் வ்யவ்ருணோத் ஸ்வயம்" என்றருளிச் செய்திருக்கிறுர். இதனுல் அவர்க்கு ஸ்ரீ பாஷ்யத்தில் கௌரவபுத்தியில்லையென்று சொல்லிவிடமுடியுமோ? அதிகரண ஸாராவலி 242ல் "பாஷ்யாதிக்ரந்தலேசோபி அவஹிதமநஸாம் ஐதமர்த்த்யம் பஜேத" என்கிறுர் தேசிகன். இங்கு "**ஸ்ரீ பாஷ்யாத் யுக்திலேசோபி**" என்றால் பொருந்தாதோ? ஸ்ரீ பாஷ்யமென்னுதே பாஷ்யமென்றதனுல் என்ன விபத்து விளைந்திட்டதோ? வசநபூஷணமென்னுதே ஸ்ரீ வசநபூஷணமென்று இவர் சொல்லிவிட்டால் அந்த திவ்ய க்ரந்தத்தில் இவர்க்குப் பெருமதிப்பு என்று யாரேனும் நினைப்பாருளரோ? ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரமென்று என்போல்வார்சொல்லிவிட்டால் அந்த க்ரந்தத்தில் எமக்குப் பெருமதிப்பென்றுதான் நினைப்பாருளரோ? "மாத்ருகாதுகனுக்கும் கத்தியோங்கிய கை கனத்தால்..." இத்யாதியை இவர் வெளியிட ஆசைப்பட்டால் இவர் தமக்கு வேண்டாதவரொருவர் 'வில்லிவலம் நாராயணுசார்ய **ஸ்வாமி**' என்றோ 'வில்லிவலம் வித்வான் ஸ்வாமி' என்றோ எழுதிவிட்டால் அவரை நோக்கி வெளியிடலாமத்தனை.

9. இவரைப் பற்றி அதிகம் எழுதினுல் திஷ்டஹதமுத்காரபிகாதந்யாயம் நினைவுக்கு வருகிறது. திருக்கச்சிநம்பி யருளிச்செய்த தேவராஜாஷ்டகத்தை நித்யம் சொல்லிவருகிற வொருவர் "ஸம்ஸாரமருகாந்தாரே துர்வ்யாதிவ்யாக்ரபீஷணே, விஷயக்ஷுத்ரகுல்மாட்யே த்ருஷாபாதபசாலிநே" என்றே சொல்லிவருவர். ஸ்வாமிந்! **சாலிநே** என்று சொல்லக் கூடாது, **சாலிநி** என்று சொல்லீர் என்று யாரேனும் திருத்தினுல் 'மூன்று பாதங்களும் ஏகாராந்தமாயிருக்க, நாலாவது பாதம் மட்டும் வேருயிருந்தால் க்ரமபங்கமப்பா!' என்பராம்; அதுபோல இவரும் தசாவதார ஸ்தோத்ரத்தில் நரஸிம்ஹாவதார ச்லோகத்தை "யத்ப்ராதுர்ப்பவநாத் அவந்த்யஜடராத் யாத்ருச்சிகாத்" என்று சொல்லியும் சொல்லு

3. "விஜ்ஞாபநாம் வநகிரீச்வர!" என்கிற ஸுந்தரபாஹுஸ்தவ ஸூக்தியை உதாஹரித்து "ஸ்ரீரங்கதாமநி—ஏஷஸோஹம்" என்கிற சிதைந்த பாடத்தைக் கையாளுகிறார். "ஏகதோஹம்" என்பது ஆழ்வான் திருவாக்கில் வெளிவந்த ஸமஞ்ஜஸமான பாடம். இதையடியொற்றியே அபீதிஸ்தவத்தில் "**க்வசந ரங்கமுக்க்யே**" என்கிற ஸூக்தி யவதரித்தது. (க்வசந, ஏகத:) பர்யாயங்கள். ஏஷஸோஹமென்றே புத்தகங்களிலுள்ளதென்று காட்டவருவர். இங்ஙனே காட்டக் கூடியவை பலபலவுண்டு.

மேலே *இன்பந்தருபெருவீடுவந்தெய்திலென்?* என்கிற இராமாநுச நூற்றந்தாதி பாசுரத்தையுதாஹரிக்குமிடத்து மூன்றுமடியில் "மன்பல்லுயிர்கட்கிறைவன்" என்று சிலர் வழங்குகிற [சில பிரதிகளிலுங் காண்கிற] அபபாடத்தையெழுதியுள்ளார். இங்கு அர்த்தஹானியொன்றுமில்லையாயினும் "நேர்பதிஞறே நிரைபதினேழென் றோதினர் கலித்துறையோரடிக்கெழுத்தே" என்ற யாப்பிலக்கணத்திற்குச் சேராததும் வெண்டளை பிறழ நிற்பதுமான இறைவன் பாடம் மறைதல் நன்று. இறையவனென்றே பாடம். அச்சுப்பிழையென்று சொல்லிவிடலாம். இவ்விரண்டு [ஸம்ப்ரோக்ஷணமலர்ப்] புத்தகங்களும் அச்சுப்பிழைகளே மலிந்தவை யாதலால் யாரும் எளிதாகவே உய்ய முடியும். "நூற்றந்தாதியிலே (9) *இறைவனைக் காணுமிதயத்து* என்றிருப்பதால் இறைவன் பதம் எப்படி தவறாகுமென்று சிலர் கேட்கவருவர்கள். ஆனால் இவர் அங்ஙனம் கேளார்; தமிழ் வாசித்தவராகத் தெரிவதனால்.

4. மேலே ***யாவந்மாதரமாப்ருச்சே*** என்கிற ஸ்ரீ ராமாயண ச்லோகத்தை யெடுத்து அதில் "**ஸீதாஞ்ச அநுநயாம்யஹம்**" என்ற இரண்டாவது பாதத்தில் ***அநுநயாமி**க்குக் காட்டும் விசேஷார்த்தம் ரஸ்யமாகத் தோன்றவில்லை. அநுநயமென்பதற்கு ஸாந்த்வநமென்கிற பொருள்தான் கோசஸித்தம். அமரகோசமும் காணலாம். மேலும் இந்த சுலோகம் அயோத்யாகாண்டத்தில் பத்தொன்பதாம் ஸர்க்கத்திலுள்ளது. இருபத்தைந்தாவது ஸர்க்கத்திற்குமேல்தான் பெருமாள் பிராட்டியிடம் செய்தி சொல்லச் செல்லுகிறார். பிராட்டி 'நய மாம் வீர' 'நயஸ்வ மாம்' 'மாம் நேதுமர்ஹஸி காகுத்ஸ்த!' என்கிறாளேயல்லது 'அநுநய' என்றிலள். பெருமாளும் 'ந த்வாம்நேஷ்யாமி' என்றே சொல்லுகிறார். வால்மீகியும் 'வநம் து நேதும் ந க்ருதா மதிஸ் ததா' என்றும் 'ந நேதும் குருதே புத்திம் வநே து:க்காநி சிந்தயந்' என்றுமே சொல்லுகிறார். ப்ரத்யுத "பஹுஅஸாந்த்வயத்... ஸாந்த்வ்யமாநா து ராமேண மைதிலீ" என்று ஸாந்த்வந பதத்தையே அஸக்ருத்ப்ரயோகிக்கிறார். ஆக "ஸீதாஞ்சஅநுநயாம்யஹம்" என்ற ப்ரக்ருத ஸ்தலத்தில் ஸாந்த்வநார்த்தத்தைவிட்டு உடன் கொண்டு போகையென்னும் பொருளைக் கொள்வதில் என்னரஸம்? "யாவந்மாதரமாப்ருச்சே ஸீதாமபி ச ஸாந்த்வயே" என்று சொல்லலாமாயிருக்க அங்ஙனம் சொல்லாமல் "ஸீதாமநுநயாம்யஹம்" என்று பெருமாள் திருவாக்கில் வெளிவந்ததனால், பிராட்டியை உடனழைத்துக்கொண்டு போக வேணுமென்கிற எண்ணம் அப்போது அவர் திருவுள்ளத்தில் இல்லாதிருந்தாலும் எதிர்காலத்துச் செய்தியைத் தெரிவிக்கவல்ல சொற்போக்கு அமைந்தது *வாசமர்த்தோநுதாவதிக்கு இணங்கும்—என்று சொல்லலாம். இப்படித்தான் திருவுள்ளமென்னில் ஸந்தோஷம். இவ்வர்த்தம் பரீக்ஷைபண்ணிச் சொல்லத்தக்கதன்று; உபந்யாஸங்களில் ரஸமாக வெளியிடத்தக்கது. "இம்மாதிரியே ஸ்ரீ பாகவதத்திலும்" என்று தொடங்கி

"**நிகதோதிபீஷண:**" என்பதற்கு ஏதோ விசேஷார்த்தமெழுதப் பட்டுள்ளது. இங்கு ஸாமாந்யார்த்த மின்னதென்றே விளங்கவில்லை. அதை முன்னம் விளக்கியிருக்கவேண்டும். ஸ்ரீ பாகவதத்திலேயே "உத்காயதீநாம் அரவிந்தலோசநம் வ்ரஜாங்கநாநாம் திவம் அஸ்ப்ர்சத் த்வநி:, தத்நச் ச நிர்மந்தநசப்தமிச்ரிதோ நிரஸ்யதே யேந திசாம் அமங்கலம்" என்றுள்ள சுலோகத்தையுமிணக்கிக் கொண்டு சப்த விசேஷப்பெருக்கை ரஸப்படுத்தியிருந்தால் நன்றும். பொதுவாக இந்த பண்டிதருடைய ஆசார்ய பக்தி மெச்சத்தகுந்ததென்று நிற்கிறேன். அது, தனக்ருதமாகவன்றிக்கே குணக்ருதமாயிருந்தால் அழகியதே. அதிலும் மேம்பட்டது ஸ்வரூபப்ரயுக்தம்.

5. இனி அடுத்த வியாஸ விமர்சம். இவர் தம்முடைய வியாஸத்தில் "என்னுடைய தமையனுர் வில்லிவலம் நாராயணுசாரியார்" என்றெழுதியிருக்கக் கண்டதனுல் அடுத்த படியாக அவருடைய வியாஸத்தையும் வாசிக்க விரும்பினேன். அஜகஜாந்தரமென்பர்களே, அதுதான் நினைவுக்கு வந்தது. அஜம் கஜம் என்கிற சொற்களில் அதிகமான வாசி தெரியாது. அவ்விரண்டு ஜந்துக்களையும் எதிரே கொண்டு நிறுத்தினுல்தானே நெடுவாசி தெரியும். அதுபோல இந்த ஸஹோதரர்களின் வியாஸங்களைக் கீழும்மேலுமாக வச்சிட்டுப் பார்க்கவேணும். அவருடைய பாஷையே வேறு. எங்குக் கற்றுரோ தெரியவில்லை. ஸரம்ஸரமாக எடுத்துக்காட்டினுல்தானே தெரியும். ஸ்தாநே, அஸ்தாநே பாராமல் ஸ்ரீயை வாரி வழங்குமியல்பு இவரிடமும் புஷ்கலம். ஸ்ரீ ராமாயண ப்ரஸங்கிகள் ஸாக்ஷாத் ராமசந்திரமூர்த்தி, ஸாக்ஷாத் லக்ஷ்மணஸ்வாமி, ஸாக்ஷாத் பரத்வாஜமஹர்ஷி என்கிறுப்போலவே, ஸாக்ஷாத் தாடகை ஸாக்ஷாச் சூர்ப்பணகை, ஸாக்ஷாத் ஏகாக்ஷி ஏககர்ணி என்றும் வாய்வெருவுவர்கள். அப்படியே இவரும் "**காதா தாதாகதாநாம்**" என்கிற சுலோகத்தில் சிதறவடியுண்டவர்களுக்கெல்லாம் ஸ்ரீ சேர்த்துப் பெருமைபெறப் பார்க்கிறுர். தொட்டயாசார்ய ஸ்வாமியை யெடுக்கிறுர்; அவர்க்கு ஸ்ரீ யிட மனம் வரவில்லையிவர்க்கு; அவர் பக்கத்திலே ஸ்ரீ பாஸ்கரர் என்கிறுர். தேசிகன் பலவிடங்களிலே ஸ்ரீ பாஷ்யமொன்றைதே பாஷ்யமென்றேயெழுதுகிறுர். [சரம ச்லோகாதிகாரே — "இந்த நிஷ்கர்ஷங்களெல்லாம் பாஷ்யத்திலே" இத்யாதி பஹுலம்.] இதனுல் தேசிகனுக்கு ஸ்ரீ பாஷ்யத்திலே மதிப்பில்லையென்று யாரும் சொல்லத்துணியார். "**படித்வா பாஷ்யம் தத்ப்ரவசநம்**" என்பது சுலோகமாகையாலே ஸ்ரீ சேரவில்லையென்று சொல்லிவிடலாம். ஸாதாரண வாக்யங்களிலே ஸ்ரீ பாஷ்யமென்றெழுதக் கூடாமையில்லையே.

6. இஞ்சிமேட்டு ஸ்வாமி க்ருஹஸ்தாச்ரமியாய்க் கச்சியில் வாழ்ந்துவந்த காலத்தில் ஒருநாள் (அநத்யயனத்தன்று) ஸாயம் ஸ்தோத்ராநுஸந்தாநத்தில் ஸ்ரீ குணரத்ன கோசமநுஸந்தித்துக்கொண்டு கோஷ்டியாய் திருவீதி ப்ரதக்ஷிணம் செல்லுகிறோம். ஸ்வாமி திருமாளிகை வாசலில் நின்றுகொண்டு பக்கத்திலிருந்த ஒரு ஆப்தரிடத்தில் 'குணரத்ந கோசமநுஸந்திக்கிறுர்கள்' என்று ஸாதித்தார். அது அடியேன் காதில் பட்டது. மறுநாள் பின் மாலை வழக்கப்படி வெள்ளக் குளத்திற்கெழுந்தருள அடியேன் அநுசரனைச் செல்லுகையில் 'குணரத்னகோசத்தில்' என்று தொடங்கி ஏதோ ஸாதிக்கப் புகுந்தார். அப்போது அடியேன் 'ஸ்வாமிகூட இப்படி ஸாதிக்கலாமா? ஸ்ரீ பாஷ்யம் ஸ்ரீ பாகவதம் என்னுமிடங்களிற்போலேயா இங்கு ஸ்ரீ சப்தம்?' என்றேன். உடனே ஸ்வாமிக்கு வெகு நிர்வேதமுண்டாகி 'அண்ணு! இது தெரியாத விஷயமன்று; இப்படியே வ்யவஹரித்து

வித்தும் வருகிறாரென்று மதுராந்தக வித்வானொருவர் சொல்லக் கேட்டிருந்த நாம் நம்பிக்கையற்றிருந்தோம். *ஸம்ப்ரதி ஸந்தேஹநிர்ணயோ ஜாத:* அந்த ச்லோகத்தை அப்படியே அச்சிடச் செய்து விட்டார். எப்படியே யென்றால் *அவந்த்ய **ஜடராத்** என்றே. **அ**ச்சுப்பிழையென்று எளிதாகச் சொல்லிவிடலாம். நாமும் இசைவோம். ஏற்கெனவே இவர்க்கிருந்த ப்ரஸித்திக்குச் சேரவா அச்சுப்பிழையும் அமையவேண்டும்? வேதாந்தவா வதூகர்க்கு பாதிதாநுவ்ருத்தி தெரியாமலிருக்குமா?

10. முடிவில் ஒருவார்த்தை. அடியேனெழுதி வெளியிட்டுள்ள [உலகம் பரவியுள்ள] தசாவதார ஸ்தோத்ர வியாக்கியானத்தில் இந்த சுலோகத்தின் விவரணத்தில் "[**க்ருஹஸ்தூண**] க்ருஹசப்தமும் ஸ்தூணசப்தமும் ஸமாஸமடையும்போது க்ருஹஸ்தூணமென்றாகக் கடவதென்று வியாகரண விதியிருக்கையாலே *மஹாஸுர **க்ருஹே** ஸ்தூண* என்று பாடமாகில் நன்றும் என்பர் பெரியோர்." என்று எழுதியிருக்கிறேன். அதைப் பார்த்த இவர் இங்கு ஏதோ வியாகரண விரோதமிருக்கிறது போலும் என்று தெரிந்துகொண்டு "மஹாஸுர க்ருஹ ஸ்தூண என்றதில் இலக்கணவிதிப்படி.... **ஸ்தூணம்** என்றிருக்க வேணுமென விவாதிப்பதுண்டு; பெரியோருடைய சொல்லுக்குத் தக்கபடி தான் இலக்கணம் அமையவேணுமேயல்லாது மாறுபட்டல்லவென்று



ஸ்வாமியே தத்வடீகையில் கூறியது கொண்டும்,......*நீவீ **விஸ்ரம்ஸ வேளாயாம் வஸ்த்ர மூல்யவிசாரகா:*** என்ற நீதியையொட்டியும்........இதற்குச் சமாதானமறியலாம்"

என்றெழுதிவைத்துள்ளார். வையாகரண ஸார்வபௌமராய் விளங்கின பிள்ளைபாக்கம் அழகிய சிங்கர் தாம் 'மஹாஸூரக்ருஹே ஸ்தாணு' என்கிற பாடத்தை வெளியிட்டருளினவர் என்பதை ஜ்ஞாதுமபௌ கியாந்! தத்வடீகையில் ஸ்வாமி ஸாதித்தது எதைப்பற்றி? எவ்விதமாக? என்பதை இவர் சிறிதுமறியார். விரலுக்குத் தகாத வீக்கமென்பர் பெரியோர். வியாகரண சர்ச்சையை ஸ்பர்சியாமலிருப்பது நன்று; ஸ்பர்சித்து விட்டு நீவிவிஸ்ரம்ஸ வேளையை நினைத்துக்கொள்வதும் அதைக்காட்டி மகிழ்வதும் இவர்க்கேயொக்கும். இவ்வளவோடு இவரை விட்டிடுவோம்.

11. கோபுரபுஸ்தகத்தில் இவர்க்கு அடுத்தபடியாக "சிங்கவேள்குன்றம்" என்று மகுடமிட்டெழுதுகிறுரொருவர். தசாவதாரங்களையும் பற்றிப்பேசவேண்டும் நியமனம் பெற்றிருந்த விவர்க்கு ஓரவதாரத்தைப் பற்றிப்பேச ப்ராப்தமாயிற்று. தேசிகனிடத்தில் த்வேஷத்தையும் ஆழ்வார்களிடத்தில் மஹாத்வேஷத்தையுமே நிருபகமாகக் கொண்ட விவர் தொடங்கும்போதே "பகவானையநுபவிக்கப் புகுந்த ஆழ்வார்கள்" என்கிருர். அதுகண்டபோதே ஆழ்வார்களுக்கும் எம்பெருமானுக்கும் ஏதோ வந்தது வல்லடி யென்றெண்ணி வருந்தினேன். 'அங்கண்ஞாலத்தில் திருமங்கையாழ்வார் பெறும் அநுபவம்' என்கிருர். எழுதும் முறை இதுவன்று; ஆழ்வார் அநுபவம் செய்கிருர்; அவ்வநுபவத்தை அவரருளிச் செயல் மூலமாக நாம் பெறுகிறோம். இதுதான் வஸ்துஸ்திதி. அநுபவத்தை ஆழ்வார் பெறுவதாக எழுதுவது அபிராமமன்று. திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழியில் தொள்ளாயிரம் பாசுரங்களில் திவ்ய தேசங்களையே அநுபவித்துப் போருமவர் பலவகைப்பட்ட பாவபந்தங்களோடு பதிகங்களை அமைத்துவருகிருர். முன்னிரண்டடிகளில் எம்பெருமானை வருணிப்பது, பின்னிரண்டடிகளில் அவனெழுந்தருளியிருக்கும் தலத்தை வருணித்துப் பேசுவது என்கிற முறையைப் பல திருமொழிகளிலே கையாளுகிருர். இத்திருமொழியும் அம்முறையிலேதான் அவதரித்தது. இதில் வினவிடையான ஸந்நிவேசமே கிடையாது. ஆண்டாளுடைய *பட்டி மேய்ந்தோர் காரேறு பதிகம் வினவிடையாக அமைந்ததென்பது ஸ்பஷ்டம். பெரியாழ்வாருடைய *கதிராயிரமிரவிபதிகமும், திருமங்கையாழ்வாருடைய *மானமருமென்னோக்கி பதிகமும் இருவர் ஸம்பாஷணை யாக்வைத்து அமைக்கப்பட்டதென்பதும் ஸ்பஷ்டம். ப்ரஸ்துதமான *அங்கண்ஞாலப்பதிகத்தை ஒருவர் கேட்க மற்றெருவர் விடை கூறுவதாக வைத்துப் பேசுவது—எதையாவதெழுதிப் பத்ரபூரணம் பண்ணவேண்டியேயாம். இதுமட்டுமென்ன? இந்த வியாஸம் முழுவதுமே வ்ருதாபத்ரபூரணமே. அல்லது ச்வேத பத்ரசிதீகரணமே. சப்த ஸௌஷ்டவமோ அபூர்வார்த்த நிரூபணமோ எதுவுமின்றிக்கே "அங்கண்ஞாலமஞ்ச என்றதனலே உலகமெல்லாம் அஞ்சிற்று என்கிருர்; அங்கோராளரியாய் என்றதனலே நரசிங்கவுருவெடுத்ததென்கிருர்; அவுணனென்றதனலே அஸூரனென்று பொதுவாகச் சொல்லுகிருர், அலைத்த பேழ்வாய் என்றதனலே நாக்கு இங்கிருந்து அங்குவரையில் அலைகிறதென்கிருர். கொலைக்கையாளன் என்றதனலே அவன் அதிகமாக அபராதப்பட்டவனகையாலே கொல்லப்பட்டானென்கிருர்; கூருகிராளன் என்கையாலே நகம் கூர்மைபொருந்தியதென்கிருர். நாலாம்பாட்டில் கீழ்ப்பாட்டுக்களிற்போல உடலையோ நெஞ்சையோ பிளந்ததைமட்டும் கூருமல் ப்ராணுபஹாரத்தையும் கூறினபடியாலே இங்கு அது ப்ரதான விஷயமென்பது ஸ்பஷ்டம்" என்றெழுதிக்கொண்டு போகிருர். அழகிய சிங்கப்பெருமாள் இரணியனது உடலையும் நெஞ்சையும் மட்டுமே

பிளந்தாரென்று ஆழ்வார் மூன்று பாட்டுக்களில் காட்டினராம்; உயிரையும் போக்கினு ரென்று நாலாவது பாட்டில்தான் காட்டினராம். இது இவர் கண்டுபிடித்த அரியபெரிய விசேஷார்த்தமாம்.

12. கீர்த்தி மூர்த்தியான ஸ்வர்ணம் ஸ்வாமி பெருமாள் கோயிலில் பருத்திப்பட்டு ஸ்வாமி திருமாளிகையில் சிலவருஷகால மெழுந்தருளியிருந்து பகவத்விஷய ப்ரவசனம் செய்தருளினுர். ஒருநாள் விடைகொண்டிருந்தேன். அன்று ஸ்ரீமுஷ்ணத்தில் நடந்த கதையென்று ஒன்று ஸாதித்தார். அவ்வூரில் ஒரு ஸ்வாமி ஸம்ப்ரதாயக்ரந்தங்களை நன்ருகவதிகரித்து நித்யம் காலக்ஷேபம் ஸாதித்துக்கொண்டிருந்தாராம். அவர் திருநாட்டுக் கெழுந்தருளிவிட்டார். அவருடைய குமாரர் ஒன்றும் வாசித்தவரல்லாமையாலே வெறுமனேயிருந்தாராம். "திருமாளிகையில் ஏதாவது சப்தோச்சாரணம் நடந்துகொண் டிருந்தால்தானே நாலுபேர் வந்துபோவார்கள்; புஸ்தகத்தை ஸரஸ்வதீபீடத்தில்வைத்து எதையாவது சொல்லிக்கொண்டிருக்கக்கூடாதா?" என்று தேவியார் வற்புறுத்திக் கொண்டிருந்தபடியாலே பெரிய ஸ்ரீகோசமொன்றை யெடுத்துவைத்துக்கொண்டு ப்ரவசனமாரம்பித்தாராம்; ச்ரோதாக்களும் கூடினுர்களாம். [ஸ்வர்ணம் ஸ்வாமி தாமும் அன்று அங்கு எழுந்தருளியிருந்ததாக ஸாதித்தபடி.] காலக்ஷேபம் ஆரம்பமாயிற்று;—

**வெள்ளைமுத்து வாழைப்பழம் கொண்டுவிற்ருன்**—எந்த வெள்ளைமுத்து எந்த வாழைப்பழம் கொண்டுவிற்ருனென்ருல், அந்த வெள்ளைமுத்து அந்த வாழைப்பழம் கொண்டுவிற்ருன்.

**பச்சைமுத்து பலாப்பழம் கொண்டுவிற்ருன்**—எந்த பச்சைமுத்து எந்த பலாப்பழம் கொண்டுவிற்ருனென்ருல், அந்த பச்சைமுத்து அந்த பலாப்பழம் கொண்டுவிற்ருன். அதாவதென்னென்ருல், நம்ம தகப்பனுருக்கு வெள்ளைமுத்தென்றும் பச்சை முத்தென்றும் இருவர் அத்யந்தம் ஆப்தர்கள்; வெள்ளைமுத்து வாழைத்தோட்டம் வைத்தான்; பச்சைமுத்து பலாத்தோப்புவைத்தான்; வைத்தவேளை வெகுநல்லவேளை; நம்ம அப்பாதான் நாளிட்டுக்கொடுத்தார். அதனுலே நன்ருக விளைந்தது என்று ஓயாத கதைசொல்ல ஆரம்பித்துவிட்டாராம். ச்ரோதாக்கள் ஆனந்தமாகக் கேட்கிருர்கள். "அப்பாகூட இவ்வளவு அழகாக ஸாதிக்கவில்லையே" என்கிருர்களாம். இதை ஸ்வர்ணம் ஸ்வாமி ஸாதிக்கும்போது வெகுரஸமாயிருந்தது. 'இன்று என்ன சொல்லுகிருர் கேட்போம்' என்று மறுநாளும் ஸ்வர்ணம் ஸ்வாமி யெழுந்தருளினுராம். "**பெட்டி வண்டியில் பிள்ளையேறினுன், மாட்டுவண்டியில் மருமகளேறினுள்**" என்று மூலம் வைத்து வியாக்கியானம் நடக்கிறதாம்.

13. ஸ்வர்ணம் ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டவிது இன்று காலை கேட்டது போலிருக்கிற தடியேனுக்கு. காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்திருந்தவர்களெல்லார்க்கும் அன்று கொள்ளமாளாவின்பவெள்ளம். அன்று *தீர்ப்பாரையாமினி காலக்ஷேபம். அதில் "நாழ்மைபலசொல்லி" என்கிற விடத்தில் இந்த கதையை ஸாதித்து 'இப்படி எதையாவது சொன்னுலும் பாதகமில்லை; செவிகொண்டு கேட்கக் கூடாததைச் சொல்லுவது அஸஹ்யமாயிருக்கின்றதே யென்கிருள் தோழி' என்று ஸாதித்து (ஸ்வர்ணம் ஸ்வாமி.) முடித்தருளினுர் இதுகேட்டு ஐம்பத்துநான்கு வருஷங்களுக்கு மேலாயிற்று. இருபதாவது ப்ராயத்தில் கேட்டேன். நெடுநாள் இதை மறந்தேயிருந்தேன்.

இன்று *அங்கண்ஞால விளக்கத்தைக் கண்டவாறே ஸஹஸா இது நினைவுக்கு வந்தது எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது. இவ்வண்ணமாக எழுதிப்போனாலாவது சிலர்க்கு ரஸ்யமாயிருக்கும். என்னே இவரெழுதுமர்த்தங்கள் !

14. நரஸிம்ஹ மூர்த்தியினுடைய தம்ஷ்ட்ரையைத் தமிழில் **கோரப்பல்** என்பர். கோரமான பல் என்றபடி. இவர் அதைக் கோரைப் பல்லாக ஆக்கிப் பலகால் எழுதி விட்டார். கோரை போலே நீண்டிருக்கும் பல் என்று வியாக்கியானமும் ஸாதிப்பர். **கோரம்** என்கிற சொல்லை ஆழ்வார்களும் கையாண்டிருக்கிறார்கள். *கோரமாதவஞ் செய்தனன் கொலறியேன்*. அரும்பெருந்தமிழ்ப் புலவர்கள் '**கோரைப்பல்**' என்றெழுதினால் (கோரமான பல்) என்றே அதற்குப் பொருள்காண இயலும். **ரொம்பவும்** என்று (இதுபோன்ற பல) பாமரச் சொற்களை யெழுதியுள்ளவரன்றோ விவர். இது நிற்க. *நல்லநெஞ்சே! நாம் தொழுதும்* என்கிற பாசுரத்தை விவரிக்குமிடத்தில் "எது அசக்யமோ எது துர்லபமோ அதில் ஆசைவைத்து அதைப் பெற்றே ஆகவேணுமென்று பிடிவாதம் செய்யக்கூடாது; செய்கின்றவன் கெட்டவன்; அப்படியல்லாமல் விவேகத்துடன் கிட்டாததில் பற்றற்று செய்யக் கூடியதைச் செய்ய இணங்குகின்றவன் நல்லவன்" என்றொரு தரும சாஸ்த்ரமெழுதுகிறார். இங்கு 'துர்லபத்தில் ஸ்ப்ருஹை செய்பவன் மூர்க்கன்; துர்லபத்தை மறந்தொழிபவன் சதுரன்' என்றிவ்வளவே யெழுதுவது ஸாரம். தலைவேதனையாக எழுதுவது வரிகளை வளர்த்தவே. தாராளமாக வளர்த்தட்டும். "எது அசக்யமோ, எது துர்லபமோ" என்று இரண்டிட்டெழுதுகிறாரே அதை விவரிக்க முடியுமா இவரால்? 'அசக்ய பதத்தால் எதை விவக்ஷிக்கிறீர்? துர்லப பதத்தால் எதை விவக்ஷிக்கிறீர்?' என்று கேட்டால் நான்முகனாகவேண்டுமத்தனை. கர்த்துமசக்யத்தை அசக்ய பதத்தால் விவக்ஷிக்கிறேனென்பீர். மேலே 'பெற்றேயாகவேண்டுமென்று பிடிவாதம் செய்யக் கூடாது' என்றுள்ளதேயன்றி 'செய்தேயாகவேண்டுமென்று......' என்றில்லையே. இனி வேறுவழியில் புகப்பார்ப்பீர்; எந்த வழியும் கண்டகிதமேயென்று கொள்க. "பகவதநுபவம் கிடக்கட்டும்; குன்றைப்பற்றின அநுபவம் எப்படிப்பட்டதென்று பார்ப்போம்" என்று தொடங்கி ஆசைதீர அந்தத் தலத்தைப் பழிக்கிறார்; அஹோபிலத்தைக் கனவிலுங்காணவேண்டாதபடி யெழுதுகிறார். கொங்கு நாட்டுக்குச் சென்ற கம்பர் "நீரெல்லாம் சேற்றுநாற்றம் நிலமெல்லாம் கல்லும் முள்ளும் ஊரெல்லாம் தொட்டிப்பட்டி உண்பதோ கம்பஞ்சோறு, பேர்களோ பொம்மன் திம்மன் பெண்களோ பேயும்நாயும் காருலாங்கொங்குநாட்டைக் கனவிலுங்காணலாமோ?" என்று பாடினராம். அதை ஸ்மரிப்பிக்கிறாரிவர். இதற்குச் சொல்லுவர்—"நானென்ன பண்ணுவேன்; ஆழ்வார் பாடியிருப்பதைத் தானே நானெழுத முடியும்; அதை யெழுதினேன்" னென்று. "பண்டைக்காலத்தில் இவ்வளவு கொடிதாயிருந்த தலத்தை நம் அழகிய சிங்கர்கள் சோழநாட்டுத் திருப்பதிகளுக்கும் மேலாக நீர்வளமும் நிலவளமும் ஊர்வளமும் சீர்வளமும் பொலியப் பரிஷ்கரித்துவைத்தது பக்தஜந பாகதேயம்" என்று அழகாக முடிக்கத் தெரியவில்லையே யென்று குமாண்டூர் ஸ்வாமி வருந்தினர். இத்திவ்ய தேசத் திருமொழியின் முதற்பாசுரத்தில் "ஆளரியாய் அவுணனுகம் போழ்ந்த புனிதன்" என்றருளிச் செய்திருப்பதை யெடுத்துக் கொண்டு 'அவுணனுகம் பிளந்ததனால் எம்பெருமானுக்கு வந்த புனிதத் தன்மையின் விவரணம்' என்று ஒரு வியாஸமெழுதினால் எத்தனை பக்கமும் எழுதலாம்; ரஸிக நிபுணர்களின் நெஞ்சைக் கொள்ளைகொள்ளலாம். அதற்கு இவர் இட்டுப் பிறந்தவரல்லரே. அழகிய சிங்கப்பெருமாள் நியமனம் அடியேனுக்குக் கிடைத்தது; ஸகல ஜநபதங்களும் கண்டுகளிக்க ஸம்ஸ்க்ருதத்திலெழுதும்படி கட்டளை கிடைத்ததனால் தந்யோஸ்மியென்று எழுதத் தொடங்குகிறேன். காண்மின், கேண்மின்.

श्रीपराङ्कुशपरकालयतिवरवरवरमुनीन्द्रेभ्यो नमः ।

# श्रीमदहोबिलक्षेत्रानुभवे—नरहरेः परमपावनत्वप्रख्यापनम् ॥

## श्रीकाञ्ची. जगदाचार्यसिंहासनाधीश. – प्रतिवादि भयङ्कर. अण्णङ्गराचार्योपन्यस्तम् ॥

**अहोबिलक्षेत्रनुतिं चिकीर्षता महात्मना श्रीपरकालसूरिणा ।**
**यदाद्यपद्ये नृहरेः पवित्रताभिधानम् एतद्विवृणोमि सन्मुदे ॥**

द्राविडाम्नायदिव्यप्रबन्धवर्गे द्वितीयसहस्रात्मके बृहत्सूक्तनाम्नि श्रीपरकालसूक्तदिव्यप्रबन्धे प्रथमशतके सप्तमं दशकम् * अङ्कणूञालमञ्ज * इत्युपक्रमशालि श्रीमदहोबिलक्षेत्रमङ्गलाशासनपरं प्रथते । तत्र प्रथमगाथायाम क्षेत्राधिपति नरहरिर्भगवान् '**हिरण्यासुरवक्षोविभेदनः पावन**' इति परिकीर्तितः । अत्र मुनीन्द्रविवक्षितं पावनत्वं विव्रियते । यद्यपि भगवतः पावनत्वं श्रुतीतिहासपुराणादिसिद्धम्, विशिष्य च * पावनस्सर्वलोकानां त्वमेव रघुनन्दनेत्यगस्त्यवचनसिद्धं च विराजते ; प्रकृते "हिरण्यासुरवक्षोविभेदनः पावन" इति प्रोक्तत्वात् नरसिंहमूर्तेर्भगवतश्चरित्रेण सिध्यति यत्पावनत्वं तदेव विवरीतुमुत्सहे ॥ अवद्यप्रत्यनीकत्वं पावनत्वम्, अशुद्धिनिरासकत्वं पावनत्वम्, स्वतः परमशुचित्वं पावनत्वम्—इति बहुधा निरूपयितुं शक्यं हि पावनत्वं नाम । एवं सर्वविधमपि पावनत्वं नरहरौ भगवति सुनिरूपम् । स एष भगवान् भक्तस्य दानवशिशोः परिपालनाय खलु नरहरिरूपमास्थाय दैत्यवक्षो व्यदारयत् । एवं च भक्तत्राणे पावनत्वन्, वैरिक्षपणे पावनत्वमिति द्विविधं पावनत्वमिह निरूपयितुमिष्यते । अवद्यप्रत्यनीकत्वरूपपावनत्वं प्राधान्येनोपपाद्यते ॥

१. भक्तत्राणे पावनत्वमित्थम् ; सर्वेश्वरो जगन्निर्वाहाय नानादेववर्गशिरस्सु नानाकार्याणि विन्यास्थत् । विधिशिवपावक दिक्पालक चन्द्रसूर्यादिदेवतावर्गद्वारा हि तानि तानि कार्याणि निर्वहति परमः पुमान् । मोक्षप्रदत्वमेकमेव स्वयं निर्वहन् तदितराणि सर्वाण्यपि कृत्यानि प्रायस्सद्वारकमेव निर्वर्तयतीति शास्त्रमुखतः प्रतिपद्यामहे ; सोऽयं प्रह्लादपरित्राणमपि स्वयमकुर्वन् यदि कमपि देवमन्यमनुप्रविश्य कृतवान् स्यात् तर्हि नूनमवद्याभिभूत एव स्यात् । सद्वारकमकुर्वन् अद्वारकमेव यतः कृतवान् ततस्समभवदवद्यवैदेशिकः । तदेतत्प्राथमिकं पावनत्वम् ॥

२. त्राणं च द्विविधम्—इष्टप्रापणम् अनिष्टनिवारणं चेति । प्रह्लादस्य किमिष्टम्? किमनिष्टम्? इति विचारणीयम् । 'रे अर्भक ! दुर्भग ! त्वयोच्यमानो विष्णुः कुत्रास्ते कथये'त्युक्तवति पितरि * उर्व्यामस्त्युदकेऽस्ति....सत्यसति वा त्वय्यस्ति मय्यस्ति च ॥ सर्वत्रास्ति * इति प्रत्यजानात्प्रह्लादः । एतत्प्रतिज्ञापरिपालनमिष्टम् ; प्रतिज्ञाया वितथीकरणमनिष्टम्—इति तावद्वक्तव्यम् । 'कश्चिदर्भकः पञ्चषवयस्को यत्किमपि कथयति स्म चेत् तत्सत्यापनमवर्जनीयं किमहो मम?' इत्यौदासीन्यमवलम्बितुमर्हत्येव हि भगवान् । ईश्वरो नास्त्येवेति अद्यत्वेऽपि हठवादमारचयन्तस्सन्ति नाम भूयांसो वराकाः । तदिदं किं न जानाति भगवान् । जानात्येव । जानन्नपि सुष्ठु उदासीन एव खलु तिष्ठति । एवमेव तदात्वेऽपि तिष्ठासेच्चेद्धन्त को निरोद्धा? नियोगपर्यनुयोगानर्हतारूपं स्वातन्त्र्यमुद्वहन् स एष भगवान् यदि तथा स्थितस्स्यात् महदेवावद्यमस्य स्यात् । तथाविधस्याप्यवद्यस्य स्वात्मन्यवकाशमप्रयच्छन् अस्पृष्टावद्योऽभवदिति तदिदं द्वितीयं पावनत्वम् ॥

३. रामकृष्णाद्यवतारेषु * ततश्च द्वादशे मासे * इत्याद्युक्तरीत्या गर्भवासमाकलय्य परिपक्वे काले प्रादुरभूद्भगवानिति शृणुमः । एवं नरसिंहोऽपि भगवान् स्थूणागर्भे चिरमुषित्वा दशमे द्वादशे वा मासेऽवतीर्य यदि स्वचिकीर्षितं कर्म कृतवान् स्यात् तदाऽप्यवद्यभागेव भवेदसौ ध्रुवम् । कथमितिचेत् ; प्रह्लादस्य प्रतिज्ञाशरीरम् * सर्वत्रास्तीत्येतावन्मात्रमेव न ; सदैवास्तीत्यपि । देशपरिच्छेदकालपरिच्छेदयोरुभयोरप्यसत्तां प्रतिज्ञातवतो भक्तबालकस्य भगवति देशपरिच्छेदराहित्यवत् कालपरिच्छेदराहित्येनापि सिद्धेन भवितव्यम् । गर्भवासेनावतारकालविलम्बे कृते कालपरिच्छेदराहित्यासिद्धिप्रयुक्तमवद्यमापतेदेव ननु । तथाविधस्याप्यवद्यस्यावकाशमप्रयच्छन्

* समसमयसमुद्भवश्च भक्तगिरः * इति श्रीकूरनाथगुरुवरोक्तरीत्या प्रतिज्ञासमक्षण एव समवातरदिति यत्तदेतत् तृतीयं पावनत्वम् ॥

४. * स हि देवैरुदीर्णस्य रावणस्य वधार्थिभिः । अर्थितो मानुषे लोके जज्ञे विष्णुस्सनातनः ॥* इत्युक्तरीत्या रावणवधार्थमवतीर्णोऽपि रामचन्द्रो न खलु सद्यो रावणं जघान । अष्टात्रिंशे वयसि खलु महता कालव्यवधानेन कार्यमकार्षीत् । एवं वासुदेवोऽपि भगवान् * ततोऽखिलजगत्पद्मबोधायाच्युतभानुना । देवकी-पूर्वसन्ध्यायामाविर्भूतं महात्मना ॥ * इत्युक्तरीत्या कृतावतारोऽपि सन् कंसशिशुपालकौरवादिवधं न सद्यो वितेने । मध्ये महदेव हि कालव्यवधानमभवदधिगतावकाशम् । एवं नरसिंहोऽपि भगवान् सद्योऽवतीर्यापि यदि विलम्बेत कार्यकरणे, तदाऽप्यवद्यसङ्गो भवेदेवास्य । तस्याप्यवकाशमप्रयच्छन् *प्रह्लादप्रतिज्ञाकाल-स्तम्भा-दाविर्भावकाल—दैत्यपतिवक्षःकवाटविदलनकालानां अद्वैतं यद[illegible]त् तदेतत् चतुर्थं पावनत्वम् ॥ कार्षी

५. * रावणस्य वधार्थिभिः * इत्युक्तरीत्या देवा रावणवधं यथा प्रार्थयन्त, न तथा प्रह्लादः प्रार्थयत हिरण्यकशिपोर्वधम् । तथा च * सर्वत्रास्तीति तदीयप्रतिज्ञायाः फलेग्रहित्वसम्पादनमात्रमेव नः कर्तव्य-मिति मन्वानो भगवान् यदि स्तम्भादाविर्भूय स्वसत्ताप्रकाशनमात्रेण कृतकृत्यो बुभूषेत् तदाऽप्यवद्यं प्रसज्येतैव; तस्याप्यवकाशं न प्रादादिति यत्तदिदं पञ्चमं पावनत्वम् ॥

६. महासुरगृहे सन्ति स्थूणा बह्व्यः; यस्यां स्थूणायां यस्मिन् प्रदेशे प्रताडयतिस्म प्रह्लादजनकः तत्रैव प्रादुर्भवनमावश्यकमिति को निर्बन्ध इति मन्यमानेन भगवता यदि स्तम्भादन्यस्मादाविर्भूतवत्ता भूयेत, तर्हि * सर्वत्रास्तीति प्रह्लादकृतायाः प्रतिज्ञायाः शैथिल्यमेव हि संजायेत; ततोऽप्यवद्यं स्वस्य संभवेदेवेति मत्वा तस्या-प्यवकाशमप्रदित्सता भगवता हिरण्यासुरताडनास्पदस्थलविशेषादेव प्रादुर्बभूवे-इति यत्तदिदं षष्ठं पावनत्वम् ॥

७. रामः शौर्यवीर्यपराक्रमादिनिधिरिति प्रथितोऽपि सन् रावणवधे भूरितरान् क्लेशानन्वभूदिति शृणुमः । नागपाशबन्धादिभिः पर्यतप्यत । * अद्य रामस्य रामत्वं पश्यन्तु हरियूथपाः * इति कदाचन कथनेन ततः प्राक् स्वस्मिन् रामत्वविरहमपि सूचितवानभूत् । * अद्य मे मरणं वाऽथ तरणं सागरस्य वेत्यभि-धाय प्रतिशयनभूमिकाभूषितपयोधिपुलिनस्सन् तिस्रो निशा अत्यक्रामयत् । छिन्नप्ररूढ रावणशीर्ष राशिलवने-नानुभूतभूरिपरिश्रमोऽभूत् । * असहायशूरेति क्वचिदुपश्लेकितोऽपि वानरवीरबृन्दैस्ससहायतामेव स्वस्य प्राचीकशत् । अथ वासुदेवोऽपि भगवान् * यद्वै जरासुतभयाद्विपलायथास्त्वमिति श्रीवत्सचिह्नमिश्रोक्तरीत्या शत्रोस्सकाशाच्चकित इव पलायनमपि कृतवान् हन्त ! यदि पुनरेवंविधा आपत्तीः स एष नरहरिर्भगवानप्यासा-दितवानभविष्यत्तर्हि नूनमवद्यभागभविष्यत् । अभिभवलेशमन्तरेण सर्वथा सपदि जैत्रो बभूवायमिति यत्तदेतत् सप्तमं पावनत्वम् ॥

८. * जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्वतः । त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मा मति सोऽर्जुन ! * इति गीतायामवताराध्यायोक्तरीत्या स्वकीयनरसिंहावतार—तच्चरितप्रपञ्चनमुखेन त्रैलोक्यमपि परमपावनमातनोत्यसा-विति यत्तदिदमष्टमं पावनत्वम् ॥

९. * देवानां दानवानां च सामान्यमधिदैवतमिति स्तूयमानस्यास्य भगवतो देववर्गपरिरक्षणम् असुरविनाशनं च अवद्यमेव खल्विति शङ्कितुमप्यवकाशो यथा न स्यात्तथा प्रदीपशलभन्यायेन स एष पापी हिरण्यकशिपुः स्वयमेव विनश्यतिस्म नरसिंहकोपाग्नौ निपत्येति वस्तुस्थितिप्रथनेन यदभूत्तन्नवमं पावनत्वम् ॥ एव-मन्येऽपि भूयांसः पावनत्वप्रकारा स्स्वयमूह्याः प्राज्ञैर्भावुकैः ॥ .... .... .... *

श्लो. काञ्चीवादिभयङ्कर वंशीयाण्णङ्गरार्य संग्रथितम् ।
नरसिंहपावनत्वं कण्ठे दधतश्च पावना भुवने ॥

முன்னேயுள்ள ஸம்ஸ்க்ருத வியாஸத்தின் மொழிபெயர்ப்பு :—

## " ஆளரியாய்ப்போழ்ந்த புனிதனிடம்—சிங்கவேழ்குன்றம் "

**ஸ்ரீமாந் ......சார்ய மஹாத்மா யதலேகீத் தஸ்மிந் ரஸ்ய: கோபீ விசேஷோ ந கிலேதி. ஆமூலாக்ரம் ஸுஷ்டு நிருப்யாம்ருதவாண்யா ஸ்வோக்தாந் அர்த்தாந் த்ராவிட வாண்யா விலிகாமி.**

*அங்கண்ஞாலப்பதிகத்திறுல் சிங்கவேழ்குன்றத்தை மங்களாசாஸனம் செய்தருளாநின்ற திருமங்கையாழ்வார் முதற்பாட்டில் "அவுணன் பொங்கவாகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதன்" என்று நரஸிம்ஹமூர்த்தியை விசேஷித்திருக்கிறுர். **புனிதன்**—பாவனன் என்றபடி. எம்பெருமானுடைய பாவநத்வம் ***பாவநஸ் ஸர்வ லோகாநாம் த்வமேவ ரகுநந்தந!*** இத்யாத்யநேகப்ரமாண ஸித்தம். எனினும் இங்கு **'அவுணனுகம் போழ்ந்த பனிதன்'** என்றதற்குச் சேர நரஸிம்ஹமூர்த்தியின் பாவநத்வத்தை ஒன்பது வகையாக நிரூபிக்கின்றேன். பிறருடைய அவத்யத்தைப் போக்கி, தான் அவத்ய ஸங்கமற்றிருக்கை பாவநத்வமாகும். இதை நரஸிம்ஹமூர்த்தியின் திவ்ய சரித்திர விசேஷங்களைக் கொண்டே உபபாதித்துக் காட்டுகிறேன்.

1. எம்பெருமான் தன்னுடைய விஸ்தீர்ணமான விபூதியை நிர்வஹிப்பதற்காகப் பலபல தேவர்களின் தலையில் பலபல காரியங்களை வைத்தருளினுன். விதி சிவ பாவக-திக்பாலக - சந்த்ர ஸூர்யாதிகள் மூலமாக அவ்வோகாரியங்களை நிர்வஹித்து வருகிறுன். மோக்ஷ ப்ரதத்வமொன்றை மட்டும் தன் பொறுப்பாக வைத்துக் கொண்டு மற்ற காரியங்களைப் பெரும்பாலும் ஸத்வாரகமாகவே நிர்வஹித்து வருகிறுனென்று நூற்கள் கூறுகின்றன. இங்ஙனே செய்து போருகிற பெருமான் ப்ரஹ்லாத ரக்ஷணத்தையும் ஸத்வாரகமாகவே செய்திருந்தானுகில் அவத்யமே யாகும். அத்வாரகமாகவே [ஸாக்ஷாத்தாகவே] செய்தருளினனுதலால் அவத்ய வைதேசிகனுயினன். இது முதன்மையான பாவநத்வம்.

2. 'பயலே! நீ சொல்லுகிற விஷ்ணு எங்கிருக்கிறுன்?' என்று இரணியன் கேட்க, எங்குமுளனென்றுன் சிறுக்கன். பிறகு தூணைத்தட்டினுனிரணியன். எம்பெருமான் "ஒரு சிறுபயல் சொன்னவார்த்தையை மெய்ப்பிக்கவேணுமென்று நமக்கு என்ன நிர்ப்பந்தம்? என்று வாளாவிருந்து விடலாம். இற்றைக்கும் நாளைக்கும் பல்லாயிரமிடங்களில் பல்லாயிரவர் 'ஈச்வரோ நாஸ்தி' யென்று அட்டஹாஸங்கள் செய்துகொண்டு தானே யிருக்கிறுர்கள். அவற்றைப் பொருள்படுத்தாமலேயிருக்கின்ற ஸர்வேச்வரன் ப்ரஹ்லாத ப்ரதிஜ்ஞையையும் பொருள் படுத்தாமலே யிருந்தால் கேட்பாரார்? அங்ஙனேயிருந்தால் அவத்யமேயாகுமன்றே. அதற்கு இடமளிக்காதது இரண்டாவது பாவநத்வம்.

3. ஸ்ரீ ராமக்ருஷ்ணுதியவதாரங்களில் *ததச் ச த்வாதசே மாஸே* என்றும் *பன்னிருதிங்கள் வயிற்றில் கொண்ட* என்றும் சொல்லுகிறபடியே கர்ப்பவாஸம் செய்து

பிறந்தருளினது போல நரஸிம்ஹமூர்த்தியும் ஸ்தம்பத்தில் கர்ப்பவாஸம் செய்து பத்து மாதங்கள் கழித்துத் தோன்றினனாகில் அப்போதும் அவத்யசாலியே யாவன். (எங்ஙனே யெனில்) எங்குமுளன் என்பது மட்டுமன்று ப்ரஹ்லாத ப்ரதிஜ்ஞை; எப்போதுமுளன் என்பதுமாகையால் அது வ்யபிசரித்ததாகுமே. அந்த அவத்யத்திற்கும் இடமளிக்காமல் அப்பொழுதே தோன்றியது மூன்றாவதான பாவநத்வம்.

4. *ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:.* என்கிறபடியே பெருமாள் ராவணவதார்த்தமாகத் திருவவதரித்தும் முப்பத்தெட்டாவது பிராயத்திலன்றே ராவணவதம் செய்தருளிற்று. *வேண்டித் தேவரிரக்க வந்து பிறந்ததும்* (திருவாய்மொழி 6-4-5.) என்கிறபடியே கம்ஸசிசுபாலாதிவதார்த்தமாக வேண்டப்பட்டு வந்து பிறந்த கண்ணபிரானும் இடையில் வெகுகாலம் கடத்தியே காரியம் செய்தருளினன். நரஸிம்ஹமூர்த்தியும் தூணைத்தட்டின வுடனே தோன்றிவிட்டு இங்ஙனே விளம்பித்துச் செய்தால் அவத்யந்தானேயாகும். அதற்கும் இடமளிக்காமல், ப்ரஹ்லாதன் ப்ரதிஜ்ஞை பண்ணினது, தூணினின்றும் தோன்றினது, இரணியனகல்மார்வம் கீண்டது ஆகிய இவை யெல்லாம் ஏககாலத்திலானது நான்காவது பாவநத்வம்.

5. தேவர்கள் ***ராவணஸ்ய வதார்த்திபி:*** என்கிறபடியே இராவணவதத்தைக் கோரினதுபோல ப்ரஹ்லாதாழ்வான் இரணியன் வதத்தைக் கோராமையினாலே "எங்குமுளன் என்ற ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றுதல் மாத்திரமே நமக்குப்பணி" யென்று நினைத்து நரசிங்கமூர்த்தி தோன்றினவுடனே மறைந்திருக்கலாமே. அப்படி மறைந்திருந்தால் அதுவும் அவத்யமாம்; அதற்கும் இடமளிக்காமே அவனைமாய்த்தொழித்து மறைந்தது ஐந்தாவது பாவநத்வம்.

6. இரணியன் மாளிகையில் பல தூண்களுமுண்டே; ஏதேனுமொரு தூணில் தோன்றியும் காரியம் செய்யலாமே. அவன் புடைத்த தூணிலேயே புடைத்த விடத்திலேயே தோன்றவேணுமென்று என்ன நிர்ப்பந்தம்? என்று நினைத்திருந்தால் *எங்குமுளனென்ற ப்ரஹ்லாத ப்ரதிஜ்ஞை சிதிலமாகி அவத்யம் நேர்ந்திருக்குமே; அதற்கு மிடமளிக்காதது ஆறாவது பாவநத்வம்.

7. இராமபிரான் சௌர்ய வீர்ய பராக்ரம நிதியாயிருக்கச் செய்தேயும் ராவண வதத்தில் பல கிலேசங்களையடைந்ததாக வறிகிறோம். விபீடணன் வார்த்தையைக் கேட்டுக் கடற்கரையிலே மூன்றுநாள் தரைக்கிடை கிடந்தது, நாகபாசத்தால் கட்டுண்டு கிடந்தது, அறுக்கவறுக்க முளைத்தெழுகின்ற அரக்கன்தலைகளை யறுக்கப் பாடுபட்டது. *அஸஹாய சூரனென்று ஓரிடத்தில் பேர் பெற்றும் குரக்கினப் படைகொடு காரியம் செய்ததனாலே ஸஸஹாயனானது இங்ஙனே பல. கண்ணபிரானும் "ஜராஸந்தபயாத் விபலாயதாஸ் த்வம்" என்று ஆழ்வானருளிச் செய்யும்படி பகைவனுக்கு அஞ்சினவன் போல ஓடியொளித்தமையுண்டே. இத்தகைய ஆபத்திகளுக்கு நரஸிம்ஹ பகவான் தன் பாலிடமளிக்காதது ஏழாவது பாவநத்வம்.

8. *ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:, த்யக்த்வா தேஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந!* என்று கீதையில் அவதாராத்யாயத்தில் பணித்த

படி தன் திருவவதாரத்தையும் சரிதையையும் எங்கும் பரவ வைத்து மூவுலகங்களையும் பரிசுத்தமாக்குகிறானென்பது எட்டாவது பாவநத்வம்.

9. "தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்" என்று தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பொதுவான தெய்வமாகக் குலாவப் படுகிற எம்பெருமான் *அமரர்க்கு இடர்கெட அசுரர்க்கு இடர் செய்வது அவத்யமன்றோ வென்று சங்கிக்க இடமறும்படி விளக்கிலே விட்டில்விழுந்து மடியுமாபோலவும், கழுத்திலே கல்லைக் கட்டிக்கொண்டு குளத்திலே விழுந்து மடியுமாபோலவும் இரணியன் தானே நரசிங்கனுடைய சீற்றத்தீயில் விழுந்து மடிந்தனனென்கிற வஸ்து ஸ்திதியினால் தேறுமது ஒன்பதாவது பாவநத்வம். இங்ஙனே மற்றும் பலபடிகள் ஊஹித்துணர்க.

**ஈத்ர்சாந் ரஸிகபோக்ய மஹார்த்தாந் லேகிதும் ஸ விபுதோ நஹி ஜஜ்ஞே.**
**ச்வேதபத்ரநிசயம் சிதிவர்ணவ்யாகுலம் கலயிதும் ய இஹோரதைத்.**

---

**மதுராந்தக வீரராகவாஹ்வய வித்வத்கலிதே விலேகநே.**
**கலயேய விமர்சநம் மநாக் ஹிதபுத்த்யா, ஹிதமேவ வஸ்துத:.**

இவருக்கடுத்த வித்வான் "**ஸ்ரீ அஹோபிலமும் அழகிய சிங்கரும்**" என மகுடமிட்டு ஒரு வியாஸ மெழுதியுள்ளார். முதலில் அஹோபிலத்தின் பெருமையைச் சுருங்க வெழுதி "இத்தகைய ஸபலம் பெற்றிருக்கச் செய்கிற இச்சிங்கவேழ் குன்றத்திற்கு' என்றெழுதிப் போருகிறார். இத்தகைய ஸபல மென்பது யாதோ அறியோம். "ஸபலம் பெற்று — பெற்றிருக்க — இருக்கச்செய்கிற" என்னுமிந்த விரிவுக்கு என்ன பொருள்? எங்கே அந்வயம்? ஒன்றுமறிகின்றிலோம். சொல்வடிவம் ஸபலமா? சபலமா? சம்பளமா? எதுவும் நிர்ணயிக்கப் போகிறதில்லை. பெற்றிருப்பது யாது? பெற்றிருக்கச் செய்வது யாது? அவரையே கேட்டுணரவேண்டும் போலும். இது நிற்க. நூதன நிர்மாணம் பெற்ற திருக்கோபுரம் நம் அழகிய சிங்கருடைய வன்மையே வடிவெடுத்தாற்போலிருப்பதாக ஒரு உல்லேகம் காட்டுகிறார். வன்மையாவது காடிந்யம். அது கோபுரத்திலுள்ளது வாஸ்தவம். அது அழகிய சிங்கரிடத்தில் எப்படியிடம்பெற்றதென்று தெரியவில்லை. பெரியாழ்வார் "வன்மையாவதுன் கோயிலில் வாழும் வைட்டணவனென்னும் வன்மை கண்டாயே" என்கிற பாசுரத்தில் **வன்மை**யென்று இருமுறை பாடியுள்ளார். அந்த வன்மை அழகிய சிங்கர் பக்கலிலே பொருந்தும். அது திருக்கோபுரத்திற்கு எங்ஙனம் பொருந்துகிறதோ தெரியவில்லை. கோயிலில் வாழ்வதே வன்மையாகச் சொல்லப்படுகையாலே கோபுரமும் கோ[illegible]லில் வாழ்கிறபடியால் ஏன் பொருந்தாதென்று ஒருவர் கேட்டார். சிலேடை நன்றே யென்று சொல்லி நின்றேன். "அழகிய சிங்கரின் ஔதார்ய குணமும் திருக்கோபுரமாய்த் திகழ்கின்றது" என்று மேலே யெழுதுகிறார். அது அர்த்தமாகிறது. முன்னம் சொன்ன வன்மைதான் விளங்கவில்லை.

ஆளவந்தாரை ஈசாண்டானென்றும் அழகப்பிரானென்றும் ஸுப்ரஸித்தராகக் குறிப்பிடுகிறார். இது அபூர்வ ச்ரவணமாயிரா நின்றது. "ஈசாண்டானென்றும் அழகப் பிரானென்றும் ஸுப்ரஸித்தரான ஆளவந்தார் திருவடிகளில்" என்பது இவருடைய பங்க்தி. ஸுப்ரஸித்தரானவென்பது ஆளவந்தாரிடத்துத் தவிர வேறிடத்து அந்வயிக்க

ஔசித்ய மிருப்பதாகத் தெரியவில்லை. வ்யவஹிதரான ஸூந்தராசாரியரிடத்தில் அந்வயிக்க வேணுமானால் 'ஸூப்ரஸித்தராய்' என்றிருக்க வேணும். இவ்விடத்தில் "**ஸவிஸ்தார மாகக் காணலாம்**" என்றெழுதுகிறார். முடிவிலும் "ஸவிஸ்தாரமாக விரிவாகவுள்ளன" என்றெழுதுகிறார். சாஸ்த்ரஜ்ஞர்கள் கையில் இப்படியும் எழுதவருமா? ஸம்ஸ்க்ருதத்தில் ஸமாஜம் – ஸமஜம்; விஸ்தாரம் - விஸ்தரம் என்றுண்டு. பசுக்களின் கூட்டத்தைச் சொல்லவேண்டும் போது ஸமஜ மென்பது. மனிதர்களின் கூட்டத்தைச் சொல்லும் போது ஸமாஜ மென்பது. சப்தத்திலுள்ள விரிவைச் சொல்லும்போது விஸ்தரமென்பது. அகலத்தைச் சொல்லும்போது விஸ்தாரமென்பது. என்று நிபந்தனை செய்யப்பட்டிரா நின்றது. "விஸ்தாரோ விக்ரஹோ வ்யாஸ: ஸ ச சப்தஸ்ய விஸ்தர:" என்பது அமர கோசம். விஸ்தாரமென்றேயெழுதட்டும். விஸ்தாரமாகக் காணலாமென்றால் போதாதா? "**விஸ்தரேணோக்தம்; விஸ்தரோ த்ரஷ்டவ்ய:**" என்று வாசித்ததில்லையோ இவர்?

சாமானியர்கள் எழுதுவதில் (ஷை) இப்படியொரு குறியிடுவதுண்டு. இதை மேற்படி யென்று வாசிப்பர்கள். இவ்வழக்கு ஏதேனுமொரு க்ரந்தத்திலாவது கண்ட துண்டா? பாமரக்ராம்ய புத்தகங்களிலுங்கண்டதில்லை. பூர்வோக்தஸ்ய புநர்க்ரஹணம் பண்ணவேண்டுமிடத்தில் தச்சப்த ப்ரயோகம் அதிலகுவானது. "ஈசாண்டான் மங்களா சாஸன சுலோகங்கள் ஷை யார் திருவம்சஸ்தரான அடியோங்கள்" என்கிறார். 'அவர் திருவம்சஸ்தரான' என்பதிற்காட்டிலும் (ஷையார்) என்பதில் என்னலாகவம் கண்டாரோ? கௌரவப்ரதி கோடியான லாகவத்தைப் பெறுகிறாரத்தனை.

விலைமதிக்க முடியாத வொரு மஹார்த்தம் ஸாதிக்கிறார். "அங்கண்ஞாலமஞ்ச அங்கோராளரி" என்பதில் (ஞாலமஞ்ச) என்பதைத் தள்ளிவிட்டு "அம்கண் அம் கோர ஆளரி" என்று கொள்வதாம். (அம் கண்) என்பது ஆளரிக்கு அடைமொழியாம் (விசேஷணமாம்); அழகிய திருக்கண்களையுடையவராம். அதற்குமேல் அம் - கோர— ஆளரியாம். கோரமான நரஹரியாம். ***ஸூடநபும்ஸகஸ்ய*** என்றொரு வியாகரண ஸூத்ரம். இதற்கு (ஸூட் அநபும்ஸகஸ்ய) என்று பதவிபாகம். ஒரு பெரிய வித்வான் "நபும் ஸகஸ்ய ஜந்ம ஸூட" = நபும்ஸகன் பிறப்பைச் சுடவேணுமென்று பொருள் கூறினர். இங்கு (ஜன்ம) என்கிறபதம் இல்லையே யென்றார் சிஷ்யர். "ஸூத்ரேஷு அத்ருஷ்டம் பதம் ஸூத்ராந்தராத் அநுவர்த்தநீயம்" என்று வையாகரண ஸித்தாந்த மாகையாலே ***ஜந்மாத்யஸ்ய யத:*** என்கிற ஸூத்ரத்திலிருந்து (ஜந்ம) என்பதை யெடுத்துக் கொள்வதில் என்ன பாதகம்? என்று தடதடவென்று சொல்லிவிட்டார் ஆசார்யர். இவருடைய புத்தி எவ்வளவு கூர்மை! என்று மெச்சினர் சிஷ்யர். அஹோபிலப் பாசுரத்தில் "ஆனைக்கொம்புகொண்டு பத்திமையால்" என்றிருக்கிறதாம்; [illegible] ம்பு **கொண்டு** என்பதனால் த்ரிதண்டத்தைக் கொண்டு என்கிற அர்த்தம் ஸூசிதமாகிறதாம். அண்ணாத்துறை சாஸ்த்ரியள் ஸ்ரீ ராமாயண ப்ரவசனமாரம்பித்தார்; "கோந்வஸ்மிந்" என்று ஆரம்பம். (கோ) என்று ஆரம்பித்தபடியால் ராமாயண கதையெல்லாம் கோண லென்று ஸ்பஷ்டமாகக் காட்டப் படுகிறது. பிறந்த குழந்தையை விட்டுப்பிரியாமல் கூடி வாழவேணுமென்றாசைப் பட்டார் தசரதர்; ஒரு முனிவந்து எதையோ சொல்லி ஏமாத்திக் கொண்டுபோய்விட்டான். இதுவொரு கோணல். முடிசூட்டி யனுபவிக்க வேணுமென்று பாரித்தார் பிரபு. கைகேயி காட்டுக்கு ஓட்டினாள். இதுவொரு கோணல்.



காட்டிலாவது சுகமாக வாழலா மென்று பார்த்தான் ராமசந்திரன்: ராவணன் கவர்ந்துகொண்டு போனுன் ஜானகியை; இதுவொரு கோணல். ராவணவதம் பண்ணி ஜானகியைக் கொண்டுங்கூட அக்நி தக்தம் பண்ணினுன். இதுவொரு கோணல். கனவேகமாக அயோத்திக்குப் புறப்பட்டும் சோறுகண்டவிடம் ஸ்வர்க்கலோகமென்று பரத்வாஜருடைய ஸாப்பாட்டுக்கு உட்கார்ந்தான். இதுவொரு கோணல். இத்தனை கோணல்களையும் காட்டவே வான்மீகி (கோ) என்று ஆரம்பித்தார். என்று கையாட்டிக் காலாட்டி அட்டஹாஸம் செய்கிறுர் சாஸ்த்ரி. அதெல்லாம் இவருடைய சோர ஆளரி வியாக்கியானத்திற்கு ஏகதேசம் காணுது. மற்ருெரு வித்வான்ஸ்வாமி பெரியாழ்வாருடைய *நாவகாரியப் பதிகத்திலிருந்து பவிஷ்யத் வ்ருத்தாந்த கீர்த்தனத்தை வெகு ரஸமாகவும் மிகவழகாகவும் எடுத்துக் காட்டுகிறுர். அந்த பதிகத்தில் முதற் பாட்டில் நான்கு பாதங்களிலும் கார் கார் கார் கார் என வருதலால் கார் யாத்திரையுமுண்டென்பது ஸுஸ்பஷ்டமாகக் காட்டப்படுவதால் இதைவிட வேறு ஆச்சரியம் என்னவேணும்! என்று இதையும் கூட்டியெழுதியிருக்கலாம். இப்படி அத்புதமாயும் அக்லிஷ்டமாயும் விசேஷார்த்தங்களைத் தோண்டித் தோண்டியோ நோண்டி நோண்டியோ தெரிவிக்க வல்ல மஹான்கள் எழுந்தருளியிருக்கையில் என்ன குறை? ... ❋

**அபரதேசிகநாம வஹந் மஹாந் யதலிகத் சிரஸம்ஸ்துதரீதித:**
**ததபி ஹந்த! விமர்சநமர்ஹதி ப்ரணயமேதுரஹ்ருத் விம்ருசாமி தத்.**

இந்த மஹான் எழுதுவது '**சிரஸம்ஸ்துதரீதித:**' என்றேன். சிரபரிசிதமான ரீதியில் எழுதியிருப்பதாகத் தெரிவித்தேன். அந்த ரீதியாவது யாது? என்று பலருமறிய விரும்பக் கூடுமோ? ஒருவருமறிய விரும்பார். யாவரும் என்னைவிட அதிகமறிந்தவர்களே யாதலால். "அரக்கவரசன்" "முழுதிர்யக்கு" என்றிப்படிப்பட்ட அத்புத ஸூக்தி விந்யாஸங்கள் வேறு எவருடைய வியாஸத்திலும் காணக்கிடைக்காதவை யன்றோ. திருவரங்கம் பெரியபெருமாள் ஆழ்வார்களெல்லோராலும் மங்களாசாஸனம் செய்யப் பெற்ற பெருமைவாய்ந்தவர் என்றெழுதிவிட்டு உடனே "இதனால் பேரருளாளனுக்கு ஆழ்வார்களின் மங்களாசாஸனமில்லையென்று சொன்னதாக நினைக்கவேண்டா" என்கிறார். இந்த நிஷேதத்திற்கு என்ன ப்ரஸக்தியிங்கு? "ப்ரஸக்தஸ்யைவ ஹி ப்ரதிஷேத:" "ந ஹி அப்ரஸக்தம் ப்ரதிஷித்த்யதே" என்றறியாரா இவர்? 'பெரியபெருமாளுக்கு ஆழ்வார் பாடலுண்டு' என்றிவ்வளவே யெழுதியிருந்தால் மேல் வாக்கியத்திற்கு உத்திதியுண்டு. "ஆழ்வார்கள் பதின்மராலும் பாடப்பட்டவர் பெரியபெருமாள்" என்றெழுதியான பின்பு 'அந்தப்பெருமை பேரருளாளனுக்கு இல்லையென்று சொன்னதாக நினைக்க வேண்டா' என்றால் ஒருவாறு பொருந்தும். என்றாலும் இது அசட்டுவார்த்தையேயாகும். இதற்கு மேற்பட்டதொன்று கேளீர். *அங்கண்ஞாலப் பதிகத்திலிருந்து ஒவ்வொரு பாட்டிலும் பின்னடிகளில் பேசப்பட்டிருப்பவற்றை [பயங்கரத்தன்மைகளை] அசடு பிசடாகவெழுதி "இப்படி சொல்வதினின்று ஆழ்வார் சிங்கவேள் குன்றத்தைப் புகழ் கின்றாரா? அல்லது பழிக்கின்றாரா? என்று நினைக்கலாம்" என்று தமக்கிருந்த நினைவை வெளியிட்டுவிட்டார். புகழ்வதாக முடிவு செய்தாரா? பழிப்பதாக முடிவு செய்தாரா? என்று பார்க்கவேணும். ஒவ்வொருவரும் பார்க்கலாம். "காடுபாய்ந்த உபந்யாஸம்" என்பார்களே, அதைத்தான் பார்க்க முடியும். "பொல்லாத சிங்கங்கள் ஸஞ்சரிக்குமிட மென்று" இப்பதிகத்தில் ஆழ்வார் ஸாதித்திருப்பதாக எழுதுகிறார். இங்ஙனே சொல்லி யிருப்பது ஒருபாட்டிலுங்கிடையாது. சிங்கங்களின் பக்தி பரீவாஹரூபமான கார்ய விசேஷத்தை முதற்பாட்டிலும் முடிவு பாட்டிலும் ஆழ்வார் ஸாதித்திருக்கிறாரேயொழிய வேறில்லை. இதற்குமேல் இவர் என்ன அருள்வரென்றால், 'இத்தலத்தில் சிங்கங்களுண்டு' என்பது ஆழ்வார் பாசுரத்தால் தேறிவிட்டதன்றோ; சிங்கம் பொல்லாதவையென்று ஆழ்வார் சொல்லாவிட்டாலும் அவை பொல்லாதவையாயில்லாமல் வேறு எப்படியிருக்க முடியும்? அவை அங்கேயிருந்தால் தெருக்களில் ஸஞ்சாரம் பண்ணுமலிருக்குமா' என்றிவையெல்லாமருள்வர். அருள்வரோ மருள்வரோ அறியோம். வதரியில் பிரிதியைப் பாடுகின்ற இவ்வாழ்வார் "பிலங்கொள்வாளெயிற்றரியவைதிரிதரு" என்று சிங்கங்களின் பொல்லாங்கையும் திரிதலையும் சொல்லியிருக்கிறாரேயொழிய இங்கு அந்தப் பேச்சு இல்லை.

[**இயம் ஸீதா**] இவள் ஸீதையேயொழிய கண்ணாலம் பார்க்க வந்திருக்கிற பெண்டுகளெல் லாம் ஸீதையல்ல. அதோபார் அவளுக்கு மாண்டவியென்று பெயரேயொழிய ஸீதை யென்று பெயர் கிடையாது. இதோபார் இவளுக்கு ச்ருதகீர்த்தியென்று பெயரேயொழிய ஸீதையென்று பெயர் கிடையாது. இங்கே பார், இவளுக்கு ஊர்மிளையென்று பெயரே யொழிய ஸீதையென்று பெயரில்லை. [மமஸுதா] (ஸுதா மம) என்னாதே (மம ஸுதா)

என்றதில் ரொம்ப விசேஷமுண்டு. அதாவது என்னுடைய பெண் என்று சொல்லுவதுண்டே யொழிய, பெண் என்னுடையவள் என்று சொல்லுவதில்லையே. அப்படி சொல்லக்கூடா தென்பதை ஜனகர் இங்கே சிக்ஷிக்கிறார். ஜனகர் என்று என்ன? வால்மீகியும் இதில் சேர்ந்தவர்தான். இந்த விசேஷார்த்தம் பல பேர்களுக்குத் தெரியாது. சொன்னாலும் கிரஹிக்கத் தெரியாது.

......இத்யாதி காலக்ஷேபங்களிவை.

**தசோபநிஷத் க்ரமம்** என்று ஒன்று எழுதுகிறார். ப்ரஹ்மகாண்டமிருக்கட்டும் கர்மகாண்டத்தில் ஒரு க்ரமம் வந்திருக்கிறது. ப்ராசீநமாக வந்திருக்கிற க்ரமமென்று கைகூப்பலாமே தவிர உள்ளிழிந்து விசாரம் செய்யலாகாது. மந்த்ரங்களையோ ருக்குக்களையோ முன்னே ஓதி, பின்னே அவற்றையெடுத்து **(இத்யாஹ)** என்பது ஒருக்ரமம். ***பூமிர்பூம்நா த்யௌர் வரிணா*** இதை முன்னே ஓதி, இதற்கு (இத்யாஹ) பின்னே யோதியிருப்பதைக் காண்க. இங்ஙனே பலவுங்காணலாம். இதற்கு நேர்மாறு பாடாகவும் காண்கிறது. ஸ்வல்பமே காட்டுகிறேன். மூன்றாவது அஷ்டகத்தின் ஐந்தாவது ப்ரச்நத்தில் ***அக்நே மஹாந் அஸி ப்ராஹ்மண பாரத*** இத்யாதிகள் ஓதப்படுகின்றன. இவற்றுக்கு (இத்யாஹ) எங்கிருக்கிறது தெரியுமோ? இரண்டாவது காண்டத்தில் (5ல்) ஆய்விட்டது. எது முன்னே? எது பின்னே? என்பதை யாரே அறுதியிடவல்லார்?

"ஈச கேந கட ப்ரச்ந முண்ட மாண்டூக்ய தித்திரி" என்றொன்றை யெடுத்து "ஈசாகேநகட" என்று பாடம் திருத்தத் தேடுகிறார். ஈட் சப்தத்தின் த்ருதீயைகவசனம் **(ஈசா)** இது தவிர (ஈச) என்கிற பதவிபாகமுமிருப்பதாக எழுதுகிறார். **(ஈசா) என்றுதான்** பதபாடமென்கிறார். இருந்தாலென்ன? பட்டர் ***அவித்யாதோ தேவே*** **என்றருளிய** சுலோகம் ரஹஸ்யத்ரய ஸாரத்திலும் கையாளப்பட்டுள்ளது. இதில் **(ஜிதந்தாஹ்வயமநோ:)** என்றுள்ளது. (ஜிதம்தே) என்றிருக்கின்றதேயன்றி **(ஜிதந்தா) என்று எங்கிருக்கிறது.** உபயாமக்ருஹீத: என்கிற பதம் வேதத்தில் பலநூறு தடவை **வருகிறது. எங்கும்** அவக்ரஹமுள்ள ஸமஸ்தபதமிது. ரங்கராமாநுஜஸ்வாமி (உபயாம) **என்று பிரித்து** லோடுத்தமபஹுவசனமாக வைத்து பாஷ்யம் செய்கிறார். அந்த இடத்திற்குப் பதபாட முள்ளதா? என்று கேட்பதுமுண்டோ? "ஈசகேந" இருந்தாலென்ன? **(ஈசாகேந)** இருந்தாலென்ன? **காகதந்த பரீக்ஷையோடொக்குமிது.**

**இத்தம் சுஷ்கவிசாரைராபூர்யத புஸ்தகத்வயம் ப்ரக்ருதம்.**
**ஸ்தாலீபுலாகநீத்யா தர்சிதம் ப்ராதர்சி ஸுஸ்புடம் நிபுணை.**

# ஒரகடம் ஸுதர்சநாசாரியர்

உலகுக்குச் சொல்லுகிறேன். ***அங்கண்ஞாலமஞ்ச*** என்கிற அஹோபிலப் பதிகத் திற்குப் பூர்த்தியாக உரையொன்று கோபுரக் குறியிட்ட நினைவு மலரில் வெளியிடப் பட்டுள்ளன. அதை யெழுதியவர் ஒரகடம் ஸுதர்சநாசாரியர், வைகுண்டவாஸி - என்று முள்ளது. சென்னைப் பிராந்தத்தில் ஒரு பள்ளியில் தமிழாசிரியராக இருந்து நெடுநாளைக்கு முன்னே பரமபதித்தவரிவர். "**ஸ ராஜ்யம் குருண தத்தம்**" என்கிற ரகுவம்ச ச்லோகத்தை (ராஜ்யம் ஸ குருண தத்தம்) என்றோ (தத்தம் ஸ குருண ராஜ்யம்)



என்றோ, (குருணா தத்தராஜ்யம் ஸ:) என்றோ [ஸ தத்தம் குருணா ராஜ்யம்] என்றோ உருமாற்ற முடியுமென்பதை அனைவருமறிவர். இவ்வண்ணமாக, அடியேனுடைய திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகையென்னும் [உலகம் பரவியுள்ள] வியாக்கியானத்தை சொல் வடிவத்திலும் பொருள் வகையிலும் சில விடங்களில் சிறுபான்மை மாற்றியும், சில விடங்களில் பெரும்பான்மை மாற்றியும் என்றைக்கோ மறைந்து போனவர் பெயரால் வெளியிட்டிருக்கிறது. "இப்போது யாரும் மாற்றவில்லை, அவரே மாற்றியிருக்கலாம்" என்றும் சொல்லக் கூடும். இப்பதிகத்திற்கு உரையெழுதி உடகரிக்கக் கூடியவர் இக்காலத்தில் ஒருவரில்லையா? இதில் முக்கியமான விஷயமொன்று;—

மாம்பலம். மஹர்ஷி. வாஸுதேவா சார்ய ஸ்வாமியெழுந்தருளியிருந்த காலத்தில் அந்த ஸ்வாமியை *அஞ்சண்ஞாலப் பதிகத்திற்கு உரையெழுதி வேதாந்த தீபிகையில் வெளியிடும்படி சிலர் வேண்டினராம். அவர் அது செய்தாரோ இல்லையோ அறியோம். இப்பதிகத்தின் திவ்யார்த்த தீபிகையை ஆராய்ந்து "மலைத்த செல் சாத்து" என்றவிடத்திலும் "சில்லிசில்லென்றொல்லறாத" என்ற விடத்திலும் அடியேன் காட்டியிருந்த ஸம்ஸ்க்ருத பாஷா விகார விவரணங்களை யெடுத்துக் காட்டி "ஸார்த்த: என்கிற வடசொல் சாத்தெனத் திரிந்தது; ஜில்லிகா என்ற வடசொல் சில்லியெனத் திரிந்தது—என்றிப்படி அருமையான விவரணங்கள் காட்டவல்லவர் கடல் சூழ்ந்த மண்ணுலகில் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி தவிர வேறொருவர் நபூதோ நபவிஷ்யதி" என்றெழுதி வேதாந்த தீபிகையில் வெளியிட்டுள்ளார். முப்பது வருடங்களுக்கு மேலாயிற்று. இத்தகைய விவரணங்கள் மறைந்துபோன ஒரகடம் ஸுதர்சனா சாரியர் பெயரால்தான் வெளியிடத் தகுமென்று நல்ல வழி கண்டார்கள். ❉

—•—

# "பிரபந்தஸாரம்" பற்றிப் பதினெட்டு.

1. லக்ஷ்மீந்ருஸிம்ஹ மூர்த்தியின் அடையாளங்கொண்ட ஸம்ப்ரோக்ஷண மலர்ப்புத்தகத்தில் "பிரபந்த ஸாரம்" என மகுடமிட்ட வியாஸமொன்று இரண்டு பக்கமுள்ளது காண்கிறது. இதை யெழுதியவர் இன்னரென்று காட்டப்பட வில்லை. "அழகியசிங்கர் திருவடிவாரத்தில் ஆவணிஹஸ்தத்திருநாளில் சிறியேனுல் ஸமர்ப்பிக்கப் பெற்றது" என்றிவ்வளவே முடிவில் காண்கிறது. ஆனல் இது புதிய வியாஸமன்று. ஏற்கெனவே பலகால் வெளிவந்ததும் ப்ரதிக்ஷிப்தமுமானதே. இந்த வியாஸம் லோகாபிராமமான அடைவில் அமைந்திருந்தால் அழகியதே. இடையில் "இப்பிரபந்த சாரம் தேசிகனருளியதன்றென்றும் புதிதாய்க் கற்பிதமென்றும் ஒரு கொள்கை ஸமீபகாலத்தில் எங்கோ எழுந்தது" என்று எழுதப்பட்டுள்ளது. அந்தக்கொள்கையை வெளியிட்டவன் அடியேனே யென்பதை உலகமறிந்தேயுளது. ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையின் 205 லக்கமுள்ள இதழ் இப்போது வெளிவருமது. 132 லக்கமுள்ள இதழில் [1959 டிஸம்பர்மீ விகாரிஸு மார்கழிமீ வெளிவந்ததில்] ப்ரபந்த ஸாரதத்வஸாரம் என்கிற அடியேனுடைய நூல் 56 பக்கங்களும் 120 விஷய விபாகங்களுங் கொண்டதாய் வெளிவந்துள்ளது.

2. மத்யஸ்தநிலையில் மனத்தைநிறுத்தி ஆழ்ந்துஆராய்ந்து மனச்சாட்சியை மீருமல் அபிப்ராயம் தெரிவிக்கவல்ல அறிஞர்கள் எக்காலத்திலு முண்டே. "ஸ்ரீமான் ரிடைர்ட் டிப்டி கலெக்டர் ராவ் ஸாஹிப் S. ராகவையங்கார் ஸ்வாமி" என்று ப்ரஸித்தரான மஹாபுருஷர் இக்காலத்தில் விளங்கும் பேரறிஞர் என்பதை யாரும் மறுக்கமாட்டார். அந்த மஹான் வெகு காலம் நீதிபதியாக இருந்ததனல் நீதி நெறி வழுவாது நடு நிலையில் நின்று ஆராய்ச்சி செய்து நிர்தாக்ஷிண்ய மாக ஸ்வாபிப்ராயத்தை வெளியிடுவதில் ஆர்ஜவ முள்ளவராதலால் அடியேனெழுதிய பிரபந்த ஸாரதத்வ ஸாரத்தை அச்சிடும் முன் அவர்க்கு அனுப்பி அபிப்ராயம் தெரிவிக்கக் கோரியிருந்தேன். அந்த ஸ்வாமி ஆர அமரக் கடாக்ஷித்துத் தெரிவித்திருந்த அபிப்ராயமும், மற்றும் பல அட்வொகேட்டுகளின் அபிப்ராயங்களும் அதிலேயே முன்னுரையில் வெளிவந்துள்ளன. ஆனல் அதனலேயே நம்முடைய நூல் வெற்றி பெற்று விட்ட தென்று நினைக்கும் மூர்க்கனல்லேனடியேன்.

3. ஈஷத்தும் மறுப்புரைக்க வொண்ணுத - மறுப்புரைக்க நெஞ்சிலும் நினைக்க முடியாத விஷயங்களையன்றே அடியேன் எழுதுவது வழக்கம். இவ்வுண்மையை யறிந்து வெளியிட்டவர்களில் ஸ்ரீமத் D. R. அவர்கள் தலைவர் என்பதை அடியேன் எத்தனை தடவை வெளியிட்டாலும் மிகை யாகாது. ப்ரக்ருத விஷயத்தில் மறுக்கமுடியாதவை யென்று அடியேன் கொண்ட உபபத்திகளை ஸாரமாக விஜ்ஞாபிக்கிறேனிங்கு.

4. ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை அருளிச்செயலென்றும் திவ்யப்பிரபந்தமென்றும் வழங்காமல் பிரபந்தமென்று வழங்குவது திவ்யப்ரபந்தத்வேஷிகளான

ஸ்மார்த்தர்களின் திரளிலே தோன்றியது. அது பிறகு ஸாமானியர்களான வைணவர்களின் வாக்கிலும் புகுந்தது. பூருவாசாரியர்கள், விசிஷ்ய நிகமாந்த மஹாகுரு பிரபந்தமென்று ஒருவர் சொல்லக் காதால் கேட்டாலும் மாய்ந்து போவரே. இக்காலத்திலொருவர் தம்முடைய திவ்யப்ரபந்தத்வேஷத்திற்கும், பூர்வாசார்ய வித்வேஷத்திற்கும் சாச்வத ஜயத்வஜமாக ப்ரபந்தரக்ஷை யென்று எழுதிவரும்படியான அவத்யம் தேசிகனிடத்தில் ஏறுமா; எங்ஙனே யேறும்? நூல்களில் பொது நிர்தேச மென்றும் சிறப்பு நிர்தேச மென்றும் இரண்டுண்டு; திவ்யப்பிரபந்த வியாக்கியானங்களில் கீழ்ப் ப்ரபந்தத்தால் என்றும் இப் பிரபந்தத்தில் என்றும் அருளிச் செய்வதுண்டு. அது கொண்டு "பூருவர்களும் ப்ரபந்த மென்ப துண்டு" என்று காட்ட வருவது அபஹாஸ்யமாகும். ஸ்வாமி ஸ்தோத்ர பாஷ்யத் தில் *மாதாபிதாயுவதய:* வியாக்கியாந-உபக்ரமத்தில் "பராசரப்ரபந்தாதபி" "உப ஜீவ்யப்ரபந்த நிர்மாணக்ரமாத்" என்று ஸாதித்துள்ளார். அது கொண்டு ஸ்ரீ விஷ்ணு புராணத்தை ப்ரபந்த மென்பதுண்டோ? "பாஷ்ய ப்ரபந்தே" "ச்ருத ப்ரகாசிகாப்ரபந்தே" இத்யாதி பரச்சத ப்ரயோகங்களுண்டு. அருளிச் செயலை விவக்ஷித்து ப்ரபந்தமென்று வழங்குவது நவீனர்களிடத் தன்றிப் பூருவர்களிடத்து எங்குங்காண முடியாது.

5. ஸ்வாமி வரைந்தருளின குருபரம்பராஸாரத்தில் ஆளவந்தார் முத லான ஆசார்யர்களின் ப்ரஸ்தாவத்தில் "இவரருளிச் செய்த ப்ரபந்தங்கள்" என்று அஸக்ருத் ஸாதிக்கிறார். எம்பெருமானார் ப்ரஸ்தாவத்தில் "திருவாய்மொழி யோதி னார்" "திருவாய்மொழிக்கு அர்த்தம் கேட்டருளினார்' என்றே ஸாதித்திருப்பதைக் காணலாம். இப்படிப் பட்ட மஹாசார்யர் ப்ரபந்தஸார மென்று பெயரிட்டு ஒரு ப்ர பந்தம் பண்ணினாரென்கை அநுவதிக்கவும் தகாததே. இது வெளிவ்யவஹாரங் களோடு நின்றாலும் பாதகமில்லை. "வேதாந்த குரு மொழிந்த ப்ரபந்தசாரம்" என்று நூலினுள்ளும் நுழைந்திருப்பது மிகவும் அருவருக்கத் தக்கதன்றோ. எந்த ப்ரபந்தத்தின் எந்த விதமான ஸாரம் இதில் எந்த பாட்டில் பொறித்திருப்ப தென்று கேட்டாலோ வர்ஷசத மானாலும் விடையிறுக்க முடியாது. ஸ்வாமி ரஹஸ்யத்ரய ஸாரமென்றும், ஸாரஸார மென்றும், த்ரமிடோப நிஷத்ஸார மென்றும் சில பிரபந்தங்கள் ஸாதித் திருக்கிறாரே, இவற்றில் ஏதேனும் கேள்வி பிறப்பதுண்டோ? ரஹஸ்யத்ரயத்தின் ஸாரப் பொருள்களைக் கொண்டது ரஹஸ்ய த்ரயஸாரம்; அந்த ஸார க்ரந்தத்தின் ஸாரம் கொண்டது ஸாரஸாரம். த்ரமி டோப நிஷத்தான திருவாய் மொழியின் ஸாரங்கொண்டது த்ரமிடோப நிஷத் ஸாரம். மற்றும் அருளாளப் பெருமாளெம் பெருமானார் நடாதூரம்மாள் முதலானாருடைய ஞானஸாரம் ப்ரமேய ஸாரம் தத்வஸாரம் முதலிய க்ரந்தங்களின் திருநாமங்களிலும் விசாரம் தோன்ற ப்ரஸக்தியே கிடையாது. திவ்யப்ரபந் தார்த்த விசாரலேசமுமற்ற சுவடிக்கு ப்ரபந்தசார மென்று ஒருகாலும் ஸ்வாமி பெயரிட மாட்டாரென்றால் இதை மறுக்க நினைப்பவர்களா தேசிக பக்தர்கள்?

6. ப்ரக்ருதம் அடியேன் விமர்சிக்கும் வியாஸத்தை யெழுதியவர் "பிரபந் தங்களின் ஸாரமான வகை தொகைகளை வெளியிடும் நூலாகையாலே பிரபந்த

சாரமெனப் பெயரிட்டிருக்கலாம்'' என்று சோதிடம் சொல்லுகிறார். சாரீரகமீமாம் ஸையில் இத்தனை அத்யாயங்கள் இத்தனை பாதங்கள் இத்தனை ஸூத்ரங்கள் இத்தனை யதிகரணங்கள், இதை இன்னாரியற்றினார்-என்று இவ்வளவே விவரித்து ஒருவர் ஒரு நூலெழுதினால் அதற்கு சாரீரகஸார மென்று பெயரிடலாம் போலும். ''பெயரிட்டிருக்கலாம்'' என்றெழுதுகின்றமையால் இவருடைய நெஞ்சுக்கே குழப்பம் தீரவில்லையென்பது விளங்கவில்லையா! இனி இச்சுவடியில் முதற்பாட் டைப்பாருங்கள்; ''ஆழ்வார்களவதரித்த நாளூர் திங்கள்'' என்பது தொடக்கம். [நாள் ஊர் திங்கள்] நாளென்பது நக்ஷத்திரம்; ஊரென்பது தெரிந்ததே; திங்க ளென்பது மாஸம். ஊரை முன்னேயோ பின்னேயோ எங்கும் வைக்கலாம். மாஸ நக்ஷத்ரங்களை மாற்றவே தகாது. இன்ன மாஸத்தில் இன்ன நக்ஷத்ரத்தில் என் பது தானே அடைவு; ''ஆழ்வார்களவதரித்த ஊர் திங்கள் நாள்'' என்றோ ''திங்கள் நாளூர்'' என்றோ சொல்லுவதில் யாப்புச் சிதைவு எள்ளளவும் நேராது. 'நாளூர் திங்கள்' என்பதும் இரு தேமாச்சீர்களே. ஊர் திங்கள் நாள் என்பதும் இரு தேமாச்சீர்களே. திங்கள் நாளூர் என்பதும் இரு தேமாச்சீர்களே. உத்தரா யணே ''விச்வாவஸூநாம ஸம்வத்ஸரே, கந்யாமாஸே, தசம்யாம் திதௌ சுக்லபக்ஷே'' என்று சொல்லுவது எங்கேனும் கண்டதுண்டோ? இந் நேர்த்திக் குச் செய்யுள் கூடா விட்டாலும் சிரமப்பட்டுக் கூட்டுவர்கள் சிறிய ஞானத்தர். எளிதாகவே கூடுவதாயிருக்க, விபரீதமாகப் பாடினாரென்னு மவத்யத்தை ஸ்வாமி திருமுடி மேலா ஏற்றுவது? இப்படியும் ஒரு வீண்பிடிவாதமா?

7 விவாத நூலில் *வையகமெண்* என்கிற பதினேழாம் பாட்டு மிகவும் பிற்பட்டது. ஒருவர் செய்து முடித்த பிறகு மற்றொருவர் செய்து நுழைத்த தென்பதில் ஐயுறவேண்டா. இப்பாட்டில் (17ல்) ஆழ்வார்கள் பன்னிருவரையும் பேசி முடித்தபின் ''எதிராசர் தம்மோடு ஆறிருவர் ஒரொருவர் அவர் தாம் செய்த ... நாலாயிரமும்'' என்றுள்ளது. இதனால் இராமானுச நூற்றந்தாதியை இராமானுசர் தாமே செய்தருளியதாக நிஸ்ஸந்தேஹமாய்க் கூறப்பட்டதாயிற்று. இதற்கு இப்படி பொருளல்லவென்றும், இராமானுசர் செய்வித்தநூலென்று பொருள் கொள்ளலாமென்றும் வேறு விதமாகவும் கொள்ளலாமென்றும் நவீன வுரைகாரர்கள் சிரமப்படுகிறார்கள். அது '......வ்ருதா ச்ரம:' அத்தனை. 'இராமா னுசர் இயற்றினபடியாலே இராமானுச நூற்றந்தாதி யெனப் பெயர் வந்தது' என்று மருண்ட வொருவர் செய்த செய்யுளிது, 'பர்த்ருஹரி; பட்டிகாவ்யம், பாரவி, முராரி' இத்யாதியாக வழங்கும் க்ரந்த நாமங்கள் ப்ரம ஹேதுவாயின. தேசிகப்ரபந்த மென்றால் தேசிகரியற்றிய ப்ரபந்த மென்று தானே பொருள். அப்படியே கொண்டார்களிங்கும்.

8. சில கற்பனைகள் கேண்மின். திருவெவ்வுளூரெம்பெருமானுக்கு தேசிக ஸ்துதியில்லையே யென்று குறைப்பட்ட சிலர் கிங்க்ருஹேசஸ்துதி யென்று ஒன்று கல்பித்து ஸ்வாமியின் க்ருதியாக வெளியிட்டிருக்கவில்லையா? யாரோ வொருவர் செய்த ஹரிதிநதிலகத்தை ஸ்வாமியின் க்ருதிகளிலே பரிகணனம் செய்திருக்க வில்லையா? ஆசார்ய கோஷ்டியில் சேராத வொருவர் செய்த ஸ்ரீ ஸூக்த பாஷ்

யத்தை நஞ்சீயருடைய க்ருதியாக ஏறிட்டு வெளியிட்டிருக்கவில்லையா? ப்ரமத்தினால் சில, ஆக்ரஹத்தால் சில, என்று வாசியுள்ளது. கிங்க்ருஹேசஸ்துதி-ஹரிதிநதிலகாதிகளை ஸ்வாமியின் க்ருதியாக ஸாமான்யர்கள் எழுதிவைத்திருந்தால் கேள்வியில்லை. தர்சன ஸ்தாபகாசார்யர்களென்று விருது பெற்றவர்களுமன்றோ எழுதிவைத்திருக்கிறார்கள். இல்லையில்லையென்றால் ஸதஸ்ஸில் காட்ட ஸஜ்ஜனாயிருக்கிறேன். சிறியாரோடு பெரியாரோடு வாசியில்லை கல்பனைக்கு.

9. சாலியர்கள் [பட்டுநூல்காரர்கள்] என்கிற வகுப்பினர் பூணூலணிந்து பன்னிரு நாமஞ்சாத்திப் பஞ்சகச்ச வேஷ்டியுமுடுத்து ஆங்காங்கு ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணர்களோடு கலந்து பரிமாறுகிறார்கள். மஹோத்ஸவங்களில் ததீயாராதன கோஷ்டிகளிலும் ஸமபங்க்தியில் அந்வயித்து புஜிக்கிறார்கள். இப்படியே காலந் தள்ளுகிறது. ஸமய விசேஷங்களில், இவ்வநீதியை எம்பெருமான் தானும் ஸஹித்திருக்கமாட்டாமல் பிடியுண்ணச் செய்கிறானிவர்களை, அடியேன் வெகுநாள் நினைத்திருந்ததையும், விமர்சிக்கவேண்டிய ஸந்தர்ப்பம் விளைந்ததையும், அதனால் தத்துவமுணர்ந்து உணர்த்தலானதையும் பலகால் விவரித்தெழுதியிருக்கிறேன். இங்குச் சுருக்கமாக வெழுதுகிறேன். ராமாநுஜாபாத்ரம், நமோ ராமாநுஜார்யாய, வாழிகள், பிள்ளையந்தாதி, பிரபந்தஸாரம், ப்ரபந்தாநுஸந்தானதீபிகை, வடகலை குருபரம்பராப்ரபாவம் என்னுமிவையேயழையும் இளம்பிராயத்திலேயே அடியேனறிவேன். 'நம்ம ஸம்ப்ரதாயத்தில் நாம் வைத்துக் கொண்டிருப்பது போல அவர்கள் ஸம்பிரதாயத்திற்கு இவை' என்றே ஸஹஜமாக நினைத்திருந்தேன். இப்படியிருக்கையில் ராமாநுஜாபாத்ரோத்ஸவ மென்று ஒன்று முளைத்தது. பரம கம்பீரமாய் எங்கும் பங்கப்படாததான ஸ்ரீமாந் வேங்கடதனியனிருக்க, அதற்கொன்றுமில்லாமல் இதற்கென்ன வந்ததென்று கீர்த்தி மூர்த்தியான நாவல்பாக்கம் ஸ்வாமி ஸாதிக்கவே இந்த விசாரம் என்னுள்ளத்தில் குடிபுகுந்தது. அதற்குமேல் கோயில் திருமலை பெருமாள் கோயில் வ்யவஹார விஷயங்களையும் விமர்சிக்க ப்ராப்தமாயிற்று.

10. ஆப்தசிகாமணிகளே! இதைப் பாரதமாக வளர்த்தாமல் இதோ நாலெட்டு வரிகளில் முடித்து விடுகிறேன். வாழி திருநாமத்தில் ஸ்ரீசைலேசதயாபாத்ரத்தனியனுக்கு முன்னே மணவாளமாமுனிகளின் ஆசார்யருடைய தனியன் *நம: ஸ்ரீசைலநாதாய* என்பது அநுஸந்திப்பது. அது ஸகல பரம்பரைகளிலும் ஒரே விதம். அந்த ஸ்தானத்தில் தேசிகருடைய ஆசார்யருக்கு இவர்கள் இயலில் சொல்லிவரும் தனியன் * நமோ ராமாநுஜார்யாய * என்பது. அது உண்மைத் தனியனன்று என்பதை யாவருமறிவர். இந்த ச்லோகம் எப்போது செய்யப்பட்டது? யாரால் செய்யப்பட்டது? ஸ்வாமி ஸாதித்த மஹா கம்பீரமான வேறு தனியனிருக்க இது எதற்காகச் செய்யப்பட்டது? என்று பல வருடங்களாகப் பல மஹான்களையும் கேட்டு வருகிறேன். அடியேனுடைய ஏழெட்டு நூல்களில் இதைப்பற்றி வலிதாக எழுதியுமிருக்கிறேன். "வ்ருச்சிக தஷ்டமலிம்லுசவத் இருக்கின்றீர்களே" என்றுகூட வெழுதியிருக்கிறேன். இதற்கு ப்ராமாணிகமான விடை என்றைக்கு வெளிவந்தாலும் "அடியேனுடைய துர்வாதங்களை க்ஷமிப்பது" என்று விஜ்ஞாபித்து அஞ்ஜலிபந்தத்தோடு விச்ராந்தனாவேன். சாரீரகமீமாம்

ஸையில் முதலத்யாயத்தின் முடிவான ஸூத்ரம் * ஏதேந ஸர்வே வ்யாக்க்யாதா வ்யாக்க்யாதா:* என்பது. அதையே இங்கு அநுஸந்தித்து நிற்கிறேன்.

இதற்கு விடைகூற வேண்டா; அவரவர்கள் சிந்தைசெய்வதே போதுமானது.

"அடியார்கள் வாழ அரங்கநகர்வாழ, சடகோபன் தண்டமிழ் நூல்வாழ" என்னும் வெண்பாவுக்குப் பிரதியாக "நானிலமுந்தான் வாழ நான்மறைகள் தாம்வாழ, மாநகரில் மாறன் மறைவாழ" என்கிற வெண்பா வெளி வந்துளது. மாறன்மறையாகிய திருவாய்மொழி மாநகரில்வாழ என்கிறது இதில். மாநகர் என்பது எது? திருவாய்மொழியில் "தென் திருப்பேரெயில் மாநகரே" என்றுள்ளதனால் ஆழ்வார் திருநகரி ஸமீபத்திலுள்ள தென் திருப்பேரைக்கே மாநகரென்று திருநாமமுண்டு. அவ்விடத்திலா மாறன் மறைவாழ வேணும்? 'ஸர்வதேச தசாகாலேஷு' என்றுப்போலே உலகமெங்கும் வாழ வென்று ஆசாஸிக்க வேண்டாவா? ஏற்கெனவே *அரங்கநகர்வாழ* என்பது ப்ரஸித்தமாய்விட்டபடியால் அதை ப்ரஸ்தாவிக்க முடியாமற்போனாலும் "மாநிலத்தில் மாறன்மறைவாழ" என்னலாமே. ஏதோவொரு நகரை உத்தேசித்துத்தானே 'மாநகரில்' என்கிறீர்கள். அந்நகர் இன்னதென்று பக்தர்கள் தெரிந்துகொள்ள வேண்டாவா? தத்துவத்தை நாம் தெரிந்துகொண்டே யிருக்கிறோம். ஸூத்யர்கள் தெரிந்துகொள்ளச்செய்வது நன்று. இங்ஙனே ஒவ்வொன்றும் கற்பனைக்குக் கைவிளக்கு.

11. காரண விசேஷத்தால் பிரபலமான ஸ்பர்த்தை யேற்பட்டு *அந்யமிந்த்ரம் கரிஷ்யாமி போலே கல்பித்தவற்றை இன்றாக விடுவதென்றால் இது ஸாத்யமா? ஸம்பாவிதமா? இனி யொருகாலும் விடார்களென்பதறிவேன். 'பல்லாண்டு பல்லாண்டு' என்று வாயால் சொன்னாலுங்கூடப் பாதகமாகு மென்று "தந்த ஸம்வத்ஸரம் தந்த ஸம்வத்ஸரம் தொலைந்ததா?" என்று சொல்லிக் கொண்டிருந்த வகுப்பினர் திவ்யப்ரபந்த மென்னுமல் பிரபந்த மென்று சொல்லிக் கொண்டாவது மன்றாடுவது நன்றேயன்றோ. தந்தஸம்வத்ஸர கதை மிகப் பெரிது அந்யத்ர விஸ்தர:.

12. ஸ்வாமி ஸாதித்த ஸம்ப்ரதாய பரிசுத்தி முதலான ரஹஸ்ய க்ரந்தங்களில் ஆதிமத்யாவஸானங்களில் சுலோகங்களும் பாட்டுக்களுமுள்ளன. அந்த சுலோகங்கள் எப்படி தனிப்பட்ட பிரபந்தங்களல்லவோ, அப்படியே பாட்டுக்களும் தனிப் பிரபந்தங்களல்ல வென்பது சிலாலிகிதம். "அவை தனிப் பிரபந்தங்களாகவும் தொன்றுதொட்டு விளங்கி வருகின்றன" என்பது ஹாஸாஸ்பதம் கேவலம். கோவில் சண்டை தோன்றுவதற்கு முன்பு ஸ்வாமியை இன்னாரென்றே யறியாதிருந்த வகுப்பினர் 'தொன்றுதொட்டு' என்றெழுதுவது பாமரவஞ்சனை மட்டுமன்றே. ஆத்ம வஞ்சனையுமல்லவா?

13. அடுத்தபடியான வார்த்தை "ஸ்ரீ தேசிகன் அர்ச்சை வடிவில் எழுந்தருளியிருக்கும் பாக்கியம் பெற்ற எல்லாத் திவ்விய தேசங்களிலும் விசேஷமாய்

திருநக்ஷத்திர தினங்களிலும் அநுஸந்திக்கப்படுகின்றது" என்பது. கோயில் திருமலை பெருமாள் கோயிலென்று ப்ரஸித்தமான திவ்ய தேசங்களிலும் திருவவதார ஸ்தலமான திருத்தண்காவிலும் நீதிமன்றங்கள் மூலமாக வாய்ப்பூட்டு போட்டிருப்பது த்ரிஜகத் ப்ரஸித்தமாயிருக்க இங்ஙனே யெழுதி அழகு பார்த்துக்கொள்வதில் என்ன லாபமோ அறியோம். திருத்தண்காவின் ப்ராந்தத்தில் புதிய நிர்மாணமான பரகால மடத்திலும் ஸ்ரீரங்கராஜ வீதி நூதன ஸன்னிதியிலும்; இங்ஙனே ஆங்காங்கு (கி. பி. இருபதாம் நூற்றாண்டில்) நூதன நிர்மாணமான ஸன்னிதிகளிலும் சொல்லப்பட்டு வருகிறதென்றால் இதை யாரே மறுப்பார்? நைஷதத்தில் சந்த்ரோபாலம்ப கெட்டத்தில் "அநுபவம் வசஸா ஸகி! லும்பஸி" என்றதுதான் நினைவுக்கு வருகிறது. அப்படி தொன்றுதொட்டு வந்திருக்குமாயின் அநாதிதிவ்யப்ரபந்தாதிகாரிகள் வாக்கிலன்றோ வந்திருக்கும். அடியேனுடைய "வரதன் ஸன்னிதி வரலாறு" என்னும் நூலிலும் பரமார்த்த பூஷணம் முதலான மற்றும் பல நூல்களிலும் முடிந்துபோன சர்ச்சைகளன்றோ இவை.

14. "இராமாநுச நூற்றந்தாதி நாலாயிரத்தில் சேர்ந்ததென்று ஒரு சாரார்; சேராததென்று ஒரு சாரார்" என்பது ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியில் பரிமாறும் வார்த்தையன்று. கண்ணிநுண் சிறுத்தாம்பு நாலாயிரத்தில் சேர்ந்ததானால் நூற்றந்தாதியும் அத்தகைத்தே. திருக்கார்த்திகைக்குப் பிறகு கொள்ளும் அநத்யயனக்ரமம் நூற்றந்தாதிக்கும் நிர்விசேஷமானதே. திருமடல்களைப்பற்றி இன்னமுமா மருள்? பூருவாசாரியர்களில் ஒருவரும் திருமடல்களில் பாசுரப் பகுப்பு செய்தது கிடையாது. திருவெழு கூற்றிருக்கை போலவே திருமடல்களையும் ஒவ்வொரு பாட்டாகத்தான் பூருவாசாரியர்களனைவரும் ஒருமிடறாகக் கொண்டிருந்தார்களென்பதில் ஸந்தேஹ லவலேசமும் வேண்டா.

15. உண்மையில் ஸ்வாமி ப்ரபந்தஸாரம் பணித்திருந்து அதுதன்னில் திருமடல்களைப் பல பாட்டுக்களாகப் பிரித்துமிருந்தால் அது பூர்வாசார்ய பரம்பரா ப்ராப்தமான ப்ரணாளியாகத்தானிருக்கும்; அதற்கு மாறாக முன்னோர்கள் யாரும் அபிப்பிராயங்கொள்ள அவகாசமேயிராது. ஆகவே திருமடல் விசாரம் ஸர்வாத்மநா அஸம்பத்தம். திருவந்தாதிகள், திருச்சந்தவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, அமலனாதிபிரான், திருவெழுகூற்றிருக்கை, திருமடல்கள், இராமாநுசநூற்றந்தாதி ஆகிய இவற்றில் இன்னாரருளிச்செய்ததென்று திருநாமக் குறிப்பு இல்லாதிருக்கவும் முன்னோர்கள் சொல்லிவந்ததை மீறிச் சொன்னதுண்டோ? மாஸ நக்ஷத்ர ஸ்தலங்களைத் தான் மாற்றினதுண்டோ? பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த அர்த்தங்களை ரேகாமாத்ரமாவது அதிலங்கித்ததுண்டோ? ஆறாயிரப்படியில் பிள்ளானருளிச்செய்த அர்த்தங்களையுங்கூட உபேக்ஷித்தன்றோ பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த அர்த்தங்களையே ஆதரித்துப் போருகிறார் ஸ்வாமி. இதெல்லாம் ப்ரதிஜ்ஞாமாத்ரமேயன்றே, ஒவ்வொன்றிலும் விபுலவிவரணமன்றோ காட்டியிருக்கிறேன். *வாஸுதேவக்ருஹம் த்வேகம் ந ப்லாவயதி ஸாகர:* என்றாற்போலே பிரளயத்திலுமழியாவே அடியேனுடைய நிரூபணங்கள்.

16. சில திவ்யப் பிரபந்தங்களில் பௌர்வாபர்யத்தில் விசாரமிருப்பதாக வெழுதுவதும் அஸங்கதம். இத்தகைய விஷயங்களில் ஸ்வாமி தமக்கென்று தனியே யொரு கொள்கையைக் கொள்பவரேயல்லர். அவர் செய்யாததைச் செய்த்தாக வைப்பதும், 'அவரபிப்ராய மப்படி, இவரபிப்ராய மிப்படி' என்பதும் ஸ்வாமிக்கு அவத்யமேயொழியப் பெருமையன்று. ஆழ்வார்களின் திவ்ய ப்ரபந்தங்களிலோ பூர்வாசாரியர்களின் திவ்ய க்ரந்தங்களிலோ பௌர்வாபர்யத்தை ஸ்வாமியின் திருவாக்கைக்கொண்டு நிர்ணயிக்கவே முடியாது. ஏனெனில்; குருபரம்பரா ஸாரத்தில் ஆளவந்தாருடைய திவ்ய க்ரந்தங்களின் பரிகணனையில் "....ஸ்தோத்ரமும் சதுச்ச்லோகியும் ஆக எட்டு" என்றருளியுள்ளார். இதனால் ஸ்தோத்ரரத்னம் சதுச்ச்லோகிக்கு முற்பட்டதென்று நிஸ்ஸந்தேஹமாக விளங்குகிறது. ஸ்வாமி தாமே சதுச்ச்லோகீபாஷ்யத்தின் முடிவில் *ஸ்தோத்ரே ஸந்தர்சயிஷ்யதி* என்கையாலே சதுச்ச்லோகிக்குப் பிற்பட்டது ஸ்தோத்ரமென்று ஸ்பஷ்டமாகிறது. எதைத்தள்ளி எதைக் கொள்வது? அன்றியும் அந்த குருபரம்பராஸாரத்திலேயே எம்பெருமானாருடைய திவ்ய க்ரந்த பரிகணனை பண்ணுமிடத்து — "இவரருளிச்செய்த ப்ரபந்தங்கள் ஸ்ரீபாஷ்யம் தீபம் ஸாரம் வேதார்த்த ஸங்க்ரஹம் ... .... ஆக ஒன்பது" என்கிறார். இத்தால் ஸ்ரீபாஷ்ய தீப ஸாரங்கள்தாம் முற்பட்டவை யென்று ஸ்பஷ்டமாகிறது. ஸ்ரீபாஷ்யத்தில் ஜிஜ்ஞாஸாதிகரணத்தில் மஹாஸித்தாந்தத்தின் கடைப் பகுதியில் "**அயமர்த்தோ வேதார்த்தஸங்க்ரஹே ஸமர்த்தித:.**"என்று ஸ்ரீபாஷ்யத்திற்கும் முற்பட்டதாக வேதார்த்த ஸங்க்ரஹத்தை பாஷ்யகாரர் தாமே அறுதியிடுகிறார். எதைக் கொள்ளுகிறீரென்று கேட்டால் திசைதொறும் விழிக்கவேணும். ப்ராமாணிகராயிருந்து விடையிறுப்பதானால் இவர் கையாலெழுதித் தீரவேண்டுவது இதுவே; எதுவேயென்னில்;

> "தேசிகனுக்குப் பூர்வாசார்ய க்ரந்தங்களின் பௌர்வாபர்யத்தை நிர்ணயிப்பதில் நோக்கில்லை; இன்னின்ன க்ரந்தங்களென்று நிர்தேசிப்பதில் மட்டுமே நோக்கு. (என்றோ; அல்லது) பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தி **விருத்தமாகவும்** ஸ்வோக்தி விருத்தமாகவும் பணிப்பதே பணி"

என்றோ எழுதித் தீரவேண்டுமிவர். ஆளவந்தார்ஸ்ரீஸூக்திக்ரம விஷயத்திலே ஸ்வோக்தி விரோதமும், ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்திக்ரம விஷயத்திலே பூர்வாசார்ய ஸூக்தி விரோதமும் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டினேனுகையாலே. ஆக இனி இவர் "திருநெடுந்தாண்டகம் சரமப்ரபந்தமென்று பெரியவாச்சான் பிள்ளை யபிப்ராயம்; அது மூன்றுவது பிரபந்தமென்று நம் தேசிக வள்ளலின் ஸ்ரீ திருவுள்ளம்" என்றெழுதவோ சொல்லவோ கனவிலும் நினையாரென்றதாயிற்று.

17. "ஆசார்யனென்று பொதுவாகப் பொருள்தரும் சொல் ஈரரசு படாதபடி தமக்கே பொருந்தும் முறையில்" என்று இதையே பல்லவி அனுபல்லவி எல்லாமுமாகப் பாடிக்கொண்டிருக்கலாமிவர். இவர்களது நவீந ஸங்கேதத்தை இவர்களே மெச்சவேண்டுமத்தனை. * ஸ்ரீமாந்வேங்கட தனியனில் '**வேதாந்தாசார்யவர்ய:**' என்றுதானுள்ளது. * கவிதார்க்கிக ஸிம்ஹாயவிலும் வேதாந்த குருவென்றுதானுள்ளது. ஸ்வாமி தம் திருவாக்காலும் "வேதாந்தாசார்யஸம்ஜ்ஞாம்

அவஹித பஹுவித்ஸார்த்த மந்வர்த்தயாமி'' என்கிறுர். ஸ்வாமிக்கு எத்தனை பெருமை பகர்ந்தாலும் போதாது. *வைபவாநாம் அமேயாநாம் அத்விதீயோ மஹாநிதி:, ஏக ஏவ மஹாசார்யோ வேதாந்தார்யோ மஹீதலே.* அவருடைய ஸ்ரீஸூக்திகளுக்கு ஸர்வப்ரகாரத்தாலும் முரண்பட்ட மதத்தைக் கைப்பற்றி விட்டுக் கண்ணநீர் பெருக்குவது யாவச்சரீரபாதம் அல்லது யாவதாத்ம பாவியாகலாம்.

18. நிகமனம்;-எழுதுகிருரிவர்—அநாதியான ப்ரபந்தஸாரத்தை இக்காலத்தவர் நவீந கற்பிதமென்கிறுர்; வேதத்தையே பௌருஷேயமென்றும் நூதன கல்பித மென்றும் சொல்லுகிறுர்களே; அதனுல் வைதிகர்களுக்கு என்ன ஹானி விளைந் திட்டதென்கிறுர். கேண்மின். உலகில் உண்மையான கற்பரசிகளுமுண்டு, ஸ்வை ரிணிகளுமுண்டு; ஸ்வைரிணிகளும் பரீவாதங்களில் ''ஒன்ருன பிராட்டிக்கும் அபவாதமில்லாமற் போகவில்லையே; அதனுல் பிராட்டிக்கு என்ன குறைந்து போய்விட்டது'' என்று சொல்லுவதுதான் வழக்கம். ப்ரதிவாதங்களில் புகாமல் இந்த வார்த்தையோடு நின்றிருந்தால் அழகியதே. ''ததாத்வே நூதநம் ஸர்வம் ஆயத்யாஞ்ச புராதநம்'' என்று ஸ்வாமி ஸாதித்தபடியே இதுவும் க்ரமேண புரா தனமாய்விடலாம்; ஆனுல் 'இது போட்டியாகக் கல்பிதம்' என்பது மட்டும் புரா தனமாகாது, நவம் நவம் நவமாகவே விளங்கிவரும். ஸ்வாமி யதிராஜஸப்ததியில் *ச்ருதிச்ரேணீ சூடா* என்கிற சுலோகத்தில் ''ஸ்வஹஸ்தே நோத்க்ஷிப்தைஸ் ஸ கலு நிஜகாத்ரேஷு பஹுலம் கலத்பிர் ஜம்பாலைர் ககனதலமாலிம்பதி ஜட:'' என்று பரமாத்புதமாக வருளிச்செய்தார். பரமபாவனமான பகவத் ராமாநுஜ தர்சனத்தில் தோஷங்களை ஏறிட்டுச் சொல்லுகிற மூர்க்கன் சேற்றை வாரி ஆகா சத்திலே யெறிந்து தன்மீது தானே வழியவிட்டுக்கொள்ளுமவன் — என்றபடி. ஸ்வாமி இதர க்ரந்தங்களில் பரமதங்களை சரமாரி பொழிந்து நொறுக்கினவராகை யாலே இங்ஙனே துணிந்து சொல்லமுடிந்தது. பரோக்திகளை ப்ரத்யாக்க்யானம் பண்ணுதே இந்த உபாலம்பத்தோடு நின்றிருந்தால் என்னுகும்? எதிரியும் இதைத் திருப்பிச் சொல்லத் தடையில்லையாமன்ருே. ஆக மேலே விழுகிற சர மாரிகளை நிரஸித்துக்கொள்ளமாட்டாதே ''வேதத்தையே கல்பித மென்பவர்கள் .... ராமாயணத்தையே கல்பிதமென்பவர்கள் ...'' இத்யாதி வார்த்தைகளினுல் தான் தமர்களைத் தேற்றவேண்டும்.

ஸ்ரீ உவே. கனபாடி ரங்கமன்னுரென்பவர் மதுரையிலிருந்து இன்று ஒரு கடிதமெழுதியுள்ளார்;—''தேவரீருடைய உபந்யாஸ சதத்வயத்தில் 94 முதலான சில வுபந்யாஸங்களால் மிக்க உள்வெதுப்புக்கொண்ட சிலர் வேறொன்றும் ப்ரதி க்ரியை பண்ணமாட்டாமல் தேவரீரை வாசாமகோசரமாக தூஷித்துத் தீர்ப்பதே கருமமென்று துணிந்து ஒரு நிந்தைச்சுவடியை வெளியிட்டிருப்பதாகத்தெரிகிறது. வேப்பரி யையங்காரும் புதுக்கோட்டை யையங்காரும் கலந்து செய்ததாகச் சொல்லுகிறுர்கள். அதைச் சிலர் மூடிமூடி வைத்துக்கொண்டு வாசிப்பதாகத் தெரிகிறது........'' என்று. கீழே காட்டின யதிராஜஸப்ததிஸ்ரீஸூக்தியையே அவர்களுக்கு விடையாக விடுத்தேன். .... .... .... *

## ஸ்ரீமான் உவே. ஜ்யோதிர்பூஷணம். வங்கீபுரம். ராஜமையங்கார்ஸ்வாமியின் ஸ்ரீமுகம். 1—10—65

அடியேனிப்போது சில மாதங்களாகத் திருமாலிருஞ்சோலை ஸமீபத்தில் வஸிக்க நேர்ந்திருக்கிறது. அடிக்கடி அழகர் ஸேவை ப்ராப்தமாகிறது. இந்த விண்ணப்பமும் அழகர் திருவடி வாரத்திலிருந்தே எழுதுகிறேன். மதுரையிலிருந்து நேற்று ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் வந்திருந்தார். அவர் அஹோபல மடத்து சிஷ்யரென்று சொல்லிக் கொண்டார். ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகைகளைப் புத்தகமாகத் தைத்துக் கையில் வைத்துக் கொண்டு வாசித்துக் கொண்டிருந்தார். என்னை அவரறியார், அவரை நானறியேன். ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகைகளை அவர் வெகு ஊக்கமாக வாசித்துக் கொண்டிருந்த படியால் அவர் பக்கத்திலே நானும் உட்கார்ந்து அவருடைய திருவுள்ளம் எப்படியிருக்கிற தென்பதை யறிவதற்காக ஸ்ரீ ராமாநுஜனை அடியேன் அறியாதவன் போலச் சில கேள்விகள் கேட்டேன். அவர் நெஞ்சில் கொஞ்சமும் விஷமமில்லாதவராய் சாதித்த வார்த்தைகள் என்னெஞ்சையுருக்கிவிட்டன. அவரும் கண்ணீர் பெருகிக் கொண்டே பேசினார்; என் கண்ணிலும் கண்ணீரைப் பெருக்கிவிட்டார். அந்த ஸ்வாமி சாதித்த வார்த்தைகளில் ஸாரமான சிலவற்றை மட்டும் தேவரீருக்குத் தெரிவிக்கிறேன். "நசேத் ராமாநுஜேத்யேஷா சதுரா சதுரக்ஷரீ, காமவஸ்தாம் ப்ரபத்யந்தே ஜந்தவோ ஹந்த மாத்ருசா:." என்கிற சுலோகம் ஸ்ரீ ராமாநுஜரை யுத்தேசித்துத் தோன்றியதாக எல்லாரும் நினைத்திருப்பர்கள், நானும் அப்படித்தான் நினைத்திருந்தேன். இந்த ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகையை அநுபவிக்க ஆரம்பித்தது முதல், அதிலும் இப்போது ஒருவருஷமாக அநுபவித்து வருவதில் இந்த ஸ்ரீ ராமாநுஜன் விஷயமாகத்தான் அந்த ச்லோகம் தோன்றிய தென்று அழகர் திருவடி ஸாக்ஷியாகச் சொல்லுவேனடியேன். இந்த பதினெட்டாம் படியில் ஏறியிறங்கியும் இதைச் சொல்லத் தயாராயிருக்கிறேன். பவிஷ்யத் ஜ்ஞானமுடைய முன்னோர்கள் சாதித்த அந்த ச்லோகம் இந்த ராமாநுஜனைப் பற்றித் தானென்பதை நான் பல பேர்களிடம் சொன்னேன். எல்லோரும் ஆமோதித்தார்களே தவிர ஒருவர் கூட தார்க்காணிக்கவில்லை. கலாவைஷம்யத்தைக் கொண்டு சிலர் எதையாவது சொல்லலாம். அந்தவழி எனக்குத் தெரியாது ஸ்வாமீ. மதுரை G. P. O வில் S. சேஷாத்ரியென்று ஒரு பிள்ளையாண்டானிருக்கிறார். அவரும் என் கலைதான். இந்த ராமாநுஜன் பத்ரிகையின் மேன்மை எனக்கு அவராலேதான் தெரிந்தது. இதைவிட்டு வேறு எந்த பத்ரிகையை வாசித்தாலும் கண்ணோவும் தலைநோவுமாகத் தானிருக்கிறது என்கிறாரவரும். தற்காலம் 200 உபந்யாஸங்களென்று எழுதிவருகிறார். இதுவரையில் நூறுதான் வந்திருப்பதாகத் தெரிகிறது. ஒரு பெருமானை ஆராவமுது என்கிறார்கள். எனக்கு இதுதான் ஆராவமுதாக இருக்கிறது. எத்தனைதரம் வாசித்தாலும் த்ருப்தியே யில்லையே.

இவ்வளவும் சொல்லிவிட்டு இந்த பத்ரிகையை நீங்கள் பார்த்ததே கிடையாதா? என்று கேட்டார். மேலே அரைமணி காலம் பேச்சு நடந்தது..............................

இக்கடிதம் பிரசுரிப்பதை இவ்வளவோடு நிறுத்திக் கொள்ளுகிறேன். (மானேஜர்.)

**ஒரு ஸந்தோஷச் செய்தி ;—** சென்ற ஆடிமாதத்தில் திருவாடிப் பூரத்தன்று ஸ்ரீ வேங்கடநாதன் என்றொரு பிள்ளை என்னிடம் வந்து தன்னுடைய ப்ரவரங்களைச் சொல்லிக்கொண்டு சில நாழிகை வார்த்தையாடினுன். என்னுடைய சிந்தையி எப்போதும் திகழ்பவரும், 'க்ருதயுகபுருஷர்களிலொருவர்' என்று என்னால் ஹார்தமு மதிக்கப்பட்டிருந்தவருமான (வைகுண்டவாஸி) உப்பிலியப்பன் ஸன்னிதி நவநீதம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் கநிஷ்ட புத்திரருடைய புத்திரனுகத் தன்னைத் தெரிவித்துக் கொண்டான். [சிதம்பரம் அண்ணுமலை யூனிவர்ஸிடியில் லெக்செரராக இருந்துவரும் ஸ்ரீமான் சேஷாத்ரியினுடைய புத்திரன்.] மைனர் தசை நீங்குவதற்கு முன்னே பிடித்து நான் அந்த நவநீத குடும்பத்தைச் சேர்ந்தவனுகவே யிருந்தபடியால் "ஆக்க்யாதி ஹ்ருதயம் ஹ்ருதா" என்னும்படியான வொரு ப்ரேமமுண்டு. ப்ரஸ்துதனுன வேங்கடநாதன் சிறு பிராயமாயிருந்தாலும் மஹாமேதாவியாய் மஹாரஸிகனுய்ப் பேசினுன். ஆனுல் வங்கீபுரம் நவநீத குடும்பத்தில் பிறந்த இவனுக்கு இது ஆச்சரியமன்றென்றே உள்ளபடி யெண்ணினேன். இவன் சென்னையில் தான் வாசித்துக் கொண்டிருப்பதனுல் அவனுக்கு நம் ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகைகள் சிலவற்றைச் சேர்ப்பித்திருந்தேன். அவன் ஓரக்ஷரம் விடாமல் வாசித்துப் பார்த்து, ஏற்கெனவே என்னுடைய சில நூல்களையும் வாசித்து ரஸித்திருப்பதாகவும் தெரிவித்து அவனெழுதியுள்ள கடிதம் பொன்னெழுத்தில் பொறிக்கத் தக்கது. அதை இங்கு வெளியிடவும் ஆசையுண்டு. "வித்யார்த்தி தசையிலிருப்பவர்களின் புகழுரையினுல்... ..." என்று சிலர் நினைக்கக் கூடுமென்று விட்டிட்டேன். உண்மையில் புகழுரையை நான் பெரிதாக மதித்தவனல்லேன். விஷயங்களை க்ரஹிக்கிற ரீதியும் அநுவதிக்கிற சைலியும் ஆழ்ந்து நோக்குகிற அருமையும் இவ்வளவுக்கும் மேலாக அஸூயையற்றிருக்கிற அதிசயமும் என்னைப் பரவசமாக்கியது. மேன்மேலும் மிகமிக அபிவிருத்திக்கு வரவேண்டியவனிவன் என்று என்னுடைய அந்தரங்க ஸந்தோஷத்தையறிவித்துக் கொண்டபடி. P.B.A. ... ❋

## 5—10—65 தேதி வரையில் ஸ்ரீ ராமாநுஜன் சந்தா வரவு

Madras

191. ஸ்ரீ உவே. T. A. திருவேங்கடாசாரியர். 4.
192. ,, S. R. ஸ்ரீநிவாஸய்யங்கார். 5
193. ,, G. எதிராஜுலு நாயுடு. 17.
194. ,, G. M. அழகர்ஸாமி. 17.
195 ,, M நரஸிம்ஹன். 47.
196. ,, V. P. கிருஷ்ணஸ்வாமி. 11.
197. ,, V. Krishnaswami Sarma, Lif Co., 17

—வெளியூர்கள்—

198. ஸ்ரீ உவே. கோ. கம் திருமலாசாரியர் ஸ்வாமி. பிரயாகை
199. ,, P. R. திருவேங்கடாசாரி திருவாலி.
200. ,, K ஜகன்னுதய்யங்கார், அண்ணன்கோவில்.
201. ஸ்ரீமத் A. ரங்கநாதய்யங்கார், அட்வொகேட், மதுரை.
202. ,, M. கஜேந்திரய்யங்கார், உக்கடம்.
203. ,, V. Varadan, New Delhi
204. ,, ரங்கம்ஜானகி. ஆழ்வார் திருநகரி.
205. ,, R. நாராயணையங்கார், சிரகிக்கோட்டை.
206 ,, S. ஸ்ரீநிவாஸய்யங்கார், பரமகுடி.
207. ,, V. A. ஐயங்கார். பெங்களூர் 3
208. ,, V. Govindan, Calcutta.
209. ,, திருநாங்கூர் கண்ணம்மா.
210. ,, சேக்குப்பேட்டை பெருமாள் செட்டி.
211. ,, S. K. கனகமணி, ஸ்ரீரங்கம்.



Sow Jayalakshmi and Sri Rangachariar with Sri P. B. Annangarachariar.—*Photo by C. Seshachalam.*

# Wedding Of Great Significance

By C. SESHACHALAM, M. A.
(*Curzon & Co., Madras*)

TO the sonorous chanting of the Vedas and sacred mantras, on the forenoon of Monday (Sept. 13), under the shadow of the towering Gopurams of Kanchi Sri Varadarajaswamy was solemnised the marriage of Sow Jayalakshmi and Sri Rangachariar.

The bride is the daughter of Sri M. Thirumalacharyar, Veda Adyapaka of Sri Veda Vedanta Vaijayanti Patasala of Kancheepuram and "dauhitri" (daughter's daughter) of Sriman P. B. Annangarachariar Swamy.

In the direct line of succession Sri P. B. A. Swami is the descendant of one of the disciples of Acharya Sri Ramanuja (the Prativadi Bhayankara Jagadacharya Simhasana) The doyen of Sri Vaishnavite Acharyas, Annangarachariar Swamy is by his own right a Srimadvedamarga Pratishtapana and Ubhayavedanta Pravartaka. His learning is all-comprehensive, his memory unfailing, his style of writing clear and precise be it in Samskrit, Tamil, Telugu or Hindi, his repertoire prodigious, his golden voice full, rich and resounding, his erudition incomparable and his manner always correct and competent.

Within living memory it is hard to find his equal in zeal of authorship, for material published and broadcast far and wide. His popularity is the healthy envy of many who marvel at the ardour of his countless admirers.

His generosity is somewhat muted. He has gifted away the proceeds of his ancestral shrotriem along with his collections to an endowment now worth nearly two lakhs of rupees for the maintenance of Sri Nambillai Sannidhi and Sri Nambillai Nilayam both built by him at Kanchi. Such deep concern for the permanence of Kainkaryams is rare these days.

Many decades ago, another scion so captivated the devotion of a multi-millionaire merchant prince of the North that a great temple was built in sacred Brindavan all of the Dravidian style of architecture to house an icon of Sri Rangamannar, the beloved of Andal. The bridegroom, Sri Rangachariar, is the present occupant of that famous Govardhana Peetam and is expected to take over the conduct of worship in Sri Ranga Mandir on the conclusion of his study of Sri Bhashya in Madras. His countenance and demeanour fully warrant the prognosis that this young person is to discharge his responsibilities as a religious and spiritual leader with vigour, grace and magnanimity.

This matrimonial alliance between two such illustrious families is a twice blessed sure and certain augury for the perpetuation of a line of leaders in a field of dwindling eminence. This was the thought and unuttered prayer in the minds of the throng present during the Muhurtham. May God grant it be so!

*—From "Free India" 19-9-65.*

SRI RAMANUJA

# A BIOGRAPHICAL SKETCH OF MANAVALA MAMUNIGAL

BY

**SRI S. SATYAMURTHI IYENGAR, GWALIAR**

ADAPTED FROM

THE TAMIL TEXT OF

**JAGADACHARYA. P. B. ANNANGARACHARYA SWAMI**

SRI RAMANUJAN PUBLICATION

Printed at

Granthamala Office,

L. KANCHEEPURAM.

[Price: **0-30**

ஸ்ரீ:

# ஐப்பசித் திருமூலத்தன்று ஸேவை சாத்துமுறைகள் செய்யவேண்டிய க்ரமம்.

(ஸேவை) திருப்பல்லாண்டு. திருப்பள்ளியெழுச்சி. திருப்பாவை. கண்ணிநுண் சிறுத்தாம்பு. கோயில் திருவாய்மொழி. இராமாநுச நூற்றந்தாதி. உபதேச ரத்தினமாலை. திருவாய்மொழி நூற்றந்தாதி. இவை ஸேவிக்கவேண்டியது.

(சாத்துமுறை) முதலில் திருப்பாவை சாத்துமுறை. சிற்றஞ்சிறுகாலே பாசுரமும், வங்கக் கடல்கடைந்த பாசுரமும். (திருவாய்மொழி சாத்துமுறை) சூழ்ந்தகன்றாழ்ந் துயர்ந்த .....அவாவறச் சூழரியை .....உயர்வறவுயர்நலம். (இராமாநுச நூற்றந்தாதி சாத்துமுறை) இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்......இன்புற்ற சீலத்தி ராமாநுச...... அங்கயல்பாய்வயல் தென்னரங்கன். பூமன்னுமாது. (உபதேச ரத்தினமாலை சாத்துமுறை) *பூருவாசாரியர்கள் போதமனுட்டானங்கள், கூறுவார் வார்த்தைகளைக்கொண்டு நீர்தேறி; இருள்தருமா ஞாலத்தே யின்பமுற்றுவாழும், தெருள்தருமா தேசிகனைச் சேர்ந்து. (2) *இந்தவுபதேச ரத்தினமாலைதன்னை* சிந்தைதனில் நாளும் சிந்திப்பார்—எந்தையெதிராச ரின்னருளுக்கென்றுமிலக்காகி* சதிராக வாழ்ந்திடுவர்தாம். மன்னுயிர்காளிங்கே மணவாள மாமுனிவன், பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை—உன்னிச் சிரத்தாலே தீண்டில் அமானவனும் நம்மைக் கரத்தாலே தீண்டல் கடன். இதற்குமேல் திருவாய்மொழி நூற்றந்தாதி சாத்துமுறை.

பல்லாண்டுபல்லாண்டு...ஸர்வதேசதசாகாலேஷு.

......நம:ஸ்ரீசைலநாதாய குந்தீநகரஜன்மநே.
ப்ரஸாதலப்த பரமப்ராப்ய கைங்கர்யசாலிநே.
ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்.
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம் முனிம்.

வாழிதிருவாய்மொழிப்பிள்ளை மாதகவால்வாழும் மணவாளமாமுனிவன்—வாழியவன் மாறன்திருவாய்மொழிப்பொருளை மாநிலத்தோர், தேறும்படியுரைக்குஞ்சீர்.

செய்யதாமரைத் தாளிணைவாழியே, சேலைவாழிதிருநாபிவாழியே
துய்யமார்பும் புரிநூலும் வாழியே சுந்தரத்திருத்தோளிணை வாழியே
சையுமேந்திய முக்கோலும் வாழியே கருணைபொங்கிய கண்ணிணை வாழியே
பொய்யிலாதமணவாளமாமுனிபுந்திவாழி புகழ்வாழிவாழியே.

அடியார்கள்வாழ அரங்கநகர்வாழ. சடகோபன்தண்டமிழ்நூல்வாழ—கடல்சூழ்ந்த மன்னுலகம்வாழ மணவாளமாமுனியே! இன்னுமொருநூற்றாண்டிரும்.

—விசேஷவாழித்திருநாமம்—

இப்புவியிலரங்கேசர்க்கு ஈடளித்தான்வாழியே. எழில்திருவாய்மொழிப்பிள்ளையிணை யடியோன்வாழியே.
ஐப்பசியில் திருமூலத்தவதரித்தான்வாழியே, அரவரசப்பெருஞ்சோதியனந்தனென்றும் வாழியே.
எப்புவியும் ஸ்ரீசைலமேத்தவந்தோன்வாழியே, ஏராருமெதிராசரெனவுதித்தான்வாழியே.
முப்புரிநூல்மணிவடமும் முக்கோல்தரித்தான்வாழியே மூதறிவன்மணவாளமாமுனிவன் வாழியே.

ஸ்ரீமதே ரம்யஜாமாத்ருமுநீந்த்ராய மஹாத்மநே.
ஸ்ரீரங்கவாஸிநே பூயாத் நித்யஸ்ரீர் நித்யமங்களம்.

---

